


உ

சிவமயம்.

அரிச்சந்திரபுராணம்

என வழங்கும்

# அரிச்சந்திரசரித்திரம்மூலம்.

[illegible] வீரகவிராஜரெனும்

ஆசுகவிராஜர்

திருவாய் மலர்ந்தருளியது.



சுத்தப் பதிப்பு.




இஃது

சென்னை

கொ. லோகநாத முதலியாரால்

தமது

மனோன்மணிவிலாசம் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.




1907.

இதன் விலை அணா-8.

# புத்தகவிளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| சப்தரிஷிவாக்கியம் 5500-பாடல் | 4 | 0 | 0 |
| தத்துவராயசுவாமி பாடுதுறை | 0 | 12 | 0 |
| தாயுமானசுவாமிபாடல் | 0 | 12 | 0 |
| வாசுதேவமனனம் | 1 | 0 | 0 |
| பஞ்சதசப்பிரகரணம் | 1 | 0 | 0 |
| வேதாந்தபோதினி | 0 | 8 | 0 |
| கட்டளைக்கோத்து | 0 | 8 | 0 |
| வள்ளலார் 20-சாஸ்திரம் | 1 | 8 | 0 |
| ஞானவாசிட்டவசனம் | 1 | 8 | 0 |
| பகவற்கீதைவசனம் தஞ்சைபதிப்பு | 1 | 4 | 0 |
| திருமூலர் திருமந்திரம் ௩௲-பாடல் | 1 | 8 | 0 |
| பிரபுலிங்கலீலை மூலம் | 0 | 8 | 0 |
| சேதுபுராணவசனம் படத்துடன் | 2 | 0 | 0 |
| திருவாதவூரர்புராணம் விருத்தியுரை | 1 | 0 | 0 |
| கந்தபுராணச்சுருக்கம் | 0 | 12 | 0 |
| அருணாசலபுராணம் | 0 | 8 | 0 |
| சானந்தகணேசபுராணம் உரை | 0 | 12 | 0 |
| சிவஸ்தலமான்மியச்சுருக்கம் | 0 | 12 | 0 |
| விஷ்ணுஸ்தலமான்மியச்சுருக்கம் | 0 | 8 | 0 |
| சேந்தன்திவாகரம் 12-தொகுதியும் | 0 | 10 | 0 |

*இவைதவிரத் தங்களுக்கு வேண்டும் பலவித புத்தகங்களும், வி. பி போஸ்டில் அனுப்பப்படும். அரைரூபாய் தொகைக்குக்குறைந்த புத்தகங்கள் வி. பி. போஸ்டில் அனுப்பமுடியாது. அரை அணா ஸ்டாம்பு அனுப்பிக்கிறவர்களுக்கு ஒரு கேட்லாக்கு இனாமாக அனுப்பப்படும். மற்ற விஷயங்கள் கேட்லாக்கில் கவனித்துப் பார்க்கும்படி கோருகிறேன்.*

# இச்சரித்திரத்தினுட்பிரிவு.



ஆக விருத்தம் ௧௨௧௫.

## விநாயகவணக்கம்.

பெரும்புகழ்பெறும்படியருந்துயர்கெடும்படி
    பிரியப்பலவரும்படியுளம்
விரும்பியதனம்பெற மிகும்பெறுபதம்பெற
    விளங்கியதவஞ்செயநெடும்
கரும்பவல்பெரும்பயறருங்கனிரசங்கொடு
    கடாந்ததெனவந்தருள்புரிக்
கருங்கரிமுகன்சிறுசதங்கையொடுகிண்கிணி
    மலாக்கிரபதம்பெறலவனே.

---

உ

கணபதிதுணை.

# அரிச்சந்திரசரித்திரம்.

## பாயிரம்.

### கடவுள்வணக்கம்.

கணபதிகாப்பு.

பரிதிதன்மரபில்வருபார்த்திவன்
விரிதரும்புகழ்மேவரிச்சந்திரன்
சரிதமன்னுந்தமிழ்க்குத்துணைசெயக்
கரிமுகன்பதங்கைதொழுதேத்துவாம்.

பரமசிவம்.

சீர்கொண்டசெழுங்கமலத்திசைமுகனு
நெடுமாலுஞ்சிவனுமென்னப்
பேர்கொண்டமூவுருவுமீருருவு
மோருருவாய்ப்பிறங்குந்தொல்லை
நீர்கொண்டவண்டத்துந்தாவரத்துஞ்
சங்கமத்துநிறைந்துநின்றோன்
றூர்கொண்டதாளிணைகடமைக்கொண்ட
வன்பினெடுதலைமேற்கொள்வாம். (க)

புகலரியசதுமறையாய்மறைப்பொருளா
யுபநிடத்தாய்ப்பூதமைந்தாய்

அகிலமுமாய்மன்னுயிராயணுவிலணு
வாயவற்றினகமாய்மேலாய்ப்
பகலிரவென்றறியாதபராபரமா
யறுசமயப்பகுதியாகிச்
சகலமுமாய்நிட்களமாய்நின்றோன்றன்
செழுங்கமலசரண்புக்கேமால். (உ)

ஆதியாயண்டபகிரண்டத்து
மப்புறத்துமடங்காதற்ற
நீதியாய்மணியொளியும்பாற்சுவையு
மெனவனைத்துநிறைந்துநின்றம்
பாதியாயொன்றாகியருவாகி
யுருவாகிப்பரந்துமல்குஞ்
சோதியான்முடிசூட்டத்தனதுதிரு
வடிசூட்டத்துணிந்தாரியோன். (ங)

உமாதேவியார்.

சனத்தாள்வெங்கயமுகனுங்கந்தனுஞ்சம்
பந்தனும்பாலுண்டகும்ப
தனத்தாளேயறம்வளர்த்தகரத்தாளே
திரிபுரங்கடழலாய்வேவச்
சினத்தாளேசிறியோர்கள்செய்தபிழை
பொறுத்திரக்கஞ்செய்யுஞ்செய்ய
பனத்தாளேநின்கமலமலர்த்தாளே
யென்றலைமேல்வைத்தாள்வாயே. (ச)

விநாயகக்கடவுள்.

ஐயாம்பன்முகத்தானைமதலியையோ
டத்துரந்துவாழ்வதென்றும்

மெய்யாம்பன்முகத்தாலும்வேதத்து
மாகமத்தும்விரித்ததென்றே
மொய்யாம்பன்முகத்தானைப்பொடியாகப்
பொருதுவினைமுடித்துநீண்ட
கையாம்பன்முகத்தானைக்காலையினு
மாலையினுங்கருதுவோர்க்கே. (௫)

முருகக்கடவுள்.

பெருமையிலுங்கதிமையிலுமுதிமையிலு
முகிலெனவேபிறங்குமேனிக்
கருமையிலுங்கடுந்தறுகட்செம்மையிலும்
வெம்மையிலுங்கலங்கேன்காலா
வருமையிலும்வெள்ளாட்டுப்பால்போது
மெனப்பிறரையெண்ணேனன்பால்
வரு*மையிலும்பொருமையிலும்வரதன்மகன்
குகனுமென்றன்மனத்திலுண்டே. (௬)

காளி.

வேறு.

அந்தரியாமளையமலையாலகாலி
யம்பிகைமாதரிகௌரியாளிபூர்தி
யந்தரிநான்முகன்வணங்குமலர்த்தாட்சூரி
வைரவிதாருகவைரிமதங்கிநீல
கந்தரியோகினிசூலிநீலிநாக
கங்கணிசங்கரிவிமலைகாளிபால
சுந்தரிசாமுண்டிதிரிசூலிகோலத்
துணையடியென்முடிமேற்சூடினேனே. (எ)

* மயில் அயில் - மையில் பயில் எனப் போலியாய்வந்தன.

# அரிச்சந்திரபுராணம்

## கலைமகள்.

மருப்பவளவாக்குவிந்துதிரண்டுமுத்து
வடமணிந்துகுடமெனவேவயங்கிச்செம்பொற்
பொருப்பவளவாவளர்ந்துததும்பிவிம்மிப்
புடைபரந்துகளபநறும்புளகக்கொங்கைத்
திருப்பவளவாயாளைத்தேனைமானை
செழும்படிகநிறத்தாளைத்திகழ்வெண்கஞ்சத்
திருப்பவளையுலகேழுமீன்றதாயை
யெனதிதயகமலத்தேயிருத்தினேனே. (அ)



## அவையடக்கம்.

### வேறு.

நீர்கொள்வார்பாலோடுநேருற்றுற்
பதர்கொள்வார்நெல்லோடுற்றால்
நார்கொள்வார்பூவுற்றால்வேர்கொள்வா
ரதிற்சிறிதுநறையுண்டாயின்
சீர்கொள்வார்புன்சொல்லுஞ்செஞ்சொல்லுஞ்
சேர்ந்தொன்றிற்சேராப்புன்சொல்
யார்கொள்வாரென்பதுசற்றறியாமற்
சிறியேனுவகைசக்கின்றேனே. (க)

புருடனூர்க்கேந்திழையார்பொருளுரைப்ப
தெனப்பிறர்தம்பொருளேவெளவுந்
திருடனூர்மேலவருக்கறமுரைப்ப
தெனச்சிறியதெள்குதுள்ளிக்
கருடனூர்க்குப்பறவைகற்பிப்ப
தெனவனந்தங்கண்ணுளார்க்குக்

குருடனூர்வழிகாட்டலெனப்பெரியோர்
முன்சிறியேன்கூறலுற்றேன். (௧0)

## ஆக்கியோன்பெயர் முதலியன.

தண்கவிகைக்குரிசிலரிச்சந்திரன்றன்
சரிதமதைத்தாரணியோர்விருப்பமெய்த

வடமொழியுந்தென்மொழியின்வழுவிலாத
வெண்கவியுங்கண்டரங்கின்மாதராடல்
விதங்கேட்டுமழையெனவேவெருண்டுசோலைக்
கண்கவிகள்குதிபாயுநெல்லூர்வீர
கவிராசனேவிருத்தக்கவிசெய்தானே. (௧௧)

விதியினாசிழந்தவரிச்சந்திரன்றன்
வியன்கதையாம்வெண்கவியைவிருத்தமாக்கி
அதிவிதமாங்கலியுகத்தில்வருசகாப்த
மாயிரத்துநானூற்றுநாற்பத்தாறில்
சதுமறைதேர்புல்லாணித்திருமான்முன்னே

கதிதருசீர்நெல்லூர்வாழ்வீரராச
கவிராசன்கவியரங்கமேற்றினனே. (௧௨)

பாயிரமுற்றுப்பெற்றது.

---

# நாட்டுச்சிறப்பு.

மூன்னாறறியாப்பிறவிக்குருடானமூடன்
தன்னாற்றொருசாகரத்தினிடஞ்சாற்றுமாபோல்
என்னாலறிதக்கதன்றெனினுமன்னர்மன்ன
னன்னாட்டணியான்சிலவல்லநடத்தலுற்றேன். (௧)

தட்பாற்கடலாரமுதங்கெழுமித்தழைத்து
நட்பாற்புகுந்தாலெனவந்துவர்வேலைநண்ணி
உட்பாற்புனலுண்டெழுந்தோங்கியகாளகூடம்
விட்பாற்பரந்தாலெனமேகமெழுந்ததன்றே. (௨)

அடியும்முடியுந்தெரியாதிருண்டண்டமெங்கும்
கொடியுங்குடையுமெனமாமுகிற்கூட்டமீண்டிப்
படியும்விசும்பும்பகைத்தாலெனப்பாரவிற்கோத்
திடியுந்துளியுங்கணையாப்பொரிதெய்ததன்றே. (௩)

மீனந்திகழ்வேலையிற்றோன்றியதென்னவிண்ணோர்
தானந்திகழ்*தாத்திரியைப்பெருந்தாழியாக்கி
வானந்தனைநெய்யரிவட்டகையாக்கிவிட்ட
பானந்தனையொத்து விழுந்ததுமாரிபம்பல். (௪)

விண்ணிற்பொழியுங்கணைமாரிவிழுந்துதைத்த
புண்ணிற்பொழியுங்குருதித்திரள்போலவெங்கு
மண்ணிற்பொலியிந்திரகோபமலிந்துதோன்றக்
கண்ணிற்கமையாப்புனல்வந்துகலித்ததன்றே. (௫)

கள்ளங்கொலைகட்புலைகாமமென்றைந்துமற்றோர்க்
குள்ளந்தெளிந்தோர்தருமுத்தமதானமென்னப்

---

தாத்திரி - பூமி.

பள்ளந்திடர்மால்வரைகானகப்பக்கமெங்கும்
வெள்ளம்பெருகிப்பாந்தோடிவிரைந்ததன்றே. (சு)
கருவிக்கணமாமழைபெய்துகலித்துவெள்ளம்
பரவிப்பலகோடிருப்பதக்கோடொடித்தாங்
கருவித்திரள்புக்கடங்காதிரைத்தோடியார்த்துச்
சரயுத்தனிலேதலைவைத்துச்சரித்ததன்றே. (எ)

ஆரங்குளவஞ்சியசோகுபலாசந்தேவ
தாரம்வகுளங்கடுச்சண்பகஞ்சாதிகன்னி
காரஞ்சுரபுன்னைகடம்புகர்ச்சூரம்வேய்கர்ப்
பூரம்பனையோடுபுரண்டிடப்போயதன்றே. (அ)

ஏலந்தகரமிலவங்கமரித்திரந்தக்
கோலம்*வசவாசிசெங்குங்குமங்கோட்டம்வாரித
தாலம்பதினாலுநடுங்கிடச்சார்ந்தவூழிக்
காலந்தனின்மோதுகருங்கடலொத்தம்மா. (கூ)

நீலம்வைரம்வைடூரியமித்திலஞ்செங்
கோலந்திகழுந்துகிர்கோமளம்பத்மராகம்
தாலந்தனில்வந்ததொரிந்திரசாபமென்ன
ஓலந்திகழாற்றினெழுக்கெறிந்தோடிற்றன்றே. (கய)

வேறு.

ஆடுநாகமுமத்திகளும்வரை
யாடுநாகமுமத்திகையேபுண
லோடுநாகமுழுற்றிடலானதி
யோடுநாகமுமேர்திமையொத்ததே.

இ-ள். ஆடுநாகமும் - படமெடுத்தாடுகின்ற பாம்புகளும், அத்திகளும் - எலும்புகளும், வரையாள் - மலைமகள், தன் - பாகியிற்

* வசவாசி - வசம்பு.

கலந்த, ஆகமும் - திருமேனியும், அத்தி - அப்பாதி வடிவினளது, கை - கையிலேபிறந்த, புனலோடு - கங்கையோடு, நாகமும் - புன்னை மலரும், உற்றிடலால் - பொருந்துதலால், ஆடுநாகமும் - ஆடுகின்ற வானரங்களும், அத்திகளும் - அத்திமரங்களும், வரையாடும் - வருடைகளும், நாகமும் - யானைகளும், அத்திகையே - அவைகொண்டு போகப்பட்டதிசையே, புனல் - நீரின்கண்ணே, ஓடு - ஓடுகின்ற, நாகமும - பாம்புகளும், உற்றிடலால் - பொருந்துதலினலே, நதி-சரயுநதியானது, ஓடும் - கபாலத்தையும், நாகமும் - மேருவையும், ஏந்தியை - ஏந்தியகடவுளை ஒத்தது -, எ-று. * கடவுண்மேற் சொல்லுங்கால் வரையாடு நாகமெனற்பாலது அடிமடக்குஞ் சிலேடையுமாதலின் ஒலிவடிவிணைப்புமைப்பற்றி வரையாடு நாகமெனப் பட்டது. (கக)

அம்மடங்கலுமாழிகிளர்ந்தெழு
மம்மடங்கலுமொப்பதையன்றதின்
மும்மடங்கலும்வெல்லுமுதிர்கய
மும்மடங்கலுங்கொண்டுமுடுகிற்றே.

இ-ள். அம்மடங்கலும் - நீர்முழுவதும், ஆழிகிளர்ந்தெழு அம்மடங்கலும் - கடலின்கண்ணே செழித்தெழாநின்ற அழகிய யாளித் திரையையும், ஒப்பதை அன்று - நிகர்வதையன்றி, அதின் - அதினும், மும்மடங்கலும் - மூன்றுபங்கும், வெல்லும் - வெல்லாநின்ற, முதிர் கயமும் - பருத்தானையையும், மடங்கலும் - அதனைவெல்லுஞ்சிங்கத்தையும், கொண்டு - தன்கண்ணே சேர்த்துக்கொண்டு, முடுகிற்ற - விரைந்துசென்றது எ-று. அடங்கலு முடுகிற்று எனக் கூட்டுக. (கஉ)

முறியுமாறந்தருவுமுதல்கெட
முறியுமாறந்திமுற்றிநன்மான்மத

வெறியுமாறடியுங்கொடுவேகமும்
வெறியுமாறிலாவெங்களிறொத்ததே.

இ-ள். முறியும் - தளிர்களும், மாறும - வளர்களும், தருவும் - மரங்களும், முதல்கெட - அடியோடுகெட, முறியுமாறு - சிதையும்படி, உந்தி - வீழ்வித்து, முற்றி - சூழ்ந்து, நல் - நல்ல, மான் மத வெறியும் - மிருகமத நாற்றத்தையும் பெரியமதசல நாற்றத்தையும், மாறடியும் - மாறிவைக்கப்பட்ட அடிகளையும், கொடு - கொண்டு வருதலால், வேகமும் - விரைவும், வெறியும் - மயக்கமும், மாறிலா - நீங்காத, வெம்களிறு ஒத்தது - வெவ்வியயானையையொத்தது எ-று.

வாரணத்தடங்கோடும்வளைகளும்
வாரணத்தடங்கோடும்வரன்றியே
ஆரணத்துறையந்தரியுண்மகிழ்ந்
தாரணத்துறையொத்ததவ்வாறரோ.

இ-ள். அ ஆறு - அந்தச்சரயுநதி, வாரணத்து - யானைகளுடைய, அடும் - கொலைசெய்கின்ற, அம் - அழகிய, கோடும் - தந்தங்களையும், வளைகளும் - சங்குகளையும், வார் - நீட்சி, அண் - பொருந்திய, அ தடங்கோடும் - அப்பெரியவூதுகொம்புகளையும், வாரணம் - தடையாகிய, தடங்கோடும் - தடாகக்கரைகளையும், வரன்றி - வாரிக்கொண்டு, ஆரணத்து - வேதத்தின்ஞானபாகையிலே, உறை - தங்கிய, அந்தரி - பத்திரகாளி, உள்மகிழ்ந்து - திருவுளங்களிகூர்ந்து, ஆர் - பொருந்திய, ரணத்துறை - போர்க்களத்தை ஒத்தது எ-று. ஆறென்பதன் ரகரமுதலாகாதகரமுதலாதலின்கெட்டது, அகர முத னகரவிறுவா யென்பதுபோல். (கசு)

துடிமருங்கிற்கொடிச்சியர்தோயவே
துடிமருங்கிற்பரப்பிச்சுழித்துராய்க்

கொடிபுனைந்தகுகன்கழறூழ்ந்துபூங்
கொடிபுனைந்தகுறிஞ்சிகடந்ததே.

இ-ள். துடிமருங்கிற்கொடிச்சியர் - உடுக்கைபோ லிடையை யுள்ள குறமகளிர், தோய - மூழ்க, துடி - ஏலச்செடிகளை, மருங்கில் பரப்பி - அருகே பரப்பிக்கொண்டு, சுழித்து-சுழிகளையுடையதாய் உராய் - உராய்ந்து, கொடிபுனைந்த குகன்கழல்தாழ்ந்து - வெற்றிக் கொடிதரித்த முருகக்கடவுளினடிகளை வணங்கி, பூங்கொடி - மலர்க் கொடிகளும், புல் - புற்களும், நைந்த-தன்னாலே சிதைந்த, குறிஞ்சி- மலைச்சார்பை, கடந்தது - கடந்துசென்றது எ-று. * புல் - புலியு மாம் அவ்வாறென்னும் எழுவாய் வருவித்துக்கொள்க. (௧௫)

வீயும்வேங்கையுமந்தியுமேதகு
வீயும்வேங்கையுமந்தியும்வீழ்பலாக்
காயும்பாலையில்கைக்கயமுங்கொடு
காயும்பாலையில்வந்துகலந்ததே.

இ-ள். வீயும் - பறவைகளும், வேங்கையும் - புலிகளும், மந்தியும் - குரங்குகளும், மேதகுவீயும் - மேம்பாடுபொருந்திய மலர்க ளும், வேங்கையும் - வேங்கைமரங்களும, மந்தியும் - வண்டுகளும் வீழ்பலாக்காயும்-விரும்பப்பட்ட பலாக்காய்களும், பால்-தன்பக்கங் களில், அயில் - நீருண்கின்ற, கை - துதிக்கையையுடைய, கயமும்- யானைகளும், கொடு - கொண்டு, காயும் - சுடுகின்ற, பாலையில்- பாலைநிலத்தில், வந்துகலந்தது - வந்துகூடிற்று எ-று. * அயில்- ஐயிலெனப்போலியாய்வந்தது. (௧௬)

தேருமாறுணராச்சினவேடர்பெய்த்
தேருமாறமுட்டேறரும்பாலையில்
ஊருமாதரியாரையுமூந்திமான்
ஊருமாதரிதாடொழுதுற்றதே.

இ-ள். தேரும் ஆறு - தெளியும்வழியை, உணரா - அறியாத

சினவேடர் - கோபத்தையுடைய மறவர், பேய் தேரும் - கானலை யும், ஆறும் - வெள்ளத்தையும், உள் - உள்ளே, தேறரும் - பகுத் தறிதல்கூடாத, பாலையில் - பாலைநிலத்தில், ஊரும் - அங்குள்ளவூர் களையும், மாதரியாரையும் - மகளிர்யாவரையும், உந்தி - தள்ளிக் கொண்டு, மான் - கலைமானை, ஊரும் - நடத்துகின்ற, மாதரி - பத் திரகாளியினது, தாள் தொழுது - தாளைவணங்கி, உற்றது-பொருந் திற்று எ-று. (கஎ)

இறவங்கோங்கமிருப்பையின்பூந்துணர்
இறவங்கோங்கவெரிமின்மினியெனப்
புறவமேய்ந்தசுரம்விட்டுப்போய்ச்செழும்
புறவமேய்ந்ததுபூம்புனலாறரோ.

இ-ள். அம்கோங்கும் - அழகிய கோங்கினுடையவும், இருப்பை யின்பூந்துணர் - இருப்பையினுடையவும் பூங்கொத்துகள், இற - கெட வும், இறவு - இறாமீன்கள், அங்கு ஓங்க - மேலெழவும், எரி - நெருப்பு, மின்மினி என - மின்மினிபோற்றோன்றவும், புறவமேய்ந்த - புறாக் கள்மேய்ந்த, சுரம்விட்டுபோய் - பாலைநிலத்தைவிட்டுப்போய், செ ழும் - செழித்த, புறவம் - முல்லைநிலத்தில், எய்ந்தது - பொருந்தி யது, பூம்புனல் ஆறு - அழகியநீரையுடைய ஆறானது எ-று. (கஅ)

ஆடுமாசுரையாவிடையாழநீர்
ஆடுமாசுரையாவிடையோடவே
கோடுகுத்திக்குலைத்ததுகொன்றையின்
கோடுகுத்திக்குலைத்துணர்வாரியே.

இ-ள். ஆடும்-முழுகுதற்குரிய, மாசு உரையா - குற்றஞ்சொல் லப்படாத, இடையாழம் - நடுவாழத்தையுடைய, நீர் - நீரானது, ஆடும் - ஆடுகளும், மா - பெரிய; சுரை ஆ - கறவைப்பசுக்களும், விடை - எருதுகளும், ஓட - அஞ்சியோடும்படியாக, கொன்றையின்-

கொன்றைமரங்களின், கோடு - கிளைகளை, உகுத்து - முறித்து, இருலை - இக்காய்க்கொத்துகளையும், துணர் - பூங்கொத்துகளையும், வாரி - சேர்த்துக்கொண்டு, கோடு - கரைகளை, குத்தி - மோதி, குலைத்தது - அழித்தது எ-று. (கக)

அண்டர்தோயலைவாரிமராவழீஇ
அண்டர்தோயலைவாரியிற்சார்ந்தணி
கொண்டலைத்தரிக்குங்குருந்திற்கலை
கொண்டலைத்தரிக்கொத்தகுடிஞையே.

இ-ள். அண்டர்-ஆயாது, தோயலை - தயிரை, வாரி-கொள்ளையிட்டு, மரா-மராமரத்தை, அழீஇ - அழித்து, அண்டர்-தேவர்கள், தோய் - சூழ்கின்ற, அலை - அலைகளையுடைய, வாரியில்-கடலின் கண்ணே, கடல்போல் - சமுத்திரம்போல, சார்ந்து - கூடி, அணி- அலங்கரிக்கப்பட்ட, கொண்டலை-மேகத்தை, தரிக்கும்-தரிக்கின்ற, குருந்தில்-குருந்தமரத்தில், கலைகொண்டு - ஆய்ச்சியராடைகளைக் கொண்டு, மான்களைக்கொண்டு, அலைத்து - அலைசெய்து, அரிக்கு- திருமாலுக்கு, ஒத்த - ஒத்தது, குடிஞை - அவ்வாறுனது எ-று.
* ஒத்ததென்பது - கடைகுறைந்துநின்றது. (உ0)

உறவணங்குமராவுழுழக்கிவான்
உறவணங்குமராவுமொசித்தது
மறைவணங்குமரியையவணங்கல்போல்
மறைவணங்குமரியையவணங்கியே.

இ-ள். உற-மிகவும், அணங்கும்-வருத்துகின்ற, அராவும்-பாம்புகளையும், உழக்கி - வருத்தி, வானுற-மேகந்தவழ, வணங்கும்-வளைந்திருக்கின்ற, மராவும் - மராமரங்களையும், ஒசித்தது-ஒடித்தது-ஒடித்தது, மறைவு - மறைதல், அண் பொருந்திய, நம்-நமது, குமரியை- கொற்றவையை, வணங்கல்போல் - முன்பாலையில் வணங்கினமை

போல, மறை-வேதத்தினாலே, வணங்கும்-வணங்கப்பட்ட, அரியை-திருமாலே, வணங்கி-முல்லையில்வணங்கி என-று. (உக)

ஆவியன்னபெடைகளுமன்றிலும்
தூவியன்னமுந்துன்னியநாரையும்
மேவியின்பம்விடாதநெடும்புனல்
வாவிசூழுமருதம்புகுந்ததே. (உஉ)

வாழைபூகமகிழ்மருதாசினி
தாழைகேசரஞ்சம்பகஞ்சன்மலி
ஞாழன்மாதுளைநாகமலிந்ததண்
சூழல்சேரத்தொலைத்ததுதோயமே. (உரு)

பால்கடோறும்பரந்துசெறிந்தவக்
கால்கடோறுங்கலந்தகடும்புனல்
வால்கடோய்மகிடம்புகவான்படச
சேல்கள்பாயுஞ்செழுந்தடம்புக்கதே. (உச)

வாவிசேரங்ரப்பிமதகினில்
தாவிநீள்கரைசாடியுடைத்தலை
நீவிவண்டல்கொழித்துநெடும்புனல்
பாவிநீலவயலிற்பரந்ததே. (உ௫)

வரம்புடைத்துக்கரைத்துமடுக்களின்
குரம்புடைத்துக்குமுதமுங்கஞ்சமும்
கரும்புமிஞ்சியுமஞ்சளுங்கட்டழித்
தரம்பையோங்குபடப்பையழித்ததே. (உசு)

எரிசேரவுடைத்தழித்தின்கனி
வாரியோடிவளம்பயின்மள்ளர்தஞ்
சேரிசேரவழித்துச்செழும்புனல்
பேரியாறுபரந்துபெருகிற்றே. (உஎ)

# நாட்டுச்சிறப்பு.

நாடுதோறுமலிந்தநறும்புனல்
ஓடுமோதையுமோங்குதடங்கரை
சாடுமோதையுந்தண்டலைவண்டுகள்
பாடுமோதையுமெங்கும்பரந்தவே. (௨௮)

கள்ளலம்பியவாயுங்களிமகிழ்
உள்ளலம்பியவுள்ளமுந்தோன்றவே
புள்ளலம்பியபொய்கைக்கரையெலாம்
மள்ளர்வந்துநெருங்கிமலிந்தனர். (௨௯)

கொட்டுவாங்கிக்குதித்தரிவப்புமண்
வெட்டுவார்சுமப்பார்மிதித்துக்கரை
கட்டுவார்வன்கடிப்பெடுத்துக்கிணை
தட்டுவார்துரகங்கொடுதாங்குவார். (௩௰)

முழவெழும்படிமொய்ச்சிறையிற்கறங்
கெழுவெருண்டயலன்னமிருந்திடப்
பழவரம்புதுக்கிப்பகடுசேர்த்
துழவரெங்குமுழுமொலியோங்குமே. (௩௧)

வலம்புரித்திரள்வால்வளைவெண்சலஞ்
சலம்பிளப்பதாளம்பிளப்பவுற்
பலம்பிளப்பப்பதுமம்பிளப்பமீன்
குலம்பிளப்பக்கொழுச்செலுஞ்சாலெலாம். (௩௨)

இரும்பொடித்தனவேரடிக்கின்றகோல்
அரும்பொடிப்பொடியாகவுரப்பினீள்
கரும்பொடித்துக்கடாவடித்தெங்கணும்
பரம்படிப்பவர்பற்பலகோடியே. (௩௩)

கரும்புங்காவியுங்கஞ்சமுமாம்பலும்
அரும்புஞ்சேம்புமலவனுமாமையும்

கரும்புநந்துஞ்சுரிமுகமுஞ்செழும்
பரம்புதோறும்படிந்துசெறிந்தவே. (௧௪)

சாலெலாந்தரளத்திரளைமள்ளர்தங்
காலெலாங்கமலக்கடிகார்க்கடா
மேலெலாம்பொழிவேழத்தின்சாறதன்
வாலெலாம்பலமாமலர்மன்றலே. (௧௫)

போரடித்தவிதியவன்போன்றமூன்
றாரடித்தவனார்கியென்றெண்ணியே
ஏரடிப்பவிருசிறையுங்கொடு
*மாரடித்திரியும்மடவன்னமே. (௧௬)

நன்னுரைத்தடநாண்மலர்தாதுறீஇப்
பன்னுரைத்தபகட்டின்பதக்குளம்
பென்னுரைப்பதிடமறவெங்கணும்
பொன்னுரைத்தநிறத்தகற்போன்றவே. (௧௭)

தொக்கவேதியர்க்குந்துறவோர்கட்கும்
தக்கதானந்தருபவர்போலவே
பக்கநோக்கிப்பலிப்பறிந்தெங்கணும்
மிக்கசெந்நெலும்வெண்ணெலும்வித்தினார். (௧௮)

இரவுபாயவிருங்கதலிக்கனி
மறவுபாய்வருக்கைக்கனிமாங்கனி
பிறவும்வாய்விண்டுபீறிப்பொழிந்திடு
நறவுபாய்ந்திடநாறுவளர்ந்தவே. (௧௯)

சேம்புதோன்றுஞ்செழுந்தடத்தின்கரைத்
தூம்புதோன்றியசோர்புனரோன்றுவ

* மார்பு - மார் எனவிகாரமாயிற்று.

காம்புதோன் றுவரைப்புழைக்கட்பெரும்
பாம்புதோன் றவபோன் றனபாலெலாம. (௬௰)

இரவைவென் றவிருண்டசெழுங்குழல்
அரவைவென் றவகலணியல்குல்வெகு
கரவைவென் றகயற்கட்கடைசியர்
குரவைவென் றகுரைகடலார்ப்பையே. (௬௧)

செவ்வணந்திகழ்சீறடிமென்முகங்
கைவ்வணஞ்செழுந்தாமரைகாவியின்
அவ்வணம்விழிவாயரக்காம்பன்மற்
றெவ்வணங்களைகொய்குவரேழைமார். (௬௨)

வயலின்மென்களைமாய்க்குங்கடைசியா
சயநெடுங்கண்சலிலத்திற்றோன் றலால்
மயல்விளைந்துமயங்கிடுமள்ளர்தாம்
கயல்களென் றயலிற்பறிகட்டினர். (௬௩)

சேலிரும்புனற்கேள்வனைச்சேர்ந்தபின்
சூலிருந்துதுவண்டலைந்தீன் றுமெயப்
பாலிருந்துபசந்துபழுத்தசெஞ்
சாலிகற்பினர்போற்றலைசாய்த்தவே. (௬௪)

தோட்டுவார்நறைசூழ்வயல்சோர்வறீஇப்
பூட்டுவார்கதிர்ப்புள்ளங்கள்சூற்சங்கில்
தீட்டுவார்மலர்ச்செந்திருகாணமுன்
நீட்டுவாரெனநெல்லரிவார்களே. (௬௫)

சேற்றுவார்கதிர்சேரக்கொணர்ந்துவைத்
தாற்றுவார்களத்தாற்றினடைந்துபோர்
ஏற்றுவார்பகடேற்றிமிதித்தநெல்
தூற்றுவார்குவிப்பார்சமப்பார்களே. (௬௬)

பகடுமெட்டறப்பூட்டிப்படுத்தநெல்
சகடுமுட்டவிட்டேர்ந்துதத்தங்குல
மகடுமக்களும்வைகுறும்வாழ்மனை
முகடுமுட்டநிறைப்பர்கண்முற்றுமே. (சஎ)

நாடுதோறுமிவ்வாறுநடப்பன
காடுதோறுங்களிமயிலாடுவ
வீடுதோறுந்திருவிளையாடுவ
கூடுதோறுங்கருங்குயில்கூவவே. (சஅ)

பெடைகிடப்பவும்பிள்ளைகிடப்பவும்
இடைகிடப்பவிளவனச்சேவல்கள்
மடைகிடைக்கும்வளைமுத்தையண்டமென்
றடைகிடப்பனவன்னப்பெடைகளே. (சகூ)

சாயெலாம்பருவச்செழுஞ்சாலியின்
காயெலாந்தின்றுகன்னற்படப்பையுள்
மேயலாவிளமேதிகளின்கடை
வாயெலாமுத்துமாலைகளாலுமே. (ருo)

மட்டிலாமடவார்குடைவாவிவிட்
டெட்டியன்னமிரிந்துபரக்கவாய்
விட்டிரங்கிடுபார்ப்பினைமென்மலர்
தொட்டிலாட்டித்திரைகடியிற்றுமால். (ருக)

பள்ளமேற்பனசக்கனியூறலவ்
வெள்ளமேற்கமலத்தலர்மேல்விழ
உள்ளமேற்கமுனுண்டவவர்விறல்
வள்ளமேற்பனபோல்வனவாவியே. (ருஉ)

பூகத்தின்செழும்பாளையைப்புன்கவி
நாகத்தின்படமென்றடுங்கியே

பாகத்திற்றின்றுவிட்டபலாக்கனி
மேகத்திற்புரைவெங்கதிரொக்குமே. (௩௩)

சேருபாய்மலர்த்தேனொடுதீங்கனி
ஊறுபாய்வவுமொண்கரும்பட்டதீஞ்
சாறுபாய்வவுந்தத்தமிற்கூடியே
ஆறுபாய்வனவங்கங்கணந்தமே. (௩௪)

மன்றறங்குமலர்களின்மேய்ந்திளந்
தென்றல்வந்தவண்சிந்தியதாதுகள்
குன்றின்வீழ்பொன்மழைக்குழுவென்னவே
முன்றிலும்மணிமாடமுமொய்க்குமே. (௩௫)

உகலரும்புனத்திற்கிளியோச்சுவார்
அகல்கவண்கொண்டெறியுமராமணி
பகல்விழுங்கணமொப்பனபாரெலாம்
குகனிருந்தசெழுந்தண்குறிஞ்சியே. (௩௬)

நெடியநெய்தலினித்திலவண்டலில்
கொடியகாதலிற்கூடலிழைத்திடும்
கடியநீலக்கருங்கணுளைச்சியர்
மடியிலேறிவளைகண்முத்தீனுமே. (௩௭)

கலையளக்குங்கருங்கணுளைச்சியர்
புலையளக்குநறைக்கும்பொருந்தியே
விலையளப்பனவெண்முத்தமேயற
னிலையளக்கும்பரதவர்நெய்தலே. (௩௮)

நிலம்விளக்கிடுநித்திலநீலவுற்
பலம்விளக்கிடுபைம்புனல்பண்பினன்

னலம்விளக்கிடுநல்லவர்வாய்மொழி
குலம்விளக்கிடுங்கோசலநாடரோ. (௫க)

நாட்டுச்சிறப்பு முற்றிற்று. ஆ எரு.

# நகரச்சிறப்பு.



மகரதோரணவாயிலுநாஞ்சிலும்
சிகரமாமதிலுஞ்செறிபோகம்
சகரர்வான்புகழ்சாற்றுமயோத்திமா
நகரமேன்மைசிறிதுநடத்துவாம். (க)

மாடமாளிகையும்மடப்பள்ளியும்
கூடகோபுரமும்பெருங்கோயிலும்
ஆடரங்குமணியறச்சாலையும்
பாடலங்கரிவைகியபந்தியும். (உ)

மாரனன்னவர்மாமயிலன்னவர்
தாரடர்ந்தபுயமுந்தனங்களும்
நேரடர்ந்துநெருக்கலின்வீழ்ந்தபொன்
ஞாமின்னுவவாவணவீதியே. (ங)

அன்புதங்குமனத்தரிச்சந்திரன்
றன்புகழ்கொழுந்தோங்கித்தழைத்தல்போல்
பொன்புணர்முலையார்புலர்த்தும்மகி
லின்புகைசென்றெழுமுகடெங்குமே. (ச)

சோனையார்ப்பெனவூழிதொடர்ந்தெனச்
சேனையார்ப்பனதேரொலியார்ப்பன
வானையார்த்துறும்வாம்பரியார்ப்பன
ஆனையார்ப்பனவாவணவீதியே. (௫)

வேதவோதைவியன்கலையோதையின்
கீதவோதைகிளையோதையாடுவோர்
பாதவோதைபரிபுரத்தோதையாழ்
நாதவோதைநடப்பனநாளுமே. (௬)

இள்ளைபாடுவகீதங்கள்சாரிகைப்
பிள்ளைபாடுவவேதம்பிரமணர்
கொள்ளைபாடுவரின்னிசைக்கோதையர்
வள்ளைபாடுவர்மன்னவன்வண்மையே. (௭)

கூடலோங்குவகோதையர்யாவர்க்கும்
ஊடலோங்குவதவ்வையொருத்திக்கும்
ஆடலோங்குவகண்ணுளர்க்கன்றம்
பாடலோங்குவசித்தலும்பாணர்க்கே. (௮)

பொற்பராககர்ப்பூரபராகச்செம்
பற்பராகபயோதரவேசையர்
விற்பராகமிராவிடியன்முதல்
கற்பராகமநாடககானமே. (௯)

எம்பினண்ணியிருந்தனயாவையும்
வம்பினென்னவழைப்பதுமானவே
விம்பிகின்றவியன்கொடியெங்கணும்
தம்பினின்றுபடங்கித்தழங்குமே. (௧௦)

முன்னைமாதவத்தான்முழுதுக்குநல்
லன்னையாமரிச்சந்திரன்றன்னைமா
லென்னமேல்வளைந்தீண்டியபாற்கட
றன்னையொத்ததவளக்கொடிகளே. (௧௧)

திருகநோக்கியற்சித்திரப்பாவையை
அருகநோக்கியவன்பரைவல்லியர்

உருகநோக்கியவுடலினைக்குயிர்
பருகநோக்குஞ்சமனைப்பழிக்குமே. (கஉ)

முரணெடுங்குலிசத்தவன்மூண்டபோர்க்
காரணமக்கரிச்சந்திரனுமெனச்
சரணடைந்ததடவரையீட்டம்போல்
திரணெடும்பரித்தேரணிநிற்குமே. (கங)

ஏமசாலையுமின்னிசைச்சாலையும்
ஓமசாலையுடனறச்சாலையும்
ஆமசாலையுந்தோகையர்மாதவக்
காமசாலையுமேகணக்கில்லவே. (கச)

அறமிருக்குமனத்திலனைவர்க்கும்
திறமிருக்கும்புயத்திற்செழுஞ்சுடர்
நிறமிருக்கும்படையின்சணிக்கமின்
மறமிருக்குமடந்தையர்கண்ணினே. (கரு)

தொட்டுமன்னன்சுடர்முடிசூடிய
மட்டுமேக்கமவ்வாணகர்க்கில்லையூண்
அட்டுண்பாரன்றியாதுலரின்மையால்
இட்டுணக்குறையென்பதொரேக்கமே. (கசு)

சுற்றிடுங்கொலைக்கண்கண்டுகாமுகர்
முற்றிடும்பையுமோட்டிளங்கொங்கையால்
இற்றிடும்மருங்கென்னுமிடும்பையும்
மற்றிடும்பையம்மண்டலத்தில்லையால். (கஎ)

இபமருப்பெனக்கொங்கைசுமந்திடை
தபமுரிந்திடுந்தக்கதன்றீதென
உபயபாதத்திற்கொண்பொற்சிலம்பிடும்
அபயமன்றியபயமற்றில்லையே. (கஅ)

நிறையுந்தாமரைநீட்டத்தினற்புனற்
சிறையுமன்றிச்சிறைபிறிதில்லையால்
பிறையுமென்முலைப்பேதையர்சிற்றிடைக்
குறையுமன்றிக்குறைபிறிதில்லையே. (௧௯)

பொருந்திமானும்புலியும்புனலுடன்
அருந்திவாழுமொருதுறையன்பினால்
பருந்தும்பைங்கிளியும்மொருபஞ்சரத்
திருந்துவாழுமிரவும்பகலுமே. (௨0)

பொருளும்வேதபுராணமும்புந்தியில்
தெருளுந்தானதியாகமும்யாகமும்
மருளின்மாதவமும்வளமும்முயிர்க்
கருளுந்தோன்றுறுமந்நகரத்தினே. (௨௧)

வேறு.

அத்திருநகர்க்குணிரையாயிரமணித்தூண்
பத்திகளுமத்தொகையபைம்பொனுறுகோயிற்
சித்திரமணித்தவிசின்முத்தணிசெழும்பொற்
சத்திரநிழற்றவரிச்சந்திரனிருந்தான். (௨௨)

என்னதிசைதென்னதிசைதென்றிருகைகூப்பி
மன்னவரிடுந்திறைகள்வந்தினிதளப்பத்
துன்னுமறையோர்கள்பலர்சோதிடமுரைப்ப
மன்னுகவிவாணர்பலர்மங்கலமியம்ப. (௨௩)

முந்தையிரவிக்குலமுதற்றலைமையோடும்
வந்தகுலமந்திரிகண்மண்டலிகர்சூழச்
சந்திரமுகத்தமணியக்கனதனத்துச்
சுந்தரமடந்தையர்சுழற்றிபணிமாற. (௨௪)

ஆடகமணிக்கடககைத்தலமழுந்த
மாடகமுறுக்குபுமடந்தையர்கள்பாடப்
பாடகபதப்பரிபுரத்தொலியெழும்ப
நாடகமடந்தையரசைந்துநடமாட. (௨௫)

ஆகமிசைதங்குமணியாரமுமவற்றின்
பாகமிசைசோதிவிரிபன்மணியுமின்னக்
கோகனகமங்கையொடுகொற்றவையுமம்பொன்
வாகுவலயங்களுமணிப்புயமிலங்க. (௨௬)

சோமனைமுடித்தருளுமாபதிசுடாத
காமனிவனென்னவொளிர்கட்டழகிலங்க
மாமகரகுண்டலமணித்திருவில்வீசச்
சேமவுடைவாளதுதிருக்கையிலிலங்க. (௨௭)

துடிப்படுகரத்தனடியர்த்தொழுதுநீற்றுப்
பொடிப்படவடுப்படுகெறுப்புநுதல்பொங்க
முடித்தலையுறத்திசைமுகத்தரசருய்த்த
வடுப்படுகெறுப்பிருமலர்க்கழல்விளங்க. (௨௮)

காலமதுகண்டுகதிருஞ்சசியுமொத்தெண்
பாலளவுநீள்கதிர்பரப்புவனபோலக்
கோலமுகநின்றொளிகுலாவவதன்மீதே
சாலமணிமேவுமுடிநின்றொளிதயங்க. (௨௯)

கண்ணகவிறைந்திமைகடந்துகடைதாவி
மண்ணகமடங்கலுமடைந்துயிர்கள்வாழ
விண்ணளவுதாவிமிகுவெங்கலிகரப்பத்
தண்ணளிநெடுங்கடலிடங்கொடுதழைப்ப. (௩௦)

வந்தெறிபயோததியின்மண்டுதிரைவானிற்
சிந்துநுரையூடுதிகழ்செங்கதிர்கடுப்பச்

சந்தமுலைமாதரிடுசாமரையினூடு
சுந்தரமனைப்பணிதுலங்கிடவிருந்தான். (௬௧)

நகரச்சிறப்பு முற்றிற்று. ஆ ௧௦௪.

# முதலாவது

# விவாககாண்டம்.

இருந்தகாலையிலியாவர்க்கும் விடைகொடுத்தருளித்
திருந்துமாமுடி மன்னவன் சிலருடனிருப்பப்
பொருந்துநன்னெறிப் புண்ணியதீர்த்தங்களாடி
அருந்தவத்தினரனேகர்வந் தந்நகரடைந்தார். (௧)

சடையுமுண்ட முந்நிகையு ண்டாதுகற்றோய்ந்த
உடையுமாமாவுரிகளு முடித்தழகிருந்த
இடையுந்தாழ்சிறபணடியுமெய்த்திளைத்தோய்ந்த
நடையும்வாடுத்தலுஞ்சபித்தலுமுந் துறுநாவும். (௨)

நூலுமார்பமு நாவிடைத்திகழ்ந்துற நடங்குந்
தோலுமங்குலித்தருப்பையுந் துளபதுமொண்செவியில்
நாலும்யாககுண்டலங்களுநான்மறைநெறிமுக்
கோலுமேந்திய தடைகளுங்குண்டிகைக்கரமும் (௩)

இனைகொண்டொவிருடிகளியாவருமெய்தி
அன்னசத்திரமனைந்துபுக்கனரயர்வுயிர்த்து
முன்னம்வாரிசியார்ப்பெடுத்தலெனமுழங்கி
மன்னர்மன்னவன்மாளிகைவாயிலில்வந்தார். (௪)

வந்தமாதவரோதையம்மன்னவன்கேட்டுச்
சிந்தையிற்பெருமகிழ்வரச்சென்றெதிர்கொண்டே
எந்தமாதவமின்றுவந்தெய்தியதென்று
அந்தமாதவரடியலர்முடியுறத்தொழுதான். (௫)

தொழுதகாலையிலாசிகளருந்தவர்சொல்லி
முழுதுமாமறைமுழங்கிடமண்டபமுற்ற
எழுதுமாமணியாதனமவ்வவர்க்கீந்து
பழுதிலாமொழிமன்னவனிருந்திவைபகர்வான். (௬)

எந்தத்தேயங்கள்கண்டனிரெத்திசைபுகுந்தீர்
எந்தத்தீர்த்தங்களாடினீர்புதுமையென்கண்டீர்
முந்தக்கூறுமினென்றரிச்சந்திரன்மொழிய
அந்தக்காலையிலரசனுக்கருந்தவருரைப்பார். (௭)

அங்கண்மாநிலத்தரியகன்னோசிநாட்டகத்துப்
பொங்குகண்டகியென்பதோர்புண்ணியதீர்த்தம்
அங்கியாம்புகுந்தாடினின்னருண்முகங்காண
இங்குவந்தனமின்னமுங்கேட்டியென்றிசைப்பார். (௮)

அந்நாட்டினிற்கன்னமாபுரிநகராள்வோன்
சந்திரன்வழிச்சந்திரதயன்றவம்புரிந்து
கந்தவார்சடைக்கடவுடன்வரத்தினாற்பயந்த
தந்தயாமுலைத்தையல்சந்திரமதியென்பாள். (௯)

மண்மடந்தையர்தம்முளும்வாசவனுறையும்
விண்மடந்தையர்தம்முளுநிகரிலாவிறல்வேற்
கண்மடந்தைதண்கருங்குழலருந்ததிக்கற்பிற்
கெண்மடங்குகற்புடையளிந்திரையினுமெழிலாள். (௧௦)

வேறு.

முகிலைவென்றறலைக்கடிந்துசைவலத்தை
முனிந்துபொற்கடுக்கையைமுடுக்கி

அகினறும்புகையுந்தகரமும்புழுகு
மலைஇப்பனிநீரிலேநனைந்து
பகலவற்குடைந்தவசையினால்வெள்கிப்
பலமலர்த்தாரணிந்தவனோ
டிகல்செயக்கருதியிருடிரண்டாலித்
தெழுந்தனசெழுந்தடங்குழலாள். (௧௧)

பயிர்கடந்தனவும்பட்டமாமரமும்
பண்டைநாளுக்கவெள்ளென்பும்
உயிர்பெறற்பொருட்டுப்பளிதமும்பாலு
மொழுகியதேனுமாரமுதும்
குயிலினிற்குரலுங்கிளியினின்மொழியுங்
குழலும்யாழுங்குழைத்திழைத்து
மயிலியற்சாயல்வாணுதறனக்கு
மலரயன்வகுத்ததென்மொழியாள். (௧௨)

கடலினைக்கயலைக்கணையைமென்பிணையைக்
காவியைக்கருவிளமலரை
வடுவினைக்கொடியமறலியைவலையை
வாளைவென்றறவுநீண்டகன்று
கொடுவினைக்குடிகொண்டிருபுறத்தாவிக்
குமிழையுங்குழையையுஞ்சீறி
விடமெனக்கறுப்புற்றரிபரந்துன்கை
வேலினுங்கூரியவிழியாள். (௧௩)

இருப்பைவிட்டயனார்நெடிதுநாட்டலஞ்செய்
திருகையுஞ்சிந்தையும்வருந்திச்
செருப்*பையின்றிறந்தமதனனைச்சுட்டத்
திருமுடிவேண்டுமென்றியானை

பயின்றென்பது பையின்றெனப்போலியாயது.

மருப்பையுங்கும்பத்தலத்தையுஞ்சக்ர
வாகத்தையும்வடகனகப்
பொருப்பையும்படைத்துத்தெளிந்தபின்படைத்த
புளகிதபூரணமுலையாள். (கச)

அறந்திகழ்தவமுமகிலமுமிதனை
லழியுமென்றயன்படைத்திலனோ
சிறந்தவேல்விழியைமுன்படைத்தயர்ந்து
செங்கரஞ்சோர்ந்ததோதிகைத்து
மறந்ததோகரந்துவைத்ததோகளப
வனமுலைப்பொறைசுமந்துருகி
இறந்ததோவுளதோவில்லையோவினிமே
லெய்துமோவறிவொணாதிடையே. (கரு)

செருக்குமோகனச்செந்திருமகளுறையுஞ்
சேயிதழ்த்தாமரைமலரும்
பெருக்குமாமறைநூலுரைத்தநான்முகத்தோன்
பிறந்தசெங்கமலமும்வெள்க
முருக்குமாம்பலுமென்காவியுங்குமிழு
முல்லையும்வள்ளையுமலர்ந்து
திருக்கிளர்கமலமிதுவெனச்செவ்வி
திகழ்வெயர்செறிதிருமுகத்தாள். (கசு)

கடிகமழ்மலருங்கலவையுமழகுங்
கதிர்மணிப்பணிகளுஞ்சுமந்து
கொடியெனவிசைந்துநிறைவுறப்பூத்த
கொம்பெனவசைந்தசைந்தொல்கி
அடியிணைபடியிற்படப்பொறுதஞ்சி
யன்புறுகடகரிப்பின்போம்
பிடியெனக்கன்னிநடைபயிலன்னப்
பெடையெனமடநடைபெயர்வாள். (கஎ)

அன்னதன்மையளை யமிர்தினிற்பிறந்த
வணங்கபிடேகத்தையனந்த
மன்னர்தந்தமக்குமணஞ்செயக்கருதி
மணமொழிந்தவர்க்கெலாங்கொடாது
முன்னமெம்பெருமான்மொழிந்தவற்கன்றி
முடிக்கிலேன்கடிமணமெனனச்
சொன்னதோர்மொழியுங்கேட்டனமவனின்
றோள்களுக்கிசைந்தவளென்றார். (கஅ)

பாதகமென்னுக்கடிந்தகாமத்தி
பங்கமுறறுறைவிடம்பெறாது
மாதவருரைத்தமொழிவழிவந்து
மன்னவன்செவிவழிபுகுந்தாங்
கூறதவந்தலைக்கும்வெளிவிளக்கதனி
னுளமலைவுறவலைத்தோங்கிக்
காதலங்கொழுந்துவளர்ந்திடவுருகிக்
கனலினிலிடுமெழுகானான். (கக)

சந்திரகலையானெக்குநீர்பொழிவ
சந்திரகாந்தமேயல்லால்
* அந்தரசாதிச்சிலையினுண்டாகா
தவளிவன்மனைவியென்றயனார்
முந்தவேவிதித்தவிதியினலடங்கா
மோகமுந்தாகமுமிகுந்து
புந்திகெட்டறிவுநிறைபொறைதேற்றம்
போக்கினான்யாக்கையுந்தளர்ந்தான். (உ0)

வேறு.

கரையழிகாதலாற்றையறிவெனுங்கரைசெய்தாற்றி
வரையணபுயத்துமன்னன்முனிவரைநோக்கிமாதர்க்

* அந்தரச்சாதிச்சிலை - வேறுசாதிக்கல்.

கரசியையடியனேனுக்கணிமணம்புணர்க்கநம்வா
யுரையுளதாயினென்மாட்டுயிருளதாகுமென்றான். (உக)

அங்கண்மாஞாலங்காக்குமரசனேயரசரேறே
திங்கண்மாமுகத்துவாமத்திருவைநீவதுவைசூட்ட
எங்களாற்செய்யுமாறேதியம்பெனமுனிவர்கூறச்
செங்கண்மாலனையான்செவ்வாய்செங்கையாற்புதைத்துச்செப்பும் ()

அல்லியங்குழலாடன்னையருமணமடியேன்சூட்டக்
கல்லியற்சுரமுங்காடுங்கடந்துகால்வருந்தநீர்போய்
வல்லியைப்பயந்தோற்கண்டுமணமொழிந்தந்தவேந்தன்
சொல்லியநெறிகேட்டென்பால்வருகவென்றினிதுசொன்னான். ()

காதலான்மன்னன்கூறமாதவர்கருணைவெள்ளம்
மீதெலாமெழுந்துபொங்கவேந்தகேண்மீண்டியாங்கள்
போதலுஞ்செய்வேமுங்கள்புதுமணங்காண்பேமாயின்
ஈதலாலுறுதிவேறொன்றில்லையென்றெழுந்திருந்தார். (உ௪)

சந்திரமதிதன்பாரதனங்களுன்சைலதாம
சுந்தரமார்பின்மூழ்கச்சூட்டுவேமென்னவாழ்த்தி
மந்திரமுனிவரெல்லாமண்டபமகன்றுநீங்கி
இந்திரபுரியேயன்னவெழினகர்கடந்துபோனார். (உ௫)

மாதவர்போனபின்னர்மண்டபநீங்கிமன்னன்
ஆதுலர்போலப்பள்ளியறைபுகுந்தமளிநண்ணி
மீதெலாமனங்கவாளிகுளித்திடவெளியிற்புக்குக்
காதலங்கடலுட்டாழ்ந்தான்கரைநிலைகண்டிலாதான். (உ௬)

மயங்கினான்வருந்தினான்மெய்வாடினான்மதனனம்பால்
தியங்கினான்வளர்ந்தகாமத்தீயினாற்செயலற்றுவி
தயங்கினான்றீராமோகதாகத்தாற்றளர்ந்துமென்மேல்
உயங்கினானுருகிமெய்சோர்ந்துளத்தொடுமுரைப்பானானான். (உ௭)

தந்தமால்களிற்றியானைச்சந்திரதயன்றன்பாலை
வந்தமாமுனிவரோடும்வந்திவண்மாயமாகி
எந்தமாருயிரைவௌவியெம்முளம்புகுந்துகைக்கொண்டு
டந்தமாமுனிவரோடுமகன்றம்தாவறிகிலேமால். (௨௮)

ஒற்றையாழியந்தேர்சூழிவ்வுலகம்யான்காவல்பூண்ட
அற்றைநாண்முதலாக்கள்ளமின்றியேயமர்ந்ததந்தோ
பிற்றைநாள்வலியீனுலோர்பெண்கொடியெந்தமாவி
இற்றைநாள்கரந்துகொண்டதேழமையெமக்குமன்றே. (௨௯)

தனக்குறுந்தமர்க்குறுதான்றனைக்கரந்தரிதிற்கொள்ளும்
வனக்குறும்பற்குவாகைக்குறுவனே மயிலேமானே
எனக்குறுமென்றுகாத்தவென்னைவிட்டுன்பால்வந்தால்
உனக்குறுமென்றோநீயென்னுள்ளத்தைக்கொண்டாயென்றான். ()

மைதிகழ்வாரிசூழுமாநிலத்தோர்கட்கெல்லாம்
பெய்தவம்பழிபிறங்காப்பிள்ளையைப்பெறதலென்பார்
செய்தவமன்றன்றாதைசனனங்கடோறுஞ்செய்த
கைதவமாவிகொள்ளுங்களவினிற்பயந்ததெல்லாம். (௩௧)

மாறுகொண்டென்னைவல்லிவாட்டியவாட்டஞ்சொல்லி
ஆறுதற்கென்பாலண்ணியணையுமோவணைகிலாமல்
வேறுமிப்படியேவாதைவிளைக்குமோவிளைக்கும்வாதை
ஏறுமோகுறையுமோவென்றிருந்தனனிறைவனிப்பால். (௩௨)

மானவன்வதுவைசூட்டமணமொழிவதற்குநண்ணிப்
போனமாமுனிவர்பூகப்பொழிலுடன்பொய்கைநீங்கிக்
கானமுமலையும்யாறுங்கடந்துகன்னோசியென்னும்
மாநகரணுகிக்கொற்றமதிதயன்சபையிற்புக்கார். (௩௩)

மேருவைவெரிசெய்தன்னமேனிலைமணிமாடத்து
வாரிதியெழுந்ததென்னவந்தவன்றாளைப்போற்றத்

தேரும்யானையுமிழிந்துதிறையிடுமரசர்நிற்க
காருநீள்கடலும்போலக்கதிர்மணிமுரசமார்ப்ப. (௩௪)

வெயில்விரிமகுடம்பொங்கவிடுசுடர்க்கழல்விளங்கக்
கையில்விரிகடகமின்னக்கதிர்மணிக்குழைகடாழப்
பயின்மணிமரகதத்தாற்பசுங்கதிர்பரப்புமாடச்
சயிலசாளரங்கடோறும்வலயத்தின்கிரணந்தாக்க. (௩௫)

சிகரமாமுலையார்செம்பொற்செழுமணிக்கவரிவீசப்
புகரணவமைச்சர்போற்றப்புரிதவமுனிவர்வாழ்த்தப்
பகர்தருமறையோர்சூழப்பாவலர்கவிகள்பாட
மகரதோரணக்கீழ்மன்னன்மடங்கலாதனத்திருந்தான். (௩௬)

அந்தவோலக்கந்தன்னிலருந்தவமுனிவரெல்லாம்
வந்தனர்வந்தபோதுமன்னவனெழுந்திருந்து
சுந்தரமகுடந்தாழத்தொழுதனனவனைவாழ்த்திச்
சிந்தையின்மகிழ்ச்சிபொங்கவிருந்தபின்செப்பலுற்றான். (௩௭)

வானநீர்பொழிந்துமுத்தமணிகொழித்தருவிபாய்ந்த
கானநீர்பெருகுந்தெய்வகண்டகியென்னுந்தீர்த்தத்
தானநீராடியென்றன்றலைக்கடிமுடிகள்சூட்டிப்
போனநீருடனேமீண்டவருத்தியென்புகலுமென்றான். (௩௮)

மன்னகேள்சென்றயோத்திமாநகர்புகுந்தியாங்கள்
அந்நகர்க்கரசனீதியருளரிச்சந்த்ரனென்பான்
நின்னகர்வளமுநின்றனெறியுநின்மகடனேரும்
சொன்னபினின்பாலெய்துமுவகையேதுணிந்துநின்றான். (௩௯)

அறநெறிமிக்கோர்தம்பாலருந்ததிக்கற்பினாளைப்
புறநெறிபோகாவண்ணம்வருந்தியும்பொருந்தச்செய்தல்
மறநெறியன்றுமாயாமாதவந்தன்னின்மிக்க
திறநெறியதனானின்பாற்சேர்ந்தனஞ்செல்வவென்றார். (௪0)

புவனமுள்ளளவும்யாகங்கள்புக்கறித்தனேககோடி
கவநரபதிகடம்மைக்கண்டனநறுந்தார்வேந்தே
சிவனல்கநீபயந்ததிருமகடனக்குக்கேள்வன்
அவனலதில்லையென்னவருந்தவரெடுத்துரைத்தார். (௪௧)

மையலாற்றியகுணத்துமாதவருரைப்பகேட்டுப்
பொய்யிலாமொழியானுள்ளம்பொருந்தியும்பொருந்தானுகித்
தையலாள்பங்கன்மேனுள்சாற்றியதகமைகேது
செய்யலாநம்பாலென்னத்திகைத்திருந்துரைக்கலுற்றுன். (௪௨)

மூவராயவரின்முன்னுமூர்த்தியாரருளிசெய்த
தேவராசியமொன்றுண்டாலன்னதுதெரியவல்லார்
யாவராயினும்யான்பெற்றவிளங்கொடிதனக்குக்கேள்வா
ஆவராலவனிங்கெய்தினறியலாமழையுமென்றுன் (௪௩)

அரசையிங்கழையுமென்னவகமகிழ்ந்துவகைகூர்ந்து
விரைவுடனெழுந்திருந்துவேதமாமுனிவர்போனு
இருநிலத்தரசர்கடெல்லாஞ்*சுயம்வரமேழுநாளென
றுரைசெயுமெனறுதூதுமோலையும்போகவிட்டான். (௪௪)

தொழுங்கழன்மன்னர்மன்னன்றூதர்சென்றுரைத்தபோதே
அழுங்கியவாசையோடுமளவிலாவுவகையோடும்
செழுங்குடைமன்னரெல்லாந்தேசமுநகருநீங்கி
எழுகடல்வளைந்ததென்னவீண்டிவந்தடைந்தாரன்றே. (௪௫)

சோலைகடோறுநன்னீர்ச்சூளிகைதோறுந்தேவ
ராலயந்தோறுமாதாரங்குகடோறுமாட
மூலைகடோறுஞ்சீர்சான்முன்றில்கடோறுமேம
சாலைகடோறுமன்னர்தானைவந்திருந்ததன்றே. (௪௬)

மானைவென்றடருங்கண்ணுண்மணமகன்வருமுன்வந்த
ஏனையவேந்தர்க்கெல்லாமிமையவர்க்கறியவொண்ணு

* சுயம்வரம் - கன்னிகை ஒருவனைக்கணவனுகத்தானேவரித்தல்

யானையுந்தேருமாவுமாதருமமைச்சர்தாமும்
சேனையுமளவிட்டார்க்குஞ்செப்பலாந்தகைமைத்தன்றே. (௪எ)

இந்நகர்முழுதுமன்னனீண்டியபின்னயோத்தி
நன்னகர்தனிற்புக்கார்நற்றவமுனிவரெல்லாம்
மன்னவனெழுந்திருந்துவணங்கிவாய்புதைத்துநீங்கள்
சொன்னதுங்கேட்டவாறுஞ்சொல்லுமென்றெடுத்துரைத்தான். ()

அருந்தவமுனிவரெல்லாமரசனைநோக்கியைய
பெருந்தவமுடையார்மண்ணினீயலாற்பிறரினுண்டோ
திருந்திழைதனையுனக்கேதிருமணமுடிக்கத்தாதை
பொருந்தினன்வல்லைநீயுமெம்முடன்போதுகென்றார் (௪௯)

என்றினிதுரைத்தலோடுமெழுந்தபேருவகைவெள்ளம
நின்றினிதோங்கவாகுவலயங்கணிமிர்ந்துநீங்கக்
குன்றினுமுயர்ந்தசெம்பொற்கோயில்விட்டெழுந்துபோந்து
முன்றிலின்வந்துமன்னனினையனமொழியலுற்றான் (௫௦)

கன்னலங்கழனிவேலிக்கண்ணேசிநோக்கிவிஞூா
மன்னருமமைச்சர்தாமுஞ்சேனையுமாதராரும்
முன்னரேசெல்கவென்றுமொழிந்துசூதனைக்கண்சாத்தி
வன்னமாமணித்தேர்கொண்டுவருகெனவருளிச்செய்தான். (௫௧)

வேறு.

மாதங்கமடங்கல்வயப்பரிமா
பூதம்பலதேரொடுபூணவிதிஇச்
சூதன்கொடுவந்துசுடர்க்கழலோன்
பாதங்களின்மீதுபணிந்தனனே. (௫௨)

வாரேறுசெழுந்தடமாமுரசம்
நீரேறியசங்குமுநின்றதிரத்
தாரேறுபுயங்கடதும்பநெடுந்
தேரேறிவிரைந்துசெலுத்தினனே. (௫௩)

நற்றேரிணைமன்னனடத்திடவே
சுற்றேறநிரைந்தயறுன்னினவால்
குற்றேவல்செயும்பலகொற்றவர்தம்
பொற்றேர்சதகோடிபொருப்பெனவே. (௫௪)

கவிகைப்படுநீழல்கவிப்பமணிச்
சவிகைத்திரளின்மிசைசென்றனரால்
புவிகைக்கொளமைச்சர்புகழ்ந்தரசைக்
குவிகைத்தலமிட்டொருகோடியரே. (௫௫)

வன்னக்குவிமாமுலைவல்லியரும்
கன்னற்சிலைவேளனகாளையரும்
அன்னத்திரளோடரியின்றிரள்வந்
தென்னக்கடிதெய்தினரெங்கணுமே. (௫௬)

சிறையோதிமமேல்வருதேவனெனப்
பொறையோடொளிர்வெண்சிவிகைப்பொலிவுற்
றிறையோடுடைமைச்சரிறைஞ்சிடமா
மறையோதிவசிட்டனும்வந்தனனே. (௫௭)

தரைசேர்கடலொத்தனதானைகடற்
றிரைபோலநடந்தனதிண்பரிமா
விரைசேர்குருவித்திரள்வீழ்பலமால்
வரைபோலநடந்தனவாரணமே. (௫௮)

கல்லார்நெறிசெல்வதுகால்கள்பொரு
வெல்லா(1)நரவாகனமேறுமெனுச்
சொல்லாமுனமேதுறவோர்விரைவிற்
* செல்லாநெறிமீயறினர்சென்றனரால். (௫௯)

---

(1) மிருகவாதனமேவுமெனு என்றும்பாடம்.

* செல்லாநெறி - ஆகாசமார்க்கம்.

பலவெண்குடையும்பவளக்குடையும்
குலவும்பலசெம்மணியின்குடையும்
உலவுங்கதிருஞ்சதகோடியுவா
நிலவும்மெனவெங்குநிறைந்தனவால். (௬0)

ஆதித்தனருங்குலமன்னவர்தந்
நீதிப்புகழெங்குநிறைந்ததெனச்
சோதிக்கவரித்தொகையுங்கொடியும்
வீதித்தலைதோறுமிடைந்தனவால். (௬௧)

காற்றோடுநிகர்த்தகடும்பரிவா
னேற்றோடுநிகர்த்தனயானைவரைக்
கூற்றோடுநிகர்த்தனதேர்குலவும்
ஆற்றோடுநிகர்த்தவனீகமரோ. (௬௨)

மழுவுங்கரவாளமும்வார்சிலையும்
எழுவுங்குலிசங்களுமேதிகளும்
கொழுவும்வளையும்பலகுந்தமுநீண்
முழுவெஞ்சுடர்வேல்களுமொய்த்தனவால். (௬௩)

மீயுற்றுடனெற்றியவெம்படையின்
வாயுற்றெழுவெம்பொறிமண்டுவநீள்
வேயுற்றபெருங்கிரிமீதெரியும்
தீயுற்றனவொத்தனசேணளவும். (௬௪)

நலிவுற்றுருடங்கிடைநன்னுதலார்
பொலிவுற்றணிதேர்மிசைபோயினரார்
கலியுற்றெழுநீள்கனகக்கிரிமேல்
மலிவுற்றெழுவஞ்சிகண்மானுமென. (௬௫)

கருமாமுகிலன்னகவின்குழலார்
பெருமால்கரியின்பிடர்மேல்வருமா

திருமாமுகிலுக்கிடையேயெழுமின்
வருமாறுநிகர்த்தெனவையமெலாம். (௬௬)

விலையுன்னரிதாகியவெம்பரிமேல்
சிலைநன்னுதலார்பலர்சென்றனரால்
உலையும்புனல்வாரியினூதையினால்
அலையுந்திரைமேல்வருமன்னமென. (௬௭)

பரிதுன்னநெடும்படைதுன்னமத
கரிதுன்னவிழிந்துகடந்தனனால்
விரிகின்றசெழுஞ்சுடர்வெண்டரளம்
சரிகின்றபுனற்சரயுத்தனையே. (௬௮)

விரையேறியதார்புனைவேலிறைவ
னிரையேறுமலீகநெருக்குதலால்
தரையேறியதண்புனறள்ளநெடுங
கரையேறியவாளைகணக்கிலவே. (௬௯)

அரியன்னவர்மின்னனையார்கடனம்
நெரியும்படிதுன்னிநெருக்குதலால்
பரியும்மணிமாலைகள்பார்க்கிலர்கீழ்
சரியும்மணிமேகலைதாமறியார். (௭௦)

அரனார்முனியாமதனன்னவர்தோள்
பரநாரியர்கொங்கைபடப்படமுன்
ஒருநாளுலவாநிறையொண்ணுதல்பால்
வருநாண்மனுநீதிவழங்கிலதால். (௭௧)

வெளிறுஞ்சுடர்வேலிளவேளனையான்
பிளிறுங்கரிதுள்ளவிழுந்துபெயர்ந்
தொளிறுந்தனவல்லியொருத்தியைக்
களிறென்றிருகைகொடுகட்டினனே. (௭௨)

ஆடுங்கழன் மன்னனனேகருடன்
நாடுந்தருவும்பலநண்ணிநெடுங்
காடுங்கிரியும்பலகண்டுகடந்
தோடுங்கு ர்கோமதியுற்றனனல். (எங)

## வேறு.

கானயாறனைத்தையுங்கடந்துகௌசிக
மானயாருயகோமதியைநண்ணியே
யானையுமிரதமும்பரியுமீட்டமும்
சேனையுமன்னனுஞ்சென்றிருந்தவே. (எச)

தோய்கதிர்வேற்படைசூழ்ந்துதுன்னிட
வாய்கதிர்முடியினனுற்றைநண்ணினன்
பாய்கதிர்ப்படலையுட்சுருக்கிப்பையவே
காய்கதிர்சசெல்வனுங்கடலைநண்ணினன். (எரு)

ஆழமேழகருங்கடலதனில்வெய்யவன்
வீழலுமன்னனும்வேந்தர்மக்களும்
எழையர்யாவருமிரதமுங்கட
வேழமுஞ்சிவிகையும்விட்டிறங்கினர். (எசு)

மண்டலவேந்தருமாதரீட்டமும்
திண்டிறலமைச்சருஞ்சேனைவெள்ளமும்
தண்டரளம்வளைதவழுமாநதி
யண்டலில்விடமறவந்திறுத்தவே. (எஎ)

பட்டினுமணியினும்படங்கமைத்துவிண்
முட்டியசெம்பொனின்முடிகள்வைத்துமேற்
கட்டியும்பதாகையுங்கட்டிநீடிரை
விட்டனர்மன்னருமின்னருமே. (எஅ)

திண்பணையகிலினுந்தேவதாரத்தும்
தண்பரும்பலவினுந்தாறுபாய்பசும்
பண்படுகரிகளும்பரியும்பூட்டினார். (௭௯)

நிலைமரம்பிளந்திடநிவந்துகுத்திய
கொலைமதயானையின்கோடுபோலவே
சிலைமதனனையவர்மார்பிற்றேனனார்
மூலமதயானையின்கோடுமூழ்கின. (௮௦)

மோதுகொண்டலைப்பொருமூரியானைதம்
மீதுகொண்டலைத்தமெய்ம்மெலிவுமாறவே
தாதுகொண்டலைகுழற்றையலார்முலை
வேதுகொண்டொற்றினார்வீரர்மீதெலாம். (௮௧)

அகிலொடுசந்தனத்துணியினுக்கிடு
துகில்பொதிமணிபுரையெரியுந்தூமமும்
திகிலெனப்பலபலசெக்கர்வானம்வெண்
முகில்பொதிந்தனவெனமூண்டெழுதந்வே. (௮௨)

ஆறிலாதணிபடங்கத்துளேற்றிய
மாறிலாத்துளங்கெழின்மணிவிளக்கொளி
சேறலாந்தகைமையசிலம்பிநூல்பொதி
தூறெலாமின்மினித்தோற்றமென்னவே. (௮௩)

குசைநெடுங்கடும்பரிக்கொற்றமன்னவன்
வசையிலாநங்குலமடந்தைமாமுலைக்
கிசைவனோவென்றவந்தெட்டிப்பார்த்தெனத்
திசையெலாங்கதிர்விரி*தெழுந்ததிங்களே. (௮௪)

செங்கயலனையகட்டெரிவைதன்றிரு
மங்கலமுணர்ந்துமண்மடந்தையட்டதோர்

எழுந்தது - எழுந்த எனவிகாரமாயிற்று.

பங்கமிலிரசிதப்பானைமேல்வழி
பொங்கலிற்புதுநிலாப்பொலிந்ததெங்குமே. (அ௫)

பெருத்தவானிலவிடைப்பேதைமாதரைக்
கருத்துறக்காதலர்கலந்துறங்கினர்
வருத்தமுங்காதலும்வளரமன்னவன்
ஒருத்தனேதனிக்கிடந்துறக்கநீங்கினன். (அ௬)

உருவெளிநோக்குவனுவப்பனுன்னுவன்
கரவினலேங்குவன்கலங்குவன்மதி
மரபினுடன்கணென்மனதுபோம்வழி
இரவுபோவதற்கிடமில்லையோவென்பான். (அ௭)

கொடியமாமதனையுங்கொழுநிலாவையும்
நொடியினுமொருகுறைசொல்லிநோகிலான்
படிகிலாவிழியையும்பாரில்வேர்சிறீஇ
விடிகிலாவிரவையும்வெறுக்கும்வேலையில். (அஅ)

மையலுங்கங்குலுமதியும்வாட்டவிவ்
வையனேவெளியனென்றணிவயிற்றினில்
கையினலறைந்துகூய்க்காமர்வாரணம்
வெய்யவாவிரையவாவெனவிளித்ததே. (அ௯)

ஊழிவெங்கதிரவனுதயமுன்னறிந்
தாழியுந்திங்களுமார்ப்படங்கின
கோழியுமார்த்தன*குக்கிலார்த்தன
○ சூழியிற்புள்ளொலாந்துள்ளியார்த்தவே. (௯0)

நங்குலத்தரசனைநலிந்தபாதகக்
கங்குலத்திங்களைக்கனன்றுதேர்கடாய்

---

*குக்கில் - செம்போத்து.

○ சூழி - குளம்.

அஙகண்மாஞாலம்விட்டகற்றுவேனெனச்
செங்கதிர்க்கடவுளுஞ்சிவந்துதோன்றினன். (௧௧)

படர்கெடுத்தறநிலைபரித்தமன்னனுக்
கிடர்விளைத்தெய்தியவிராமடந்தையிப்
புடவிவிட்டேகினும்போனதிக்கெலாம்
தொடர் ினென்றெண்ணிலாசசுடரையேவினன். (௧௨)

அலரிவந்தெழமுரசதிரவாழிபோல்
புலரியிலரணடிபூசித்தண்ணலும்
சிலர்சிலசுடர்மணித்தேரிலேறினர்
பலர்பலகரிகளுமபரியுமேறினா. (௧௩)

அநதமாலாற்றைவிட்டகன்றமன்னவன்
மூர்தமால்கரிபரிநடப்பமொய்த்துடன்
கநதமாலைசகுழற்கடலுடன்வரச
சந்தமால்வரைத்தடஞ்சாரணண்ணினன். (௧௪)

அரிதகிபலாசமாதிலசயாசினி
விரிமலாசசமபகவேஙகைகோஙகமை
சொரிமலாசசுரபுனையஃசாருதுன்னிய
வரிமணறகாவிடைவந்துவைகினன். (௧௫)

அ பசுனையாடவுமருவியாடவும்
மலை சைப்பிடியும்வன்க றுமாணவே
சிலை தலாருஞ்செல்வருஞ்சென்றேறினர்
முலையொடும்புயத்தொடுசேர்த்தமொய்ம்பின. (௧௬)

அருவிச ாடுவார்சுனைகளாடுவார்
வெருவிவந்தகன்கரை ீதிலேறுவார்
* சருவி டோடியப்புனலிற்ருவுவார்
மருமலர்கொய்துவார்மலைந்துபிள்குவார். (௧௭)

* சருவல - சைகைசெய்தல்.

அருவியுஞ்சுனைகளுமாடிநுண்மணல்
மருவியவண்டலுமணந்தசோலையும்
பருவரைக்குடுமியும்பளிங்குப்பாறையும்
பொருவிலாப்புனங்களும்புகுந்துநோக்குவார். (கூஅ)

அன்றிருந்தணிவரைச்சாரல்வைகியே
துன்றிருள்விடிந்தபின்சோதிவேலினன்
சென்றிருஞ்சுடர்மணித்தேரின்மேலறியே
வென்றிவெம்படையொடுவிரைந்துபோயினன். (கூகூ)

வேயிருங்கானமும்வெற்பினுச்சியும்
மாயிரும்பொழில்களுமடர்ந்துநுண்பொடி
யாயினவிசும்பினையடைந்ததூளியும்
சேயிருஞ்சுடர்மணித்தேர்கள்செல்லவே. (க00)

செந்நிறப்பொலன்கதிர்த்தேரினுழிமீதெய்த்
தந்நிறமவவழியனைத்துமாதலால்
பன்னிறக்கிரிகளும்பரந்தபாறையும்
பொன்னிறமேருவேபோற்பொலிந்தவே (க0க)

வானமுற்றெழுந்தமாமலையுமால்கரித்
தானமுற்றொழுகியதடமுஞ்சாரலும்
நானமுற்றெழுநறும்பொழிலுநண்ணிவெங்
கானமுற்றருநெறிகடந்துபோயினன். (க0உ)

விரிந்தவெங்கமர்களும்வெயிலின்வெந்துகீழ்
சரிந்தமாமலைகளுஞ்சருகுவெந்துமேற்
பொரிந்தமாமரங்களும்புகைந்துபார்மிசை
எரிந்தெழுகடுஞ்சுரத்தெல்லையெய்தினன். (க0௩)

## வேறு

என்றுமமரர்க்குவினையின்றியரன்முப்புரமெரித்தகணனும்
வென்றிமதனைப்பொடிபடத்திருநுதற்கணைவிழித்தகணனும்

வன்றிரையெறிந்தெழுகடற்குணடுவைத்தவடவைக்கனலுமுற்
றொன்றுபடவந்துகுடிகொண்டவனுறைந்தனவுருப்பமெழவே. ( )

கானமுழுதுந்தெறுகனற்றிரளில்வெந்தெழுகதிர்ச்சுடரின்வெந்
தூனமுறவற்றியுரகத்தலைவெடிப்பவதனுச்சிவழிபோய்
வானளவெழுந்துபுவிமீதுவிழுகின்றமணிவந்துபகல்வான்
மீனம்விழுகின்றபடியாமெனவிளங்கினவெளிப்புறனெலாம். (௧௦௫)

கரும்புயலருந்துளிகரந்துடல்கரிந்தயல்கலைந்துநெடிதாய்
வரும்பருவமுந்தலைமயங்கிமழையென்பதுமறந்தவதனால்
பெரும்புவிபிளந்ததிலனந்தன்முடியிற்சுடர்பிறங்கியெழுமால்
இரும்புவிசினந்தழலுமிழ்ந்ததனைச்சுடவெழுந்ததெனவே. (௧௦௬)

சுரப்புறுசிறைப்புனலெனக்கருதிவற்றியதுவட்சியதனால்
நிரப்புறுதவிப்பினையொழித்திடமனத்தினினினைத்துழையெலாம்
இரப்பவரைநித்தலுநடத்தியுமொராற்பமுமிரக்கிலர்பால்
பரப்பவரையொத்தனகரப்பவரையொத்தனபசாசரதமே. (௧௦௭)

அடுந்திறலுமவ்வவர்படுந்திறலுநாமமுமனைத்துமெழுறி
* நடுங்கலுநறும்புனறவிர்ந்துடல்பதைத்துயிர்நடுங்கியுழலும்
கொடுங்கரிமருப்பும்வெருள்கற்றிடருமற்றுளகுவட்டினிடையும்
நெடுங்கடறடர்ந்திரைகிளர்ந்தெனமுழங்குதவநெடித்திரளெலாம். ( )

அந்தவெயிலத்தகல்விசும்பிடைவெடித்துவிழுமானையினெடுந்
தந்தமணியைத்துளியெனக்கருதியுண்டுழல்வசாதகமெலாம்
வெந்தெரிகொளுஞ்சருகெழுந்துவிழுகங்குலில்விரிந்தநிழலில்
வந்தடருமெண்குமரையுங்கடமையுங்கலைபுமானினமுமே. (௧௦௯)

மண்மகளுடுத்ததிரைவாரிவடவைக்கனலைமாற்றியிதிலோர்
வெண்மணலைவைக்கிலரமங்கையரிரும்பதியும்வெந்துவிடுமால்
○ கண்முழுதையும்புடைபெயர்ந்துகவருங்கடையுகத்திலிதிலோர்
நுண்மணறெறித்துவிழினும்பிரளயப்புனலைநுங்கிவிடுமால். (௧௧௦)

---

* நடுங்கல் - நடப்பட்டகல்.
○ கண் - இடம்.

வெங்கதிர்தெறுங்கொடியவிண்டுவனம் வெந்தெரியும்வெந்தழலின்
அங்கதமிறந்துமதகுஞ்சரமிறந்துடலழிந்திடமெலாம் [வாய்
செங்குருதியங்கடலின்மண்டமுதவாரியலைசிந்து நுரைபோல்
எங்கணும்விளங்குவனவெண்குவடெனும்பரிசெலும்புமலையே. ( )

வெங்கரியுரித்துடைபுனைந்தவள்சலஞ்சசிவிளங்குசடிலச்
சங்கரித்ரிசூலதரிதாருகவிஞசனிசவுந்தரிசெழும்
பொங்கரிமணிப்பரிபுரத்திருபதத்தினள்பொருப்பனதனத்
தெங்கடனிநாயகியிருந்தசமயத்தியல்பெடுத்துரைசெய்வாம். (ககஉ)

எறித்தசெழுமுச்சுடருமொத்தொருதலத்திடையெழுந்ததெனவே
செறித்திருபுறக்கடைசிவத்திடைகறுத்தகண்டிகைச்சுழலவே
சிறுத்தவிடையிற்கரதலத்தின்முடியிற்றிகழ்செரித்தவரவப்
பொறிக்கணபணத்தலைமணிச்சுடிகையிற்கதிர்கள்பொங்கியெழவே.

மிடித்தவர்களைப்பொருண்மிகுத்தவர் வினைத்தொழில்விளைப்ப தெனவே, கொடிப்படர்பொருப்பெனவிடைக்கிடர்விளைத்ததனகும் பவழகும், தடித்தினடிவிற்குமிர தத்தைநிகர்பொற்கடிதடத்தினழ கும், பொடித்தெழுவெயர்த்திருமுகத்தழகுநின்றொளிபொழிந்தொ ழுகவே. (ககச)

வேலைகளெழுந்துலகமேழினுடனேழையும்விழுங்கிவிடுமெக்
காலமுடிவிற்கொடியவூழிநெடுவெங்கனன்றெறிதல்போல்
சாலவினைகொண்டுபொருதாருகனைவென்றவுணர்தங்கள்குடரை
மாலையிடுகின்றதிரிசூலமிசைவெங்கனல்வளர்ந்தெரியவே. (ககரு)

பொடிப்பொடிதிசைத்திசைதெறித்திடுசுடர்த்திரிபுரத்தழலெனத்
தடித்தெழுவலத்தஞதடக்கைவடிவாளொளிதயங்கியெழவே
அடிக்கடியெதிர்த்தலையடித்தெழுமுகக்கடலதிர்ச்சியெனவே
இடிக்குரன்முழக்கெனவிடக்கையின்மணிக்கடகிரைத்ததையவே. ( )

பட்டயமெடுத்தொருகைபத்திரமெடுத்தொருகைபற்றுமழுவும்
* சொட்டையுமெடுத்திருகைசக்கரமெடுத்தொருகைசுற்றுமயிலும்

* சொட்டை - வளைதடி.

வட்டமுமெடுத்திருகைவச்சிரமெடுத்தொருகைமற்காதலம்
எட்டினும்விதிர்ப்பனசுழற்றுவனவெந்தழலெழுந்தெரியவே. (ககஎ)

ஆடகமணிக்குழைகள்பாரியசரப்பணிகளத்தகடகம்
சூடகமிரட்டையுடுதாரமொடுபட்டமணிதோள்வளைசெழும்
பாடகமெழிற்பரிபுரங்கழல்சதங்கைகள்பதக்கமுடனே
நீடெழின்மதாணிகளிலங்குதிசையெங்குமொளிநின்றடரவே. ()

நித்திலநிரைத்துவயிரத்தினையழுத்திமுழுநீலநிறுவிப்
பத்திபடவொப்பரியபச்சைவிரவிப்பதுமராகமளவிச்
சித்திரமியற்றியமணிக்கலையுமப்பரிசுசெய்தகிரணத்
துத்தரியமுந்தொடையுமுற்றுநிலவும்வெயிலுமொக்கவிழவே. ()

காவன்முறைநிற்பவொருகோடியுளகற்பனைகள்கற்றுவழுவா
தேவலிடைநிற்பவொருகோடியுளகூடியவிடாகினிகண்மேல்
ஆவலொடுநிற்பவொருகோடியுளநன்னெறியமைச்சரெனவே
போவனவுமீள்வனவுமாவவொருகோடியுளபூதகணமே. (கஉ0)

அச்சமதறத்தமதுயிர்க்கொடையளித்தவரறுத்ததலையை
வச்சிரமணிக்கடகநற்கரதலத்தினிடைவைப்பசிலவே
இச்சையினரப்பலிகளிட்டதலையைக்கடிதெடுத்திறைவிமுன்
பச்சுதிரமுற்றொழுகவைப்பசதகோடிகள்பசாசகணமே. (கஉக)

ஈடுபடுகண்ணிடையடங்கவிருசாமரமிரண்டுபுறமும்
போடுமவரும்பரிபுரத்திருமலர்த்துணைபொருத்திமுடிமேற்
சூடுமவருங்கவிதொடுக்குமவரும்பவுரிசுற்றிமுறைநின்
றாடுமவருமிசைகள்பாடுமவரும்பலவரம்பையர்களே. (கஉஉ)

மஞ்சனமெடுப்பவருமாமலர்தொடுப்பவரும்வாள்விழிகளுக்
கஞ்சனமளிப்பவருமாரமுதளிப்பவருமன்னைதிருமுன்
கஞ்சனைபிடிப்பவரும்வஞ்சனையறப்பரிகலத்துடனெடுத்
தின்சொல்வழிநிற்பவருமெண்ணரியகோடிகளிடாகினிகளே. ()

பண்ணவர்திரண்டுபகர்முன்றிறனில்வந்தடிபணிந்துதொழவே
மண்ணவர்விழுந்துதமதெண்ணமுடியும்படிவரங்கள்பெறவே

கண்ணருள்சுரந்துதறுகண்ணரிசுமந்தகனகத்தவிசின்மேல்
பெண்ணரசிருந்தனள்பிறங்குசடிலம்புடைபெயர்ந்தலையவே (௧௨௪)

அம்பொனின்மணித்தவிசினம்பிகையிருப்பவாசர்க்கரசனும்
கம்பகரடக்களிறுவெம்பரிபதாதிகள்கடைத்தலைநிறீஇக்
கும்பமுனிதம்பியொடருந்தவர்குலத்தரசர்கூடிவரவே
வம்புதுடிகொண்டமுலைமங்கைதிருமுன்றிலிடைவந்துதொழுதான்.

வேறு.

நற்றேரைவிட்டிறங்கிநாயகியைத் தொழுதிறைஞ்சிநண்ணிராசன், முற்றேரைநோக்குதலுமுடிவேந்தன் கருணைவிழிமுனைகடாக்கக், கற்றேருங்கற்பரியுங்கற்சிலையுங் கற்கணையுங்கன்னிமுன்னே, பொற்றேரும்பொற்பரியும்பொற்சிலையும் பொற்கணையும்பொலிந்தவன்றே. (௧௨௫)

முன்னாளிற்கல்லானமுடித்தேரும்வாம்பரியுமுரிவில்லும்
பொன்னாகக்கண்டிறைவன்புந்திமகிழ்ந்ததிசயித்துப்புளகமெய்தி
என்னாகவந்ததிதுவெனக்கருதுமவ்வளவிலிருண்டமேனிப்
பொன்னாருங்களபமுலைப்புரிசடையாள்மணிவாயிற்புறத்துவந்தாள்.

மாதங்கிவந்திடலுமலர்க்கரங்கண்முடிமீதுவைத்துச்செம்பொற்
பாதங்கண்மிசைவீழ்ந்துபணிந்தெனது தவப்பயர்தான்பலித்ததென்
பூதங்கள்விளையாடுந்திருவாயிற்கற்றேர்போய்ப்பொற்றேரான [னைப்
தீதென்றுநீயருள்வாயெனக்கேட்கக்குமரியெடுத்தியம்பலுற்றாள். ()

உவராழிமண்ணாசையொழித்தகலுமடல்வருணனுலகில்யாரும், கவராதுபொற்றேரைக்கற்றேராகச்சபித்துக்கண்முன்காட்டி, அவரானுமிதுநோக்கினிவ்வுருப்போய்ப்பண்டையுருவெய்துமாகில், அவராகுமிதற்குரியோரவர்தமக்கேகொடுப்பதெனவலித்துப்போனான்.

மன்னாகேளென்னுடையமணிவாயிறனில் வருணன்வைத்துப் போன, அந்நாடொட்டிந்நெடுநாளளவாகக்கல்லாய் நின்னருட்கண்

னோக்கப், பொன்னானசெழுந்தேர் நீகொடுபோவென்றினிதளிக்கப் புகழ்ந்தயோத்தி, நன்னாடன்றான்வாங்கிநவமணித்தேரதிலேறிநடத் தினானே. (௧௫௦)

வேறு.

வாள்செலச்சிலைசெலமாதரார்செல
ஆள்செலத்தேர்செலவானைசெல்லநீள்
தோள்செலுஞ்சுடர்மணித்தொடியினான்பல
நாள்செலக்கனோசிமாநாட்டைநண்ணினான். (௧௫௧)

தாழையின்முதிர்பழங்கமுகின்றாறுதே
மாழையின்கனிவிழைவருக்கையின்பலம்
கூழைவெண்குரங்கயல்குதிப்பக்கூன்குலை
வாழையின்கனியெலாமடியவீழுமால் (௧௫௨)

கூன்கடுவன்றலைகுரும்பைவீழ்தலின்
தீன்கனிவருக்கையிற்புதைத்தசெம்முக
வான்கவிவால்பிடித்திழுத்துமந்திமுன்
தான்கொடுகதலியம்படப்பைசாருமால். (௧௫௩)

பலவளைமணிகளும்பதுமராகமும்
நிலவெழுவெயிலெழுநீலம்பங்கயம்
புலரியுமாலையும்புகுதலில்லென
மலர்தலுங்குவிதலுமறந்தவாவியே. (௧௫௪)

தாள்களுந்துடைகளுந்தையலார்மணித்
தோள்களுமுலைகளுஞ்சோலைகாட்டுவ
நீள்கணுங்குழைகளுமுகமுநீலக்கண்
வாள்களும்வாய்களும்வாவிகாட்டுமே. (௧௫

திருதிகென்றலைபுனன்மதகுரிந்தவும்
பகுதியுட்பகுதியும்பற்றறாதன

வெகுதிரைப்பேரொலிவேலையேழுமுள்
புகுதினுநிறைவுறுவளவில்பொய்கையே. (௧௩௬)

துகிரினுஞ்சிவந்ததாட்டுணைவெண்பேடையோ
டுகிரினுமலகினுமொடுக்குமீனுடன்
திகிரியம்புள்புடைபெய*ரத்திண்சிறை
பகிரினீர்கடையுகப்பௌவமன்னதே. (௧௩௭)

கூடியபிறநலக்கொள்கைகண்டழன்
றூடியவோதிமமொளித்ததாமரை
வாடியவாறுகண்டாவிமாய்ந்திட
தேடியசேவறன்னுளந்தெளிந்திடுமே. (௧௩௮)

காற்றினிற்கலைந்துயர்சினையிற்கான்றதேன்
ஆற்றினிற்பரந்தகல்வாவியணுகியே
சேற்றினிற்பழுகியவயலிற்செந்நெலின்
நாற்றினிற்பரப்பணநாலுபாலுமே. (௧௩௯)

பிணையனவிழியினார்நடைபெறக்கெழீஇத்
துணைபுணரோதிமந்தொடர்ந்துபின்வரத்
திணைபலபடர்ந்துதிண்டேரிழிந்துமன்
இணைமருப்பியானையினெருத்தத்தேறினான். (௧௪௦)

இடியெனமுழங்கிடவியம்பியங்களால்
வெடிபடுமுலகமும்விசும்புமென்னநீள்
கொடிகளுங்குடைகளுங்குழுமக்கொற்றவன்
கடிகமழ்கங்கையின்கரையைநண்ணினான். (௧௪௧)

முன்னரோர்முனிவரன்மொழிந்தசாபத்தால்
பன்னகத்தரிதுயில்பாற்கடற்கணே
பொன்னகர்வளனெலாம்புக்கதாமென
மன்னவன்கங்கையில்வந்திறங்கினான். (௧௪௨)

* அத்திண்சிறை - அத்திண்ணியபொய்கைக்கரை.

செந்நிறச்சுண்ணமுந்திமிர்ந்தசாந்தமும்
நன்னிறக்குங்குமச்சுவடுநண்ணிவான்
வின்னிறமொத்ததுவிமலவீத்தமே. (௧௪௫)

வரைசெறிவேழமுமாவின்கூட்டமும்
விரைசெறிதார்ப்புயவேந்தமக்களும்
பிரசமாமலர்க்குழற்பேதைமாதரும்
அரசனுங்கங்கைநீராடியேறினர். (௧௪௪)

அங்கைவேன்மன்னவனருளினேகினேன்
மங்கைதன்கற்பினேவமைச்சர்மாண்பினே
வெங்கயற்கட்பெருவெள்ளத்தோடும்போய்க்
கங்கையைப்பெரும்படைக்கடல்கடந்ததே. (௧௪௫)

அன்னமாடுந்துறையகழும்வாவியும்
வன்னமாமதில்களுமாடகூடமும்
பொன்னின்மாமேடையும்பொலிந்துதோன்றவக்
கன்னமாபுரிதனைக்கண்ணினேக்கினான். (௧௪௬)

இந்நகரெந்நகரென்றுகூறவே
முன்னவற்குணர்த்தியமுனிவர்நோக்கியே
மன்னவசொன்னவவ்வல்லிவாழ்திரு
நன்னகரீதெனநயந்துகூறினர். (௧௪௭)

வல்லிதனகரிதுமன்னவாவெனச்
சொல்லியபொழுதினிற்றுணுக்கமெய்தியே
அல்லியந்தாரினனவளையின்புறப்
புல்லியகலவியிற்புளகமெய்தினன். (௧௪௮)

வேறு.

சனந்தொடர்ந்துபின்வரத்தடங்கடந்துசென்றவெஞ்
சினந்தொடர்ந்தவெம்பரித்திரிசங்குதந்தமைந்தனும்

மனந்தொடர்ந்துகொண்டவல்லிமன்னுகன்னமாபுரிக்
கனந்தொடர்ந்தமாமதிற்கபாடவாயிலெய்தினான். (௧௪௯)

மடங்கலூற்றவாயிலேறுமகரதோரணங்களும்
* இடங்கணிப்பொறிப்பரப்புமெண்ணிறந்தமாமதிள்
கிடங்கடங்கநீலமுங்கிளர்ந்தெழுந்தகஞ்சமும்
இடங்கருஞ்சுணங்கமீனினங்களும்பெருத்தவே. (௧௫௦)

நிகரிலாதபொற்குவட்டையுட்டிறந்துநீணிரை
நகரியெங்கும்வைத்ததொத்தநகருமாடகூடமும்
சிகரநேமிவரைதிரித்ததன்புறஞ்செறித்தநீர்
மகரவாரியொத்தசெம்பொன்மதிலுணீள்கிடங்குமே. (௧௫௧)

பங்கயச்சகாயவண்ணறன்குலப்பகீரதன்
அங்கண்வானகத்துநின்றிராறழைத்தனன்முனைய
மங்கையைப்பயந்தமன்னனமாநகர்க்குளெண்ணிலாக்
கங்கைதந்துளாரெனக்கலித்தகேதனங்களே. (௧௫௨)

விண்டலத்துமாதரிந்தமேதினிக்கிறங்கவும்
மண்டலத்துமாதர்வானின்வண்மைசென்றுகாணவும்
கொண்டல்விண்டெழச்சமைத்தகூடமாடகோபுரம்
அண்டரண்டமூடறுத்ததற்குமப்புறத்தவே. (௧௫௩)

நெடியமாடநேத்திரத்தினிரைவகுத்தசாளரத்
திடையின்மாதரொழின்முகங்களெங்கணும்விளங்குதல்
கடிகொள்வெற்பின்மீதெழுந்தகதிர்தனைத்தனைத்தின்
நடுவுதித்தவொளிர்மதிக்குநிகரெனப்பொலிந்தவே. (௧௫௪)

அலங்குறுங்குவேலைதன்னினீகவெள்ளமர்ந்தகர்ப்
பொலங்கலந்தமாமதிற்புறம்பெலாநிறைந்துபின்

* இடங்கணி - சங்கிலி.

நிலங்கவர்ந்திடச்செறிந்தநீலவேலையேழுமோர்
பிலங்கலந்ததென்னவேபெருத்தவாயில்புக்கதே. (கடுரு)

தோரணத்துநீழன்மன்னுசோதிரத்நவேதிகைப்
பூரணக்குடங்களும்பொலிந்திலங்குதீபமும்
காரணத்தமைச்சர்தந்தெருக்களுங்கடந்துபோய்
வாரணத்திழிந்துமன்னன்மண்டபத்திலெய்தினான். (கடுசு)

தருவிருந்தகாளிருந்தசபைகொண்மண்டபத்திலே
மருகனங்குபுகுதலுந்தன்மனமகிழ்ந்துமதிதயன்
அருகிருந்தவாசரோடுமாதனத்திழிந்துபோய்
இருகரங்கனிறுகண்பினெதிர்நடந்துதழுவினான். (கடுஎ

முனிவருக்குமாசருக்குமுழுதுமாதனங்கொடுத்
தினிதுகூறியவவணியாவருமிருந்தபின்
அரிசநேசேலமதிதயன்றனாதனத்திருந்துளம்
கனியவாசமுகமலர்ந்துகண்களிப்பநோக்கினான். (கடுஅ)

வெற்றிமன்னனும்மணம்விரும்பிவந்தமன்னரும்
சுற்றிநின்றமாதருந்துலங்குதாரமைச்சரும்
பற்றியுற்றெதிர்ந்தகண்கள்பசுமரத்திலாணிபோல்
சற்றிமைக்கிலாதுவள்ளறன்முகத்தைநோக்கினார். (கடுகூ)

வேறு.

மாந்தருமாதராருமன்னருமமைச்சர்தாமும்
ஏந்தலைப்பார்த்தகண்களிமைத்திலர்பிறிதுநோக்கார்
மாந்தளிரனையமேனிவாணுதலிரதியென்பாள்
காந்தனுமிவனேவேறுகாமனுமுளனோவென்பார். (கசுo)

சித்திரம்போலமன்னனிருந்தனன்றிகைத்தும்வேறோர்
உத்தரமுரையானாகியுள்ளுளேமகிழ்ச்சிபொங்க

அத்திரவிழியாண்மேனுளருந்தவமுடையளாயின்
இத்திருப்புயமுமார்புமெய்துமென்றெண்ணிநைந்தான். (கசுக)

சிவனமக்கருளிசசெய்ததிருவுளப்படியேகாண்ப
திவன்றனக்கெய்துமாயினேழைபுமியானுஞ்செய்த
தவமுமாதவமாமல்லாற்றவமுமென்றனையைப்பேறும்
அவமெனவெண்ணியெணணியளவிலாதழுங்கலுற்றான். (கசுஉ)

காளைதன்முகத்தைநோக்கிக்கடவதொன்றில்லையெம்மால்
வேளைவென்றிலகுகண்ணுன்விதித்தவாறளித்தும்யாமே
வாளைவென்றிலங்குகண்ணுண்மாமணக்காவணத்துள்
நாளைவந்தெய்துமின்றுநடமினுஞ்சார்பிலென்றான். (கசுந)

கைத்தலஞ்சற்றுநீட்டிமதிதயன்கட்டுரைக்கத்
தத்தமக்களித்தசார்பிற்சார்ந்தனாரசரெல்லாம்
உத்தமகுணத்தினனுமோங்குமண்டபத்தினீங்கி
மத்தகக்களிற்றிமேலறிமாளிகையிடத்துச்சார்ந்தான். (கசுச)

வாரணத்தண்ணலேகமதிதயனையையிலுற்ற
காரணமனைத்துங்கேட்டுக்காரிகையொருத்தியோடித்
தோரணவாயினீங்கித்துடியிடையமுதசசெஞ்சொற்
பூரணக்களபக்கொங்கைப்பூவைதன்கோயில்புக்காள். (கசுரு)

புக்கவடன்னைநோக்கிப்பொற்கொடியதிசயித்திங்
கிக்கணத்தோடிவந்தவருத்தியென்னியம்புகென்ன
அக்கணத்தரிவைசெம்பொனடியைத்தன்முடியிற்சூட்டிப்
பக்கமுமிடமும்பார்த்துப்பவளவாய்ப்பதைத்துரைப்பாள். (கசுசு)

செந்திருவனையாயுன்னைத்திருமணமுடிக்கவேண்டி
வந்தனரனேகராந்தமன்னவன்சபையிற்புக்கார்
அந்தமன்னவர்கடம்மிலடலரிச்சந்திரன்றன்
சந்தரமுகங்கண்டிங்கேவரமனந்துணிந்திலேனே. (கசுஎ)

உடுக்குநீருலகமேழுமொன்றின்மேலொன்றைவைத்தே
அடுக்குநீள்புயமுஞ்செய்யாளாவியுமனமுந்தாவிப்
படுக்கும்வாள்விழியுமார்பும்பரிசிலர்மகிழநாளும்
கொடுக்கும்வார்கரமுமாதருளமெலாங்கொள்ளைகொள்ளும். (௧௬௮)

திருக்கிளர்முகமும்வேர்வுஞ்சிறந்தசெம்பவளவாயும்
மருக்கிளர்மாலைமார்புமகரகுண்டலமுங்காதும்
சுருக்கியமருங்குங்கண்டாற்றுடியிடைமடவாராவி
இருக்கினுமிருக்குமில்லாதிறக்கினுமிறக்குமன்றே. (௧௬௯)

கிரந்தரவுரோமரேகைநீலமும்வயிறுமார்பும்
புரந்தரசாபமொத்தபுருவமுமுதலும்பட்ட
மரந்தழைத்திடநகைக்குமுறுவலுமாயன்றன்பால்
கரந்தவாரமுதச்சொல்லுங்கந்தற்குமில்லைமன்றே. (௧௭௦)

இதையமூடுருக்குமின்பத்திறைவனையுற்றுநோக்கித்
ததையுமாமலர்த்தார்வேந்தர்தங்களைச்சூழநோக்கின்
புதையிருள்கடிந்தவேலைப்புவியினைவிளக்குஞ்சோதி
உதயனைக்கண்டகண்கட்குடுக்களைக்கண்டதாமே. (௧௭௧)

பின்னைநேரிடையாள்கூறக்கேட்டலும்வேந்தன்பாவை
தன்னையுமறந்தாளிட்டசங்கமுங்கலையுநீத்தாள்
அன்னையைமறந்தாள்பேசும்வாசகமயர்ந்தாள்வேறு
பின்னையுமிழந்தாள்காதல்பெற்றதொன்றன்றியின்றே. (௧௭௨)

வாசமென்கலவைச்சேறுநானமும்புழுகும்வாரிப்
பூசவுமேனியெங்கும்பொருக்கெழவியன்சாந்தாற்றி
வீசவுமென்மேற்காமவெந்தழன்மண்டப்பின்னும்
ஆசையங்கடலுட்டாழ்ந்தாளருக்கனுங்கடலுட்டாழ்ந்தான். (௧௭௩)

அறநெடுஞ்செங்கோல்வேந்தராண்டபார்பிறர்க்கிரங்கா
மறநெடுங்கொடுங்கோல்வேந்தர்க்களித்தவர்வனம்புக்காற்போல்

புறநெடுங்கிரிசூழ்வேலைப்புவியெலாங்கொடியநீல
நிறநெடுங்கங்குற்காக்கிநெடும்பகனீங்கிற்றன்றே. (கஎ௫)

மஞ்சடைவானமீருய்மண்முதலாயபூதம்
அஞ்சடையப்பேரூழியகண்டபூரணமாய்நின்ற
ரஞ்சடைகண்டத்தண்ணளுடைகாடித்தஞான்று
செஞ்சடைவிரிந்ததென்னச்செறிந்ததுசெக்கர்வானம். (கஎ௬)

நாட்படத்தருமச்செங்கோனடத்தியவேந்தர்நாட்போய்த்
தோட்படுத்தவர்தம்மக்கள்சுடர்முடிசூடுமுன்னர்
கோட்படையிழைத்திருந்தகுறுநிலவேந்தருய்க்கும்
வாட்படைபுகுந்ததென்னவந்ததுமருள்கூர்மாலை. (கஎ௬)

மறைந்ததுபரிதிமேன்மேல்வளர்ந்ததுகங்குற்காலம்
அறைந்ததுவாடைவானத்தரும்பினவனந்தமீன்கள்
குறைந்ததுகொடியமாலைகூரிருட்பிழம்புதுன்றி
நிறைந்ததுநீலவேலைநிலமெலாங்கவர்ந்ததென்ன. (கஎஎ)

அருகியமருங்குற்பேதையழன்றெழுகாமத்தியால்
உருகியவுள்ளந்தாவியுலகெலாமேவிக்காய்ந்து
கருகியதென்னத்தேவர்கடைந்தநாளெழுந்தவாலம்
பெருகியதென்றுமென்னப்பிறங்கிருள்செறிந்ததன்றே. (கஎஅ)

முன்னரேபொருதுவெல்லாத்தலைவரைமுனிந்துசெங்கோன்
மன்னவர்கோபங்கொண்டுவாள்விதிர்த்தெழுந்ததேபோல்
இன்னமும் வடஞவியிறந்திலதென்றுசீறித்
துன்னிருட்பிரியநூறியெழுந்ததுசுடர்வெண்டிங்கள். (கஎக)

இருளையொத்திலங்குமேனியிறைகடல்கடைந்தகாலம்
பொருளையுற்றிடாதவெல்லாம்புரந்தராதியர்க்குநல்கி
உருளவேதிரட்டிவாரியுள்வைத்தவமுதசாரத்
திரளைமேன்மிதந்ததென்னத்திங்கள்வந்தெழுந்ததன்றே. (கஅ0)

திங்கள்வெண்குடைக்கீழ்த்தென்றற்றேர்மிசையேறிவாரி
மங்கலமுரசமார்ப்பமகரகேதனநின்றோங்கக்
கங்குல்வெங்களிறுசூழக்கடுங்கிளிப்புரவிதூண்டி
அங்கண்மாஞாலமெல்லாமனங்கவேள்பவனிவந்தான். (௧௮௧)

கருப்புவார்சிலையையூன்றிக்கால்வளைத்திசைகள்பாடுஞ்
சுருப்புநாணேற்றிக்கஞ்சந்தளவுடனசோகஞ்சூதம்
அருப்புவார்கணைகடூணியகத்திடையெடுத்தொன்றொன்று
விருப்பினால்வருந்துமானைவெவ்வினைப்பூசலிட்டான். (௧௮௨)

மாரவேள்பகழிமாரிவல்லியினுடலைமுற்றும்
ஈரவேதிங்கட்செந்தீயெரிக்கவேயெரியாதாகி
வீரவேளனையான்றந்தவேட்கைமீதூரக்கண்ணீர்
சோரவேயமளிமீதுசுழன்றுவீழ்ந்தினையசொல்வாள். (௧௮௩)

வேறு.

கண்ணிலாப்பாதகக்காமனெய்தவெம்
புண்ணிலாருயிர்பொடித்தகலப்போலவா
றெண்ணிலாதெனைச்சினந்தெழுந்தவெவ்வினை
வெண்ணிலாவேயிதுவீரமல்லவே. (௧௮௪)

வேறு.

உன்னைக்கொன்றன்றருவிலியாக்கினோன்
றன்னைக்கொல்லுவதாண்மைத்தனமலால்
பின்னைக்கொல்வதென்பெண்பிறப்பாகிய
என்னைக்கொல்லுவதேதமைப்பாலதே (௧௮௫)

உருவக்காமன்றனித்தவுடனனைச்
செருவிற்கொல்லவெழுந்தவெண்டிங்காள்
ஒருவற்கீவதற்கோருயிரன்றியெற்
கிருவர்க்கீயவிரண்டுயிரில்லையே (௧௮௬)

முன்னினைந்தலர்தொட்டவன்மூண்டபோர்
தன்னினைந்துதளர்ந்தவென்மேனியைத்
தின்னினின்சலதின்கலைத்திங்களே
என்னினைந்தெனையிப்படிகாய்கின்றாய். (கஅஎ)

உன்னைக்காய்ந்தபணிக்குறவென்றகொல்
என்னைக்காய்ந்தனையேந்திளந்திங்களே
முன்னைக்காய்ந்திலையென்னுயிர்முற்றிய
பின்னைக்காய்ந்துபிழைப்பிக்கவல்லையோ. (கஅஅ)

அருத்தியோடுதம்மென்முலையன்பர்தோள்
பொருத்தியோகைகொண்டாடுவர்பூவைமார்
வருத்தியோய்வறவாட்டினையென்னையான்
ஒருத்தியோவுனக்குப்பகைகங்குலே (கஅகூ)

வெங்கையாதபன்வீழ்தலும்யானுனை
செங்கைகூப்பியதீவினைநோக்கியே
அங்கையாலெடுத்தாரமுற்றொர்விடேன்
கொங்கைமீதுகொளுத்தினை திங்களே (ககூ0)

குன்றலாவுகொடுந்திறற்றென்றலை
கன்றலாவியகண்ணகல்விண்ணெலாம்
சென்றலாவுதிரைக்கடலன்னமால்
நின்றலாவுமென்னெஞ்சிடம்போதுமோ. (ககூக)

போதநோதகவாக்கியும்போகிலாய்
பாதநோதகவேபணிக்கின்றதிலை
* சூதனேகமுற்றொன்றியுதிக்குநாட்
காதநோதலுங்கற்றிலைபோலுமால். (ககூஉ)

* சூதன் - அருணன்.

பரவுந்திங்களும்பாய்திரையோதையின்
வரவும்போர்வின்மதனனும்போகிலா
இரவொன்றேகினெற்கியாருமொப்பில்லையே. (௧௧௩)

பூழிசென்றபுரண்டபொற்பாவையைத்
தோழிசென்றுதெருட்டலுந்தோழியை
ஆழிசென்¶றென்றடைந்தபினெத்தனை
ஊழிசென்றவென்றெண்ணுதல்கேட்டனள். (௧௧௪)

தோழிகைத்தலங்கூப்பியித்துன்னிருள்
நாழிகைக்கிடமே†நலங்கேலென
வாழிகைப்பிடிவந்துமன்றவெனுக்
கோழிகைத்தலத்தைக்கொட்டிக்கூவிற்றே. (௧௧௫)

வேயடங்கினவேலையடங்கின
தீயடங்கினதிங்களுங்கங்குலும்
பேயடங்கினமன்மதன்போரெலாம்
வாயடங்கினவண்குமுதங்களே. (௧௧௬)

‡காரிசங்கந்துயிலெழக்கன்னி○மால்
பாரிசங்கம்பொறுத்ததுபார்க்கவே
வாரிசங்கமெழுந்துமுழங்கிட
வாரிசங்கண்மலர்ந்தனவெங்குமே. (௧௧௭)

கொல்வருபினுங்கோதைதபச்சந்திரன்
வெல்வருபினுமேலவனைசெயல்

¶ என்று - சூரியன். † நலங்கேளென என்றும் பாடம்.
‡ காரிசங்கம் - காக்கைக்கூட்டம்.
○ மால்பாரி - பூமிதேவி.

சொல்வனானென்றுதுண்ணெனச்செங்கதிர்ச்
செல்வனாழியந்தேர்மிசைத்தோன்றினான். (௧௯௮)

சோலையெங்குந்தொழுதிகளார்த்தன
ஆலயந்தொறுஞ்சங்கங்களார்த்தன
மாலைவெண்குடைமன்னவர்முன்றில்வாய்க்
காலைமாமுரசங்கள்கறங்கின (௧௯௯)

முன்னமன்னன்முகுர்த்தமொரேழெனச்
சொன்னநற்றினம்வந்துதொடங்கலும்
மன்னனும்மறையோர்களு*மாதரும்
கன்னலந்திருக்காவணத்தெய்தினார். (௨௦௦)

வேந்தரீண்டினர்வேதியரீண்டினர்
மாந்தரீண்டினர்மங்கையரீண்டினர்
ஆய்ந்தநீதியமைச்சருமவ்வவர்
சேர்ந்தசேனையுஞ்சேரவந்தீண்டின. (௨௦௧)

வாகையுற்றமதனொருபால்வர
ஓகையுற்றவணைபோலரதிட்டேவரப்
பாகையுற்றபணிமொழிப்பைந்தொடித்
தோகையைக்கொடுதோழியர்தோன்றினார். (௨௦௨)

அங்கையிற்பொலிசங்கினமார்த்தெழச்
செங்கயற்கண்டிருக்குழையைப்பொரக்
கொங்கையென்றிருகுன்றுசுமந்தெழின்
மங்கைமாளிகைவாயிலின்மேவினாள். (௨௦௩)

வல்லெனப்புடைக்குந்தனவன்பொறைக்
கில்லெனக்கருதும்மருங்கிற்றிகம்

---

* காதரும் என்றும்பாடம்.

மெல்லெனப்பதம்வைத்துமிதித்துமுன்
செல்லெனப்பொற்சிலம்புபுலம்புமால். (உ0௭

நீடிவார்ந் துநெறித்தகுழற்சிகை
ஓடியுட்சுழியும்புயலொத்ததால்
ஆடிநோக்கியணிந்தவணிச்சுடர்
கோடிசூரியர்கூடியதொத்ததே. (உ0௮

நச்சுக்கட்டியுநல்லமுதும்மிக
வைச்சுக்கட்டியமாமுலையாவுல
கச்சுக்கட்டழியும்மழியும்மெனக்
கச்சுக்கட்டிமறைத்தனர்கண்ணையே (உ0௯

ஆதிநாலுமனைத்துலகுங்கெடும்
நீதியன்றிவண்செல்வதென்னவே
காதியோடியகணகனகாதுப்பாப்ச
சோதிவார்குழைதொட்டுமறிக்கவே. (உ௧0)

காவென்றெண்ணுங்கரததரிசசந்திர
வாவென்றெண்ணறுமன்னனையப்புறம்
போவென்றெண்ணிப்புகல்கின்றபோலவே
தாவுசோதிக்கலாபந்தழங்கவே. (உ௧௧)

கைத்தலத்துணைவீசிககதிர்மணிப்
பத்திபின்னுமுன்னுஞ்சென்றபாயவே
எய்த்தநுண்ணிடையிற்றிடுமென்றுமேல்
மொய்த்தவண்டுகலைந் துமுழங்கவே. (உ௧௨)

சென்னிகின்திருச்சீறடியட்டும்வான்
மின்னினுலமைத்தன்னசெம்மேனியைப்
பொன்னினுன்மணியாற்புனைந்தேயெழிற்
கன்னிநன்மணக்காவணத்தெய்தினுள். (உ௧௩)

பெடைநடைத்திருப்பெண்ணரசெய்திய
திடையினின்றவரோத்தியியம்பிடக்
கடையுகத்திற்கடல்கிளர்ந்ததாலென
அடையமன்னவராலித்தெழுந்தனர். (௨௧௧)

தேரினேறித்திசையெங்கணும்வரப்
போரின்வீரர்கள்போமமென்றதிரக்கெழு
மூரிவீரமுரசுமுங்காளமும
பேரியுஞ்சங்கும்பீலியுமார்த்தவே. (௨௧௨)

தாளமத்தளந்தண்டைசையாழொரு
நீளமட்டுநிறைந்தனசக்கர
வாளமட்டுமலிந்தன எண்ட
கோளமட்டுகொடிததிராளுற்றவே (௨௧௩)

பாரினின்றுபரந்தெழுந்தணடர்தம்
ஏரிளையுயர்ந்தபெருந்துகா
காரினுணடிரிககண்மறைந்தெணடிசை
மூரியானைமதத்துளார்ற்றுற ௨௧௪

யானையும்பரிமாவிரதமும்
தேனைவென்றதிருமொழிமாதரும
ஏனைநின்றவிருபிறப்பாளரும்
சேனையுந்திசைதோறஞ்செறிந்தவே (௨௧௫

இமக்குடங்களிரண்டுதாவெனா
சுமக்குமென்கொடிட்டிஞ்சயபவர்
எமக்கெமக்கெனவொண்ணிவருமவர்
தமக்குப்பின்னரிசசங்கி [illegible] ன (௨௧௬

அன்னகாவையினககைநீட்டிடே,
கன்னன்மாமொழிக்காரிகைகொழிமார்

மன்னர்ராமமுநாடும்வழிகளும்
இன்னதின்னதெனவெடுத்தோதுவார். (உகஎ)

## வேறு.

அதிபாரதனபாரவதிரூபமலர்மானையனையாயிவன்
நதிபாயவுயர்போதினறைபாயசிறையாதசிறைவாவியில்
மதியாமல்வலைமீறிவெடிபோனபருவாளைவளைபூகமேல்
குதிபாயமடல்கீறிவிழுதேறல்கரைசாடுகுடநாடனே. (உகஅ)

இருணாறுநஞ்சொத்தவிழியாய்துவண்டெய்த்தவிடையாயிவன்
சுருணாகபந்தத்தினியல்பாமருஞ்சித்ரதொடியேவியே
முரணாரமன்றிட்டமகவானெடுங்கொற்றமுடிசாடினேன்
சரணாரவிந்தத்துமகராலயந்*துற்றதமிழ்மாறனே. (உககூ)

மலிவாசமலர்பூசியபரிபாடுநறையோதிமயிலேயிவன்
கலியேறுதிரைமோதமுவராழியுலகேழுமுடனாகவே
வலியோர்களெரிமீபாரைநலியாமலசையாதமணிவாயிலான்
புலியேறுவடமேருகிரிமீதில்விடுமீளிபுனனாடனே. (உஉ0)

விடமேவுகடல்போலுமடனீடுகணைபோலும்விழிமாதராய்
வடமேருகிரிபோலுமுயர்தேரினிடையேறிவருகோமகன்
தடமாடமடமாதர்தனபாரமிகரானதடவாயிலார்
குடமேறிவளையாரமணியீனுமணிமேவுகுருநாடனே. (உஉக)

முருகோடுபுழுகோடுபணியோடுபிரியாதமுலையாயிவன்
பொருகோடிகொடுவாசமலர்சாடியிளமேதிபுனல்பாயவே
ஒருகோடிகயலோடவொருகோடியளியோடவொருகோடிவெண்
குருகோடவொருகோடிசினவாளைகரையேறுகுருதேசனே. (உஉஉ)

* துற்றல் - நெருக்கல்.

முயன்றுவியனுரைதுவியர்தாவுமதிபோலுமுகமாதராய்
புயன்றுவுமுயாதேரினிடையேறிவருமாலைபுனைமார்பினன்
கயன்றுவநறுநீலமுகைபீறிமடையூடுகமழ்தேறல்போய்
வயன்றுழவயலூடுவளர்சாலிகதிர்தாழுமகதேசனே. (௨௨௪)

மூளையேறுவண்கிரணவிருதோணறுங்குதலைமொழிமாதராய்
உளையேறதிண்புரவிகரிசூழவிங்குவருமுயர்தேரினன்
தளையேறுகின்றவயறனிலெயெழுங்கமலதளமீதிலே
வளையினுமொண்டராளமதிபோலெழுமுகவுடவளநாடனே. (௨௨௫)

அரிசிந்துவிழியாயிவணிதேரின்மிசையேறியடைகோமகன்
விரிசிந்துவினையுண்டவொருசிந்துமுனிதங்குகிரிசிந்தகால ம்
பொரிசிந்தவலர்புன்குபொருள்சிந்தவலர் கொன்றைபொலிவண்டின
வரிசிந்தமகரந்தமலர்சிந்தவருசிந்துவளநாடனே (௨௨௬)

சுராங்கமிகநொந்துகடைகின்றதினம்வந்தசுதையென்சொலாய்
நராகசமலைகொண்டுசதுரங்கவிரிசிந்துநடமிந்தமால்
பராங்கமிகவென்றுவினைகொண்டுசிலைகொண்டுபடைவந்தார்
வராங்கதரர்கொன்றமதனங்கமுகுமங்கவளநாடனே. (௨௨௭)

தேஞ்சாலுமிருகுன்றுகளையஞ்சுமிடையஞ்சதிருவேயிவன்
* ஈஞ்சாலுமிறவாலும்மிறலானதிடைபீறியிழிதேறலும்
காய்ஞ்சாலுகதிர்சாடமாஞ்சோலையிடைசோர்புகனியூறலும்
பாய்ஞ்சாலவயலூறுபூஞ்சாலிவிளைவேறுபாஞ்சாலனே. (௨௨௮)

தேம்போதிலார்ந்தாதுபூம்பாளைநீங்காததேங்கோதையாய்
கூம்போடிவரன்றேயுமான்றேரிலீண்டாசைகூர்ந்தேறினோன்
தூம்போடுகூன்கோடுவார்ந்தோடியீன்றேரிதோய்ந்தேறவே
காம்போடுசேம்போடுசேர்ந்தாரமார்ந்தோடுகாந்தாரனே. (௨௨௯)

* ஈஞ்சு - ஈந்து. ○ இறல் - இறாலின்விகாரம்.

அடர்ந்தோடிநெஞ்சயகவர்ந்தேவருங்கண்ணணங்கேயிவன்
தடந்தோறுமங்கங்குழன்றானருந்துஞ்சயங்கூர்கராத்
தொடர்ந்தோடவெருகுயகலேந்தோடியஞ்சுஞ்சுணங்காழிநீர்
கடந்தோடியென்றுங்கரும்பூடுறயகுங்கலிங்கேசனே. (௨௨௯)

இகழ்ந்திடுமேதன்புவிபுரந்திடவளர்ந்தெழுமிளங்கொடியிவன்
நிகழ்ந்தவாரவிர்தமணிதண்கமுனியெனக்கணுநிறைந்துநிரைவப்
புகழ்ந்தகடவின்கணவிரும்பணகுளம்பிடைபுதைந்துமுளையின்
அகழ்ந்துழுதடங்கொழுநெடுநர்தலைமடிந்திடுமேவந்தியரசே. (௨௩0)

புத்தமுதமொத்தமொழிவெற்பைநிகரொத்ததனபொற்றொடியிவன்
சுத்தரிபுணக்குசலர்சொற்கரிவழுக்கரியசுத்தநெறியால்
முத்தணிநகைச்சியர்தனத்திடைநிமிர்த்தெறிமுழுக்கலவையில்
மத்தகரடகரிவழுக்குறுதெருச்செறியுமத்திரர்பிரான். (௨௩௧)

கருமச்சமனையொத்தகொலைவைத்த*முலைபெற்றகளிமாதராய்
0 பெருமச்சமருமிக்கவிரதத்தினிடையுற்றபெருமானிவன்
இருமச்சநயனத்தர்முலைமுத்தில்விழுமச்சவிடையிற்றெனை
வருமச்சமலர்தற்பமனமச்சமுறுமச்சவளநாடனே. (௨௩௨)

கடஞ்கமொருகோடிவயவாசிபலகோடிகடல்போலவே
உடஞ்கவரமேகவளவாயமொருதேரிலுறுகோமகன்
மிடஞ்கமடல்பூகவிரிபாளையெனநாணிவெளிமேய்கிலா
மடஞ்கமிசைதோகைமயிலேறிமலருமெறைகேகெயன். (௨௩௩)

வாடிவிழுநூலுமிருமால்வரையுநேரிடையுமாமுலையுமாச்
சூடி "கவாணிழியஞாலம்விளையாடிவருதோகைமயிலே
ஆடிநிழல்போலுனுளமேவியணிதேர்மிசையுமாகிவருவோன்
நாடியறநாளுமுயர்கோசலமதானகுலநாடனிவனே. (௨௩௪)

---

* விழிபெற்ற களிமாதராய் எனவும் பாடம்.
0 பெருமச்சு - பெரியமச்சு.

வேறு.

மந்தரமனையதோள்வள்ளல்பேர்சொலச்
சுந்தரத்தோகைமார்தோளைத்தாழ்த்தியச்
சந்திரமதியரிச்சந்திரன்றனைக்
கந்தரநீட்டியுட்கருத்துநோக்கினாள். (௨௩௫)

அங்கைவேன்மன்னனுமாசைமீக்கொள
மங்கைதன்பங்கயவதனநோக்கினான்
செங்கயற்கண்ணினாடிருக்கழுத்தினில்
மங்கலநாணுறீஇவயங்கக்கண்டனன். (௨௩௬)

கன்னியென்றெண்ணினங்கன்னியோவலள்
முன்னமேமங்கலம்பூண்டமொய்குழல்
இன்னமுமொருவருக்கெய்துமோவென
மன்னவன்மாதுலற்குரைவழங்கினான். (௨௩௭)

பொறுத்துமுன்மங்கலம்பூண்டபேதையை
மறுத்திரண்டாவதுமணமுடிப்பரோ
சிறுத்தவர்செய்தொழிறிரைவரைப்பிதில்
சிறுத்தினீர்நீரெனாநெடிதுகூறினான். (௨௩௮)

வள்ளலீதுரைத்தலுமதிதயன்றனை
துள்ளம்விட்டோங்கியவுவகையம்பெரு
வெள்ளமுள்ளடக்கியேவேந்தர்காளிவர்
கள்ளமோமெய்ம்மையோகட்டுரைத்ததே. (௨௩௯)

தையலாள்கழுத்தினிற்றாலியுண்டெனில்
கையினாற்கண்ணுறக்காட்டுநீரெனச்
செய்யகையறைந்தணிமூக்கிற்சேர்த்தியிவ்
வையனும்பொய்யனென்றரசர்கூறினார். (௨௪௦)

மண்டலவேந்தனெம்மடந்தைமங்கலம்
கண்டதுநீங்கடாங்கண்டிலாததும
திண்டிறலீரொருதேவராசியம்
உண்டெனமதிதயனுரைப்பதாயினன் (உ௪௩)

அண்டர்நாயகன்வரமளித்தநாளையில
வண்டணிகுழலியோடுதித்தமங்கலம்
கண்டவர்பதியிவட்கென்றகட்டுரை
உண்டஃதன்றிவேறுண்டுகேட்டிரால். (உ௪௨)

மஞ்சனசசடையினன்வரத்தில்வந்தநாள
கஞ்சனீமுலிற்காண்பதன்றியே
அஞ்சனக்கண்ணிக்குமங்கைககெய்திடா
தெஞ்சலில்யாவருமியானுங்கண்டிலேம் (உ௪௫)

## வேறு.

என்றலும்வல்விமுனெண்ணியநாமம
ஒன்றலதுள்ளுறவுன்னலளாகிச
சென்றவன்மார்பிதுசேர்கெனவுன்னு
மன்றலர்மாலையைவானிலெறிந்தாள. (உ௪௪)

வார்பயில்பூண்முலைமாலையுநெஞ்சும்
பார்பயின்மன்னவர்பற்பலர்கண்ணும்
தார்பயில்வேலரிச்சந்திரனென்பான்
மார்பிலணைந்துமலர்ந்தனமன்னே. (உ௪௫)

வஞ்சிவழங்கியமாலையணிந்தோன்
செஞ்சுடரின்முகனின்றொளிசெய்ய
வெஞ்சுடர்முன்சசியாமெனமிக்கோர்
கஞ்சமுகங்கள்கரிந்தனவன்றே. (உ௪௬)

மாதர்களார்த்தனர்வானவரார்த்தார்
கீதர்களார்த்தனர்கேளிருமார்த்தார
சூதர்களார்த்தனர்துறவருமார்த்தார்
வேதர்களார்த்தனர்வேலையடங்க. (௨௪௭)

நல்லியனூலறிநாவலர்பாடப்
பல்லியமும்பலபாடலுமார்ப்ப
அல்லிமலர்த்தொடைமாலையணிந்தே
வல்லியுமன்னனுமாளிகைபுக்கார். (௨௪௮)

மின்னியதாமவிளக்கொருகோடி
கன்னியர்வந்துகலத்தொடெடுப்ப
மன்னியமாமணிமஞ்சமணைந்தே
பொன்னின்முலைக்கொடியோடிணர்ந்தான் (௨௪௯)

ஆரமகிற்புகைகாசறைநீர்கர்ப்
பூரநரந்தமணிந்துபுலர்த்திப்
பாரதனத்தினிலிட்டபராகம்
சோரவணிந்தெறிசுண்ணமெறிந்து. (௨௫௦)

மல்லிகைசண்பகமாதவிபுன்னை
முல்லைகுராமகிழ்முண்டகநீலம்
அல்லிநிறைந்தசெவந்திசெருந்தி
புல்லிதழ்வாசமளைந்துபுனைந்தார். (௨௫௧)

அங்கையோடங்கையணைத்துடலொன்றாக
கொங்கைபுயத்திரள்குன்றிலழுந்தச
செங்கயல்சென்றுதிருக்குழைதாவ
மங்கையுமன்னுமகிழ்ந்துபுணர்ந்தார். (௨௫௨)

வேறு.

வாசமார்மாலைமன்னவன் முன்றண்மருவிடாவெகுளியின்மலைந்து
பூசல்வேள் பலகாலெய்தபுண்ணுக்குப் புணர்முலைவேதுகொண்டொ
மாசிலாமணிசெய்சூடகக்காந்தண்மலர்க்கரமாகமேற்கட்டி [ற்றி
ஆசைநோய்தீரவமுதவாயுதகமளித்தனளரிவையர்பெருமாள். ()

கண்டகண்வாங்காதிருவருமதனுற்கலவியும்புலவியும்விளைத்து
முண்டகவதனம்வெயரும்பிடினுமுகிழ்முலைவடமசைந்திடினும்
கொண்டலங்குழலில்வண்டலம்பிடினுங்குறைவிலாநிறையிடரெய்தி
மண்டலத்தரசனசிந்தையம்மங்கைமருங்குலினொருவழித்தன்றே. ()

உடைப்பெரும்பண்டமிகக்கலத்தேற்றி யொலிகடனீந்தியோர
துறைசேர்ந், தடைப்பெரும்பாத்தாற் றுழுமென்றோடியறப்பயந்தி
ஈகுவார்போலப், படைக்கலவிழியாளணியொடுகலையும்பனிமலர்த
தொடையனும்பரமாய், இடைக்கிடர்விளைக்கவிறுமெனப்பதறியிரு
கையாற்களைந்தருகுறத்தான். (௨௫௫)

தானைசென்றூர்க்கமங்கலம்பிடற்றுச்சலஞ்சலம் புலம்பிடத்தனக
கோட், டானைசென்றடரமாத்தலையயங்க வல்குலந்தேரினைச்செலு
த்தி,மீனைவென்றகெண்வேல்படப்புருவவில்வளைத்தயோத்தியர்வே
ந்தைத், தேனைவென்றினித்த செஞ்சொலாளின்பச்செருத்தொழில்
பற்பலவிளைத்தாள். (௨௫௬)

இந்நெறிதவறாதிறைவனுமயிலுமின்பமுண்டிடைவிடாதிணங்கிக்
கன்னமாபுரியிற்சிலபகல்கழீஇப்பின்கடிநகரெய்துவான்கருதி
மன்னனுமன்னமெனுநடைமயிலுமணிநெடுந்தேர்மிசையேறிப்
பொன்னணிகுடுமிநன்னெடுங்கபாடப்புரிசைநீத்தப்புறம்போனார். ()

பன்னிறத்தனர்தங்கதிரெழுந்தனபோற் பலமணிக்குடைகண்
மேனிழற்ற, நன்னெறித்தவளக்கொடிமிசைநெருங்க நவமணிக்கா
களமார்ப்ப, மின்னிறக்கொடிமென் மருங்குலார்மருங்குமிடைந்து

வெண்சாமரமிரட்ட, அன்னிறப்பொழில்சூழ்கன்னமாபுரியிலரணமு மகழும்விட்டகன்றார். (உ௫அ)

காந்தளஞ்செங்கைக்கன்னியர்சில்லோர்கைதொழுதிடையிடை மீள, மாந்தர்கள்வணங்கிவரவவருடனே மந்திரத்தலைவர்மீண்டேக, வேந்தர்வீழ்ந்திறைஞ்சிப் பணிவிடைகேட்டு விடைகொடுமீண்டெழு ரெய்தப், போர்தனன்களிறும்புரவியுந்தேரும் புடைதொறுங்கட லெனப்பொலிய (உ௫௯)

வேறு.

தோடுதுன்றியமரைமிசைத்துணைபுணரன்னம்
மாடுநின்றதோர்மதிநிழறனைக்கண்டுமற்றோர்
பேடுசென்றெனச்சேவலைப்பிரிந்தயன்மலர்சேர்ந்
தாடுகின்றவச்செழும்புனற்றண்பணையுற்றார். (உ௬0)

கோடுவார்மலர்ப்பொழிலையுங்குளிர்தடத்தினையும்
நீடுவார்சிறைப்பறவையின்குழாத்தையுநிறைநீர்
ஆடுவாரையுமவ்விடத்தணிமலர்கொய்து
சூடுவாரையுங்காட்டுவான்றேகைக்குத்துணைவன். (உ௬௧)

செய்யமாமலரடுத்துமொண்பெடைகடேனருந்தாப்
பையவேசுரும்படைவழிபார்த்தினிதுறலால்
தையலாருணவமைத்தன்பர்தாம்வரனோக்குஞ்
செய்புனாளொத்தசெழுமலர்க்காவெலாந்திருவே. (உ௬உ)

கடிமனைக்கணேதமர்கிறீஇயேதிலார்க்கடியுங்
கொடியர்போலத்தம்பிள்ளையைக்கூட்டினிற்கூட்டி
வடிநெடுங்கணும்மலர்நெடுஞ்சோலைகடோறும்
கொடியினங்கருங்குயில்களைத்துரப்பனகுறியாய். (உ௬௩)

ஆரணீண்மடைப்படைப்பையிற்புகாதிடையழுந்து
தாரவோடியேவெளியிடைப்பரவுறுந்தோயம்

தாரமானவள்வருந்திடக்கணிகையைச்சாருஞ்
சோரரொத்தனமுத்தனதிருநகைத்தோகாய். (உகூச)

மன்றல்வண்டிசைபாடமாமயினடமாடத்
தென்றல்வந்தலைத்தலைபலமுழவொலிசெய்ய
நின்றபூகங்களிலைபழுக்காயெதிர்நீட்டக்
கொன்றைபொன்சொரிவளமைபாராய்குலக்கொடியே. (உகூரு)

மதகுமங்கலமுரசெழுவண்டுவாழ்த்திசைக்க
உதிரமொத்தசெந்தாமரையோமத்தீவளரப்
புதுமலர்த்துணைபுணரிளவன்னமும்பெடையும்
வதுவைசெய்வனவொப்பனகண்டருண்மயிலே. (உகூசு)

வெடித்தவாற்சிறுகன்றுகண்மேதியின்முலைப்பால்
குடித்தவேம்பலாலரும்பலர்கோகனகப்பூக
கடித்துவாங்குதலூடலின்மகளிர்கைக்கணவர்
பிடித்துவாங்குதலொப்பதுபெண்கொடிபாராய் (உகூஎ)

இத்தடத்துநீரருந்தியவன்னங்களெல்லாம்
அத்தடத்தின்மொய்த்திழிவனவருநிதியெல்லாம்
தத்தமக்களித்திருந்தவர்தங்களைத்துறந்து
கைத்துளார்கட்செல்கணிகையரொப்பனகாணாய். (உகூஅ)

மேயுமோதிமஞ்சேலினைக்கவர்ந்திடவெருண்டு
பாயுநீள்கயல்செங்கமலத்தலர்படிவ
ஆயின்மிக்கநற்கணவனையமரிடையிழந்து
தீயில்வீழ்குவாரொப்பனதிருந்திழைகாணாய். (உகூகூ)

கூடுமன்னங்கள்பறந்திரைகவர்ந்திடக்குழாத்தில்
ஊடுமன்னமொன்றுயர்ந்ததாமரைமிசையுகால்
நீடுவார்கழையேறியேநிறையவைநடுநின்
றாடுவேழம்பமாதரைநிகர்த்தல்பாரணங்கே. (உஎ0)

நன்புனற்பதுமந்துதைந்தரிநதையுணலால்
வன்பிணிற்பிடித்தாடியமகரிரைமனனர்
அன்புறத்தெவிட்டாவிதழாரமுதருந்தும்
இன்பமெல்லணையொப்பனவிளங்கொடிகாணய். (உஎக)

துஞ்சவந்தநாடோரரைவிட்டயறுறக்கும்
வஞ்சநெஞ்சர்போலலாதுவண்டணிகுழன்மாதே
அஞ்சலாதுநின்றவருடனிறந்தநல்லவர்போல்
கஞ்சநெல்லுடனறப்புண்டுகிடப்பனகாணய். (உஎஉ)

அடலனங்கனுக்கணியபிடேகமேயனையாய்
மடல்கொள்வாவிநீர்குடைந்திடப்பாய்கின்றமடவார்
மிடனெடுஞ்சிலைபுயல்பிறைசுமந்துபன்மின்போய்
கடலில்வீழ்ந்திடுங்காட்சியையிகர்ப்பதுகாணய். (உஎ௩)

ந்கிளர்ந்தனத்தொருத்தியின்புனல்குடைந்தெழுந்து
ந்தலங்கையான்முறுக்குவாள்குளிர்முகத்தோற்றம்
காந்தண்மாமலருடுபோய்த்திங்களைக்கரிய
பாந்தளுண்டுவதொப்பதுபசுங்கொடிபாராய். (உஎ௪)

சிறுநுதற்பெருங்கண்ணியோர்தெரிவைநீர்மூழ்க
நறுமலர்க்குழல்வண்டெழுந்தலமந்துநால்வ
அறநெறிப்படிபுரந்தகோலரசர்களிறக்க
மறுகுமக்குடிபோல்வனகாண்டிமாமயிலே. (உஎரு)

மஞ்சனங்குடைந்தாடியோர்வாணுதன்மடந்தை
கஞ்சநன்மலர்க்கடைந்ததன்மிசைக்கரம்வைத்தல்
சஞ்சலந்தவிரென்முகந்தனைக்கண்டுதளும்பா
தஞ்சலென்றுகையமைப்பதுநிகர்த்தல்பாரணங்கே. (உஎசு)

கானிரைப்பெருநீழலின்வருமொருகன்னி
தேனிரைத்தமென்சிகழிகைநறுமலர்தெரிவ

ஊனிரைத்ததண்கருமுகிலிடையிடைவயங்கி
மீனிரைத்தனவொப்பனகாண்டியான்மின்னே. (உஎஎ)

பணைமலர்த்தடமூழ்குவாணுசியிற்பலகால்
மணமறிந்திடவைத்தவிந்திவரமலர்தான்
இணைவிழிக்குமுன்றோற்றிணக்குதற்கிசைந்தயலோர்
துணைபிடித்திதஞ்சொல்வதுபோல்வதுதோகாய். (உஎஅ)

அடலையுற்றவேல்விழியினுள்வாய்கண்டவாம்பல்
உடலினுட்பசந்துட்டுளைபட்டசைந்தொல்கி
மடலெடுத்திருமலரடிபூணலான்மயிலே
படர்தடங்குடைந்தேறுவாள்படும்படர்பாராய். (உஎகூ)

நறுமலர்க்குழலாயொருநன்னுதலோடும்
துறுமலர்த்தடமாடுதன்றோன்றலையொருத்தி
முறுவலாலிதழதுக்கியேமுனைவிழிசிவக்கக்
கறுவிநோக்கியநோக்கமுநோக்குநீகாணாய். (உஅ0)

இன்னதன்மையயாவையுங்கண்டுகண்டேகி
மின்னுமன்னனுங்கலவியும்புலவியும்விளைத்து
நன்னெடும்பணைகடந்தருஞ்சுரத்திடைநண்ணி
வன்னமாமுலைவைரவிகோட்டத்தில்வந்தார். (உஅக)

யோகினிக்கணஞ்சூழ்ந்திடக்கொடுஞ்சுரத்துறையும்
மோகினிப்பெருமாடிருமுன்றிலிற்றொழுது
பாகினிற்சிறந்திரதித்தமொழியொடுபனிமந்
தாகினித்துறையணைந்ததிற்படிந்தயலகன்றார். (உஅஉ)

வேரலோங்கியமலைகளும்வனங்களும்விடுத்துச்
சூரலோங்கியவருவியுந்தருத்தியுங்கடந்து
சாரலோங்கியசக்கரப்பொருப்பையுந்தள்ளி
ஆரலோங்கியவயோத்திமாநகரியையணைந்தார். (உஅங)

வாரணத்தொலியெழுமணிவாயிலிற்புகுந்து
தோரணத்தெருக்கடந்துசோபனம்பலர்சொல்ல
ஆரணத்தொலியாதிகணமழையெனவார்க்கப்
பூரணக்குடஞ்சுமந்தபொற்கோயிலுட்புகுந்தார். (உ அச)

மூளைத்தவெற்பனகோயிலின்முதிர்மலரணைமேல்
இளைத்தநுண்ணிடையிரதியுங்காமனுமெனத்தாம்
விளைத்தநல்லின்பவெள்ளத்துவேந்தனுமயிலும்
திளைத்திளைத்தருள்பொழிந்திடக்கழிந்தனசிலநாள். (உ அ ரு)

வேறு.

தருவையொத்தகரத்தரிச்சந்திரன்
அரிவையைப்பிரியாமலணைந்தநாள்
மருவையுற்றமலர்க்குழல்வல்லிதன்
திருவயிற்றிற்கருப்பந்திகழ்ந்ததே. (உ அ சு)

செயிரறப்புனன்றேக்கிடக்காமத்தண்
பயிர்மூளைத்தெழும்பான்மையிதாமென
உயிர்நலக்கொடியொண்ணுதல்வண்ணமெய்ம்
மயிர்பொடிப்புற்றரும்பிமலர்ந்தவே. (உ அ எ)

நிலைமயிர்க்கண்குருக்கொண்டுநீள்கருங்
கொலைமதர்க்கண்குழிந்துகுளிர்முகம்
கலைநிலாவின்விளர்த்துக்கதிர்மணி
முலைமுகங்கள்கறுப்புமுதிர்ந்தவே. (உ அ அ)

தொடைமலர்க்குழல்சோர்ந்துசெழுந்துகி
லுடைநெகிழ்ந்துபையப்பையவொல்கியே
நடைபெயர்ந்துநரம்புபசுத்தவால்
இடையுண்டென்றறியப்பட்டதியார்க்குமே. (உ அ கூ)

பாங்கிமாரிருபக்கமுநின்றுகை
தாங்கிமுன்செலத்தானடர்தொங்கியே

ஆஙகுதிங்கணிறைந்தபின்பாயிழை
தீங்கிலாமற்சிறுவனைப்பெற்றனள். (உகo)

பிள்ளைவந்துபிறந்தனனென்றலும்
வள்ளலுள்ளமகிழ்ந்திரவோர்க்கெலாம்
அள்ளிநீரறையைத்திறந்தேழுநாள்
கொள்ளைகொண்டெனக்கொடுத்தானரோ. (உகக)

மதலைவந்துபிறந்தமகிழ்ச்சியால்
சிதலையல்குநல்லார்தெருவெங்கணும்
பதலைதோறும்பனிநீர்புழுகுநெய்
குதலைமாதர்கொணர்ந்துசொரிந்தனர். (உகஉ)

தொட்டிதாழிகடோணிகடாரங்கள்
மட்டிலாதமறுகுதொறுமிரீஇ
விட்டமஞ்சனம்வீதியெலாங்கடை
கட்டவைத்தபின்கன்னியர்கூடினர். (உகங)

இளகிலாதிடைச்சேலையிறுக்கிமென்
புளகக்கொங்கையிற்கச்சுறப்பூட்டியே
அளகபின்னியணிகளணிந்துமாப்
பிளவுபோன்றகட்பேதையர்தோன்றினர். (உகச)

பொன்னின்வட்டிலும்பொன்னின்விசிறியும்
துன்னுதந்தக்குழலுந்திருத்தியும்
மின்னுநுண்ணிடைமெல்லியலார்கொடு
நின்னிலென்றெதிர்நீர்விளையாடினர். (உகரு)

அழிசோரவணிவடஞ்சோர்ந்திடத்
தாழிநீர்மொண்டுதாமெறிந்தாடினர்
எழுமேகமுமொத்திடத்துப்பொழி
ஊழிகாலத்துமாரியையொக்கவே. (உகசு)

துடியிடக்கைவளைபணைதுந்துபி
திடிமப்பேரிகைசின்னநற்காகளம்
இடியெனக்கிளர்ந்தார்த்திடவேழையர்
படியின்மின்பரந்தென்னப்பரவினார். (உகஎ)

முருக்கின்வாய்ச்சியொருத்திமுகத்திலோர்
திருக்குழற்பெய்செழும்புனல்சிந்துதல்
அருக்கற்கென்றுமளித்திடுமர்க்கியம்
சரற்சசிக்குந்தருசெயல்போன்றதே. (உகஅ)

ஒருத்திகொங்கையிரண்டினிலொன்றன்மேல்
துருத்திநீரிருதோகையர்வீசினார்
பெருத்தமந்தரவெற்பைப்பிணித்ததோர்
பருத்தவாசுகித்தாம்பிழுப்பாரென. (உகக)

நவ்விநோக்கிநளிர்முகத்தேயொரு
செவ்வியாள்சிந்திடுஞ்சிவிறிப்புனல்
அவ்வியத்துடனாழிவெண்டிங்களைக்
கவ்விமுன்னிமிர்கட்செவியொத்ததே. (கூ00)

காருருக்கொள்கருங்குழல்கைக்குழ
லீரொருத்திதம்பத்திற்றூக்கலால்
போருக்கென்றுபுறப்படும்புட்பகத்
தேருக்கிட்டதிரள்வடமொத்ததே. (கூ0க)

புழுகுசந்தனம்பொன்னிறக்குங்குமம்
ஒழுகுசெச்சையுதகமிமசலம்
வழுவில்பொற்சுண்ணநல்லெண்ணெய்மஞ்சனீர்
முழுதும்வல்லியர்மொண்டெறிந்தாடினார். (கூ0உ)

வம்புலாமுலைமாதர்க்குமைந்தர்க்கும்
கம்பமால்களிற்றேறுனுக்குங்கன்னிக்கும்

அம்புராசியிலாரமுதுற்றநாள்
உம்பர்கோனுற்றவோகைவந்துற்றதே. (௯0௯)

மேலினோர்தம்விதரணமுந்தனிக்
கோலினோர்தங்குணமுங்குலமனு
நூலின்௦வந்த நுணங்கியகேள்வியும்
பாலினோடுகலந்துபருகினார். (௯0௨)

* ஆவையின்னரிச்சந்திரன்மைந்தனை
மூவரன்னமுனிவர்கள்வாழ்த்தியே
யாவருந்நிகரில்லவற்கேற்றிடத்
தேவதாசனெனப்பெயர்செப்பினார். (௯0௩)

புலன்கொள்காப்புப்புலியுகிர்த்தண்டைமுத்
தலங்கல்கிண்கிணியைம்படையாழிகள்
இலங்குபொன்னரைஞாணிவைசாத்தியே
துலங்குமாமணித்தொட்டிலிலேற்றினார். (௯0௪)

சூழுமாமணித்தொட்டிலிலேற்றியே
தாழுநீள்குழற்றூதியர் போற்றயாண்
டேழுபுக்கனனிவ்வகைக்காதலன்
வாழுநாளினில்வந்தவைகூறுவாம். (௯0௭)

அரிச்சந்திரசரித்திரம்
முதலாவது
விவாககாண்டம்
முற்றிற்று.
ஆ பாடல்கள் ௬௧௧.

---

0 வந்து எனவும் பாடம்.
* ஆவலின்ன எனவும் பாடம்.

௨

தெய்வமேதுணை.

# இரண்டாவது

# இந்திரகாண்டம்.



இம்மையம்மைமறுமையென்னவிசைந்துமாமறைகூறிய
மும்மையுந்தெளிவுற்றநெஞ்சினின்முக்குறும்புமறுத்திடுஞ்
செம்மையன்பர்மனத்துவைகியதெய்வநாயகர்தேவிமற்
றெம்மையாளுடையம்மைதாள்களிரண்டுமேத்தியிறைஞ்சுவாம். (௧)

கொற்றவாசவன்முன்வசிட்டனுரைத்ததற்கெதிர்கோசிகன்
சொற்றவாறுமுடிக்கவன்மைதொடங்கிநாடுவிலங்கினால்
செற்றவாறுமுருத்துவண்டிரிசங்குமைந்தனெழுந்துகான்
உற்றவாறுநிகழ்ந்தவாறுமுணர்ந்தவாறும்விளம்புவாம். (௨)

முண்டகத்திலுதித்தநாலுமுகத்தவன்றருகாசிபன்
கொண்டகாதலிபெற்றெடுத்தகுலக்குமாரன்வலத்தினால்
பண்டழன்றவிலங்கலங்கையரிந்தவச்சிரபாணியோன்
அண்டர்கோனரசாளுநீடமராவதித்திறமோதுவாம். (௩)

மாடமண்டபமேடைமாமதில்வாயின்ஞாயில்கபாடநீள்
கூடகோபுரநீடுமாளிகைகோலவேதிகையாலயம்
நாடகம்பயில்சாலைசூளிகைநாவலங்கனியூறல்பாய்
ஆடகங்கொடமைத்துமாமணியானிரைத்தவனந்தமே. (௪)

வேதசாலையும்யாகசாலையும்யோகசாலையுமின்னனார்
கீதசாலையுநாதமேதருகின்னரம்பயில்சாலையும்
காதலானவர்யாவருந்தொடர்காமசாலையுமாபலிப்
பூதசாலையுமாறிலாவனுபோகசாலையுமூரெலாம். (௫)

உயிரெனத்தகுமன்பர்தம்முடனும்பர்மங்கையரின்பமென்
பயிர்விளைத்திடுமனைதொறும்பலபதுமராகமிலங்குவ
செயிர்விளைத்திடுமவுணருற்றுறைதிரிபுரத்தழலொக்குநீள்
வயிரமுத்தொளிவிரிவதப்புரமண்டுவெண்புகையொக்குமே. (சு)

அரவுமிழ்ந்தசெம்மணியுமாரமுமணிகொளிந்திரநீலமும்
பரவுகின்றமதிற்புறத்தபரப்பனைத்துமழுத்தின
இரவிடும்பலதிசையடங்கலுமிர்கொழுஞ்சுடர்விரிதலால்
இரவுமுண்டிளநிலவுமுண்டெறிவெயிலுமுண்டொருபொழுதினே. ()

உரகனுச்சியின்மணிபதித்தவுயர்ந்தபத்தியிடத்துமா
மரகதத்திரண்மணிகுயிற்றிவகுத்தபத்தியடங்கலும்
கரதலத்தினில்விரிதிரைக்கடல்கவருமத்தகசங்களும்
குரகதத்திரளுஞ்செறிந்தனகோடிகோடியிரட்டியே. (அ)

ஆடலும்புனலாடலும்பொழிலாடலும்வெறியாடலும்
பாடலுந்துணர்சூடலும்பலபாவைபைங்கிளிபூவையாழ்
*தேடலும்பொழில்சேர்தலுங்கலைதேர்தலுங்குறைதீர்தலும்
ஊடலுந்தமிலூடலுந்தொழில்கோதையர்க்குளநாளெலாம். (கூ)

பூசன்மேவியபாசநீள்விழிகாதினோடுறுபோர்செயத்
தூசினோடணிமேகலாபரம்வீசுசோதிகள்சூழவே
வாசமேறுமரம்பைமாதர்நிலவுந்தமாமணிவச்சிரத்
தூசலாடுவதந்தரத்திலுலாவுமின்கொடியொக்குமே. (க0)

நளிசிவப்புறுதளிர்விளைப்பனநனைவிளைப்பனநனைதொறும்
இனியபுத்தமுறைவிளைப்பனவிலையுகுப்பனவிளமதுப்
பனியுகுப்பனமணியுகுப்பனபணியுகுப்பனபடுசெழுங்
கனியுகுப்பனமலருகுப்பனகற்பகப்பொழிலெங்குமே. (கக)

* கோடலும் என்றும் பாடம்.

வாரிறுக்கிவிசித்துமாமணிமாடமேறிமலர்க்குழற்
காரிறுக்கிமடந்தைமாதர்கழங்குகந்துகமம்மனை
கூருகிர்க்கைசிவப்பவாடுவகொத்துமாமுடியுற்றபொன்
மேருவிற்பலகால்விழுந்தெழுமீனினத்தைநிகர்க்குமே. (௧௨)

துடிநடங்கிடைமாதர்கைபுனைதொடிமுழங்கிடுமாடமேல்
அடிநடங்கிடநடுநடுங்கிடநுனிநடுங்கிடவம்பொனின்
கொடிநடங்குவகடையுகத்தெழுகுரைகடற்றிரையன்றியே
விடிநடங்குவதென்னின்மற்றினியாவதேநிகராவதே. (௧௩)

தலவியப்புறமரமியச்சிறசாளரப்புழையால்விழும்
புலவியிற்பரி(பங்கியின்னிருபுடைவிழுந்துநடங்கிய
கலவியிற்பரிதாரள†மாமணிகங்குணங்கைகைபற்றியே
நிலவெனக்கென‡வரியெனக்கெனுநீதியொப்பனவீதியே. (௧௪)

நீடுமாசையினீவதென்னுநெஞ்சினார்பலராயினும்
கூடுமாசையினோடுமுற்றதுகொள்ளுவாரவணின்மையால்
பாடுமாதரியாழினோடுபயிற்றுமாதரங்கினின்
றூடுமாதர்தினம்பெறுங்கொடையண்டவாணர்கணெஞ்சமே. (௧௫)

பாதிமாமதியொத்தவாணுதலுற்றபட்டமிலங்கிடச்
சோதிவார்குழைவீசவேய்புரைதோண்மணித்தொடைமின்னவே
கோதிவாரிமுடித்தபாரியகொண்டைநின்றுகுலுங்கிட
வீதிவாய்வருமாதரேநிலமின்னுமேகமுமென்பவே. (௧௬)

நன்னகர்ப்பெருவண்மையுந்திருவுஞ்சிறப்புநவின்றிடின்
பொன்னகர்க்குவமிப்பர்பற்பலநூனெறிப்புலவோரெலாம்
அந்நகர்க்குவமிக்கவொப்பதிலண்டரண்டமனைத்திலும்
எந்நகர்ப்பொலியந்நகர்க்குநிகர்க்குமென்னவியம்புவேன். (௧௭)

---

( பந்தி என்றும் பாடம்.

† மாமணி - மாணிக்கம். ‡ அரி - சூரியன்.

ஆனசித்திரமாநகர்க்குளலர்ந்துயர்ந்தெழுகற்பகக்
கானகத்திடைவேலைபுக்கதொர்காசுநீள்வரையாமெனத்
தானவர்க்குடனுணவெற்பரிதாழ்சுடர்க்குலிசக்கர
வானவர்க்கிறையோனமர்ந்துறைமண்டபத்தைவிளம்புவாம். (க௮)

அத்திபாரமிருத்திவெண்படிகத்தமைத்ததளத்ததாய்ச்
சித்திரக்கனகத்தகட்டளைசெய்துயர்த்தகுறட்டினில்
பத்தியாயிரவாயிரத்தபருத்ததூண்கணிறுத்திமேல்
வைத்தபோதிகையுத்திரம்பலவச்சிரத்தின்வகுத்ததே. (க௯)

இட்டபத்தியினிந்த்ரநீலமிசைத்தெடுத்தசுவர்க்குமேல்
மட்டறச்சுடர்மரகதத்தில்வகுத்தெடுத்தநிலத்தது
விட்டவாயிலினட்டதூண்மணிமேதகத்தசதாரமணி
முட்டவைத்தமுகட்டதொண்கதிர்முத்தணிந்தமுகப்பதே. (உ0)

ஆளிசிங்க விபம்பரித்திரளன்னமஞ்சுகமெண்ணிலா
ஒளிதோறுநிறுத்திநீள்வயிரேரியத்தினிரைத்ததால்
கோளிருந்தனவோ*மடங்கல்கொழுந்துவிட்டனவோகுழூஉம்
0 வாளிருந்தனவோமுகட்டினில்வைத்தபூரணகும்பமே. (உக)

காதமாயிரநான்மருங்குகணித்தகன்றுநிலந்தொறும்
பூதமாயிரகோடிகோடிபுறத்துநின்றுசுமந்திட
மீதடர்ந்துநிவந்துமேனிலம்விண்டெழுந்துவளர்ந்துபோய்
ஆதிநான்முகனார்பதத்தினுமப்புறத்துமுயர்ந்ததே. (உஉ)

அயனறிந்துவிதித்தவண்டமனைத்துமிந்நிகரன்றென
மயனறிந்துபடைத்தசித்திரமண்டபத்தினிலங்கவன்
வியனறிந்துகொடுத்தவாதனமீதுமாதொடும்வேதநூற்
பயனறிந்துணர்குரவர்தம்மொடுபோகசாதனன்மேவினான். (உ௩)

* மடங்கல் - இடி. 0 வாள் - சூரியன்.

நாகினின்றிடமிருஃளயுந்திருமணிமுடிச்சுடர்நக்கிட
விாகினின்ெறாருகோடிஞாயிறமிக்கெழுந்தனவாமெனப்
பெருகின்ெறாளிர்மகரதோரணமிசைசிறந்துபிறங்கிட
அருகுநின்றணிகவரிகோடியரம்பைமாதரிரட்டவே. (உ௫)

வெண்ணிழற்றிகழ்முத்தநீள்குடைமேனிழற்றுவதாயிரங்
கண்ணிழறபடவேயிருண்டுகறத்துமீளவெளுப்பதாய்த்
தண்ணிழறசெயவிந்திராணிதடம்பெருங்குழலாயகார்
வண்ணிழற்றிருமேனிதாவிடவும்பர்மன்னனிருந்தனன். (உ௬)

வேறு.

சூரர்தானவர்கேசரர்தும்புருசித்தர்விச்சா
தராசாரணர்பூதர்பைசாசர்கடந்திரக்கின்
னரர்நாரதனுகரியக்கராக்கர்போற்ற
வாராசனிருந்தனன்மாமணியாதனத்தே. (உ௭)

அதித்தனேடம்புலியாரல்புதன்வியாழம்
சோதிப்பெருமாமதிச்சுக்கிரன்சௌரிதாம
கேதுப்பவனன்வருணன்சமன்கேடிலாத
நீதிக்குபேரன்முதலோர்கணிறைந்துமொய்த்தார். (உஎ)

சனகன்சமதக்கினிமிக்கசனற்குமாரன்
அனகன்பிருகத்திரிசத்தியகத்தியன்சீர்க்
கனகன்சுகன்காசிபன்கௌதமனுபத்தம்பன்
பனகன்னுபமன்னியன்சங்கனுரோமபாதன். (உஅ)

பாரத்துவாசன்குமுதாக்கன்பராசரன்கர்ப்
பூரத்துவாசவடமீனசைபூண்வசிட்டன்
வீரத்துவாசந்திசைவீசியகோசிகனந்
நேரத்துவாசவனைநண்ணிநிறைந்தணைந்தார். (உக)

அருமாமணியாதனமன்னவர்யார்க்குமாலகி
இருமாதவத்தீரொனயாருமிருந்தபின்னர்
திருமாமுடிசாய்த்தெழிற்செங்கையமைத்துவிண்ணோர்
பெருமான்கனிவாய்மலர்ந்தின்னனபேசலுற்றான். (௯௰)

பாய்மைக்கலோலக்கடல்சூழ்புவிபார்த்திவர்க்குள்
தீமைக்கும்வேகச்சிலுகுக்குமிடங்கொடாது
வாய்மைக்குநன்றால்வளனுக்குமனத்திலுற்ற
தூய்மைக்குமிக்கார்தமையாய்ந்தனிர்சொன்மினென்றான். ( )

நறையோதியிளையிராணிநலந்திளைக்கும்
இறையோதியமாற்றமியாவருங்கேட்டபின்னர்ச
சிறையோதிமமேல்வருநான்முகன்செல்வன்றெய்வ
மறையோதியசீர்வசிட்டனெடுத்துரைப்பான். (௯௨)

பாருக்கொருவன்பராதாரசகோதரன்வெம்
போருக்கொருவன்புகழுக்குமறைப்பொருட்கும்
நேருக்கும்வீடாமனுநூனெறிக்கும்பொறைக்கும்
ஆருக்குமிக்கானரிச்சந்திரனுகுமென்றான். (௯௩)

அன்னானதுகூறிடமைந்தரையட்டதாலும்
முன்னாளமர்வெண்ளெருதண்டின்முடித்ததாலும்
தன்னாலுணராதசலத்தினன்றானமன்று
கொன்னார்தவத்தோங்கியகௌசிகன்கூறலுற்றான். (௯௪)

வெய்யன்பதகன்பராதாரவிருப்பன்வீணன்
பொய்யன்னிறையும்பொறையுஞ்சிறிதும்மில்புல்லன்
கையன்கபடன்கயவன்றனைநல்லனென்றிவ்
வையன்றிருமுன்னுரைத்தாயிதென்னுகவென்றான். (௯௫)

தீவெங்தொழிலின்றியொப்பற்றமெய்ச்செவ்வியோனைக்
காய்வெந்திறலாலிவைகூறியகௌசிகாசின்

வாய்வெந்திலைநின் மனம்வெந்திலை வம்புசொன்ன
நீவெந்திலை தெய்வமுநின் வயிற்பொய்த்ததென்றான் (௧௬)

தெய்வந்தனை நொந்துவசிட்டனிசை செய்திசெப்பக்
கைவந்தகொடுந்தொழிற் கௌசிகன் கன்றிநோக்கிப்
பொய்வந்தநின்வாய் புழுவாகுதலன்றிப் பொய்பா
மெய்வந்தவென்வாய் மனம்வேவலென்றுசொன்னான். (௧௭)

புனங்கொண்டசெந்தீப்புயறாவியெழுந்ததேபோல்
மனங்கொண்டடங்காப்பெருவன்மைவசிட்டற்கெய்திக்
கனங்கொண்டகற்பமுடிவிற் கணுருத்திரனைப்போல்
சினங்கொண்டெழுந்தான விழித்தீத்திசைதோறுஞ்சிந்த ( )

தாங்கிற்றிலன்கௌசிகனாறனுமவ்வாறுசீற்றம
ஓங்கக்கதித்துற்றனனுற்றவப்போதிரண்டு
பாங்கிற்படுசெந்தழல்பம்பியுற்றங்குமிங்கும்
நீங்கிற்றிலைநீள்கொழுந்தோடிமிர்த்ததன்றே. (௧௯

கானந்திகழ்தாமரைக்கட்பிறந்துற்றபுத்தேள்
தானந்தனைநாடியெழுந்தெரிதாக்கலோடும
வானென்பதுவையகமென்பதுமென்றுவானோர்
கோனன்றநடுங்கியலைந்துகுலைந்தெழுந்தான். (௨௰)

ஆற்றாநெடுவெஞ்சினைமாற்றியமர்த்தியுள்ளம்
தேற்றாமகவான்றிருச்செம்மலர்க்கையமைத்துக்
கூற்றால்விளைவாவனகண்டிடிற்கூறுநீர்மை
தோற்றாவிழிதக்கதுசெய்வதென்சொன்மினென்றான். (௨௧)

அன்பாற்கடலாயவசிட்டனமூன்றுமன்னன்
றன்பாற்றவறுண்டெனக்கௌசிகன்சாய்க்கினன்றே
என்பாற்றவம்விட்டிழிகட்டலையோட்டினேந்தித்
தென்பாற்றனிச்செல்குவன்யானிதுதிண்ணமென்றான். (௨௨)

மாறுநெறிகொண்டவசிட்டனம்மன்னனுள்ளம்
வேறுமெனினிச்சபதத்தை*விளம்பிவிட்டான்
தேறுவினிநின்சபதத்தையித்தேவர்கோன்முன்
கூறுகெனநாரதன்கோசிகனுக்குரைத்தான். (௪௩)

நன்றுதுகவென்றவனாரதனுக்குரைத்துப்
()பின்றுதிவனைபோற்பெரும்பாடைபிதற்றமாட்டேன்
வென்றனெனினியானுஞ்செய்தமெய்த்தவந்தன்னிற்பாதி
குன்றாமலீவேனெனக்கௌசிகனுங்கூறினனால். (௪௪)

அமையுமமையும்பின்றேயரிச்சந்திரன்பால்
சமையுஞ்சபையிலிறம்யாவதுஞ்சாற்றாமல்
எமையுஞ்சுரர்காவலிலென்றமிருத்திநீயிச்
சமையந்துறந்தேகெனப்பின்னருஞ்சாற்றலுற்றான. (௪௫)

ஆசித்தனருங்குலத்தண்ணலைநண்ணியான்ற
நீதிதொழிலுங்நெறியுந்தருமத்தினேரும்
சாசித்தவுசிறசபைப்பார்ச்சமர்த்தாற்றுமாற்றுற்
சேர்த்திதிடேபோவெனச்சொல்லியசூழலுற்றான். (௪௬)

அக்காலையிலந்தவருஞ்சபையுங்குலைந்து
தொக்கார்முனிவோர்பலருந்தமசூழல்சார்ந்தார்
மைக்கார்¶முகவண்ணலைவாழ்த்தியக்கௌசிகன்போய்ப்
புக்கான்முதல்வைகியபொன்மலைச்சாரற்பொங்கர். (௪௭)

அரிச்சந்திரசரித்திரம்
இரண்டாவது
இந்திரகாண்டம்
முற்றுப்பெற்றது.
ஆக பாடல்கள் ௪௫௮.

---

* விளம்புவானே என்றும் பாடம்.
() பின்றுயவன எனவும் பாடம்.
¶ நீறவண்ணலை என்றும் பாடம்.

உ

# மூன்றாவது

# வஞ்சனைக்காண்டம்.

திருந்துசெஞ்சொற்செழுமறைக்கௌசிகன்
பொருந்துநீர்க்கடற்பூதலஞ்சார்ந்துபண்
டருந்தவம்புரிசாலையணைந்துபுக்
கிருந்தனன்பின்னிகழ்ந்ததியம்புவாம். (க)

செவ்வியனறனைத்தீயவனென்றியாம்
வெவ்வியற்படவிண்ணவர்முனபுகல்
அவ்வியத்தைமெய்யாக்குமருந்திறம்
எவ்வியற்றென்றிதயத்திலெண்ணினான். (உ)

விண்ணிழிந்துவிரிமலர்ச்சோலையின
கண்ணிருந்தகௌசிகற்காண்டுமென்
றெண்ணிகந்தமுனிவர்வந்தீண்டுபு
மண்ணில்வீழ்ந்துவணங்கியிருந்தனர். (ங)

இருந்தபின்னரிருளறுநலகுணத்
தருந்தவத்தானைவருமையநீ
பொருந்துபொன்னகர்புக்கபினுற்றது
திருந்தவேயருள்செய்கென்றுசெப்பினார். (ச)

கொற்றவாசவன்கூறியமாற்றமும்
மற்றோர்வாய்மைவசிட்டனுரைத்ததும்
உற்றவாறுமுணர்த்துதலின்றியே
கற்றோர்வஞ்சனைக்கட்டுரைகூறுவான். (ரு)

தெரியுநீண்மறைத்தேவரவைக்கணே
பெரியமாதவர்பேசியவேள்வியில்

அரியதொன்றுமுடிக்குமவாவினால்
கரியவேலைக்கடற்புவியெய்தினேன. (சு)

சொல்வதொன்றுண்டுகேட்கத்துணிதிரேல்
நல்லதென்றுகௌசிகனுட்டினன்
அல்லதாயினுநின்சொன்மறுத்திடல்
வல்லமோவென்றுமாதவர்கூறினர். (எ)

அருளயொத்தியரிச்சந்திரனையுற்
றிருளறும்பெருவேள்விக்கியானசொலும்
பொருடரும்படியின்றுபொருத்திநீர்
வருகவென்றுமறைமுனிகூறினன். (அ)

கேட்டபோதிலெழுந்துகிரிப்பெருங்
காட்டைநீங்கிக்கடிபொழினீங்கியே
கூட்டமோடுகுளிர்புனற்கோசல
நாட்டைநண்ணினர்நான்மறையாளரே. (கூ)

கன்னலோங்குகழனியிற்பொன்னிறச்
செந்நெல்கால்பொரச்சேக்கையின்மேவிய
அன்னமெங்கணுமோடுமணிநகர்
மன்னர்மன்னனவன மண்டபத்தெய்தினர். (க0)

எய்தினரையிறைஞ்சியிருத்தியே
நொய்தின்மன்னனவர்முகநோக்குறீஇ
வைதிகத்திருமாதவத்தீர்வந்த
செய்திசெப்புமென்றுரைசெய்குவார். (கக)

மன்னகேளொருவாசகங்கௌசிகன
சொன்னதுண்டதுநல்கத்துணிந்திடின்
இன்னதென்றிங்கியம்புதுமென்றனர்
பின்னர்மன்னவன்பேசத்தொடங்கினன் (கஉ)

இறதியெய்தலெனினுமினிதுமற்
றறதியற்றுளதாயெற்கமைவதேல்
உறதிநீருரைசெய்ததற்கொத்திடப்
பெறதும்யாமெனமாதவர்பேசுவார். (கங)

சந்திராதித்தர்தானவர்வானவார்
இந்திராதிகளியாவர்க்குமெய்திட
வந்திராவொருவேள்விவளர்ப்பதை
நொந்திராமுற்ற பண்ணிதினெண்ணினேம். (கச)

வேந்தவப்பெருவேள்விக்கிரும்பொருள்
ஈந்திடற்குரியாரெவரென்றியாம்
ஆய்ந்தனம்முனையன்றிமற்றில்லெனப்
போந்தனம்மெனமன்னன்புகலுவான். (கரு)

பரவுமிப்பொருள்பற்றவுமக்கது
தரலெனக்கியல்பென்றரிச்சந்திரன்
திரவியங்கொடுவம்மெனச்செப்பலும்
பிரமசாரிகண்மீளவும்பேசுவார். (கசு)

இன்றுவேண்டலமியாகமியற்றிடும்
அன்றுநல்கவமையுமெமக்கென
நன்றுநன்றெனமன்னனவின்றபின்
நின்றுவாழ்த்திநெடுநகர்நீங்கினார். (கஎ)

செந்நெல்வெண்ணெல்விளையுஞ்செறுக்களும்
கன்னன்மன்னுங்கழனியுஞ்சோலையும்
அன்னமாடுந்தடமுமகன்றுபோய்ப்
பன்னசாலைப்பழுவத்துளெய்தினார். (கஅ)

அன்னகாலையருந்தவக்கௌசிகன்
றன்னடித்துணைத்தாழ்ந்தரிச்சந்திரன்

பொன்னளிக்கப்பொருந்தினனென்றவர்
சொன்னபின்னர்தஞ்சூழலிற்போயினர். (கக)

அடிவணங்கியருந்தவர்போனபின்
கடிதுசிற்சிலதிங்கள்கழித்துநீள்
வடிசுடர்ப்படைமன்னனைக்காணிய
கொடியபாதகக்கோசிகன்றோன்றினன். (உ0)

கெடுக்கவந்தனனென்றுகிலேசியா
இடுக்கணுற்றிளந்தென்றலியம்பிட
மடுக்களும்மலர்வாவியுஞ்சோலையும்
நடுக்கமெய்தியலைந்தனநாடெலாம். (உக)

கள்ளநீதிக்கௌசிகனெண்ணிய
துள்ளமாரவுணர்ந்திளமந்திகள
துள்ளிநீங்கினசோலைகடோறுமென்
புள்ளிரிந்தனபொய்கைகடோறுமே (உஉ)

அலைகள்சாய்த்தகல்வாவியின்மீனெலாம்
நிலைகள்சாய்த்தயனீங்கினவாழைகள்
குலைகள்சாய்த்தயல்குப்புற்றுநின்றன
தலைகள்சாய்த்தனசாலியினீட்டமே (உ௩)

எள்ளையேயறிவற்றெறுத்தார்கையில்
பிள்ளையாதலிற்பெய்மலர்க்காவெலாம்
கிள்ளைபாடினகேகயமாடின
கள்ளையுண்டலின்வண்டுகளித்தவே (உ௪)

மாடமாளிகைமண்டபமாமதில்
ஆடரங்கமகழிற்றுளங்குவ
கேடனெய்தக்கிடுகிடுக்கின்றபோல்
நாடனின்றநகரிடைநண்ணினன். (உ௫)

தளரிளைப்பிற்றமனியவாயில்புக
களவில்செல்வத்தயோத்தியைநண்ணியே
கிளரொளிக்கதிர்கீழ்ப்படமேலுநீஇ
வளரொளிப்பெருமண்டபத்தெய்தினான். (உசு)

மந்தராசலமண்டபத்தெய்தலும்
அந்தமாதவற்கண்டரிசசந்திரன்
எந்தமாதவமோவருளிங்குநீ
வந்தகாரணமென்றுவணங்கினான். (உஎ)

காவன்மன்னகடிமறைவேள்விக்கென்
னேவன்மாக்கட்கிசைந்தபெரும்பொருள்
தாவெனச்சொலக்கேட்டரிச்சந்திரன்
ஈவலெத்துணைவேண்டுமென்றேத்தினான். (உஅ)

மானவன்சொலமாமுனிநோக்கியே
யானைமேனின்றெறிந்தகவண்சிலை
போனதூரம்பொருள்குவிப்பாயெனின்
மோனவேள்விமுடித்திடலாமென்றான். (உகூ)

இறைவனிவ்வகையீகுவன்யானெனா
அறைதிறந்திவணானையைத்தம்மெனக்
குறைவில்வாதுவரோடக்கொணர்ந்திடப்
பிறையெயிற்றுப்பெருங்களிறுற்றதே. (௩௰)

ஒத்ததேயமையும்மெனதொண்பொருள்
வைத்தனன்னின்னிடத்தடைமன்னயான்
சுத்தவேள்விதொடங்கிநாளெனக்
குய்த்திநீயென்றுரைத்தவனேகினான். (௩க)

அருவனங்கடந்தாச்சிரமப்புகுந்
தொருதருத்தடநீழலுறைந்துபார

மிருகம்புள்ளினம்யாவும்விரைந்திவண்
வருகவென்றுமனந்தனிலுன்னினான். (௫௨)

அலங்கலஞ்சடைமாமுனியன்பிலான்
நலங்குலைந்துவினைத்தவனுடனில்
கலங்கிவாய்களிற்கௌவியதீன்விட்டு
விலங்கெலாமுன்விரைந்துவந்துற்றவே. (௫௩)

வளையும்வாலெடுத்தோசைவருகனல்
விளையுங்கண்கள்விழுவனபோலுற
உளைவிரித்துவிதிர்த்துதறிப்பெருங்
கிளையினோடுற்றகேசரிகோடியே. (௫௪)

வாணிமிர்ந்துவளைந்துடல்கூனிநீள்
காணிமிர்ந்து*வெங்கண்கள்சிவந்துவிண்
மேனிமிர்ந்துவந்துற்றடாவெங்கடல்
போனிமிர்ந்துவரும்புலிகோடியே. (௫௫)

குளிருமாமுகில்கூடியவாமெனப்
பிளிறுகன்றும்பிடிகளும்பின்வர
வெளிறுதந்தககருநிறவெண்புகர்க்
களிறுகோடிகடிதுவந்துற்றவே. (௫௬)

கண்ணெலாங்கனன்மண்டக்கடுவிடம்
மண்ணெலாங்குதிகொள்ளமணிச்சுடர்
விண்ணெலாம்வெயில்வீசிடவாய்பிளந்
தெண்ணிலாவரவெங்கும்வந்தீண்டின. (௫௭)

மா¶னழுங்குபுல்வாய்மரைவாங்கலை
எனநானமெலிபெருச்சாளி○எய்

* வெண்கண் எனவும் பாடம்.
¶ அழுங்கு - ஆமை
○ எய் - முள்ளம்பன்றி.

கானமேதிகரடிசெந்நாய்நரி
வானரங்கடமாவிவைவந்தவே. (௩அ)

தோகைபூவைசுகங்குக்கில்சக்கர
வாகநாரைமடவனங்கோகிலம்
காகமன்றில்சிவல்கவுதாரிபூழ்
வேகமோடுபறந்துவிரைந்தவே. (௩௯)

முந்திவந்தமுதிர்சினமாக்களும்
வெந்திறற்கொடுவேகத்தநாகமும்
பந்திபந்திபறவைத்திரள்களும்
வந்துவந்துமுனியைவணங்கின. (௪0)

தழைத்தபுல்லுந்தழையுங்கனிகளும்
விழைத்தருந்திவெருண்டுவெகுண்டுகோள்
இழைத்துநீள்வனம்வாழ்கின்றவெம்மைநீ
அழைத்ததீதென்றருள்செயல்வேண்டுமே. (௪௧)

என்றுகூறமுனிவனியம்புவான்
குன்றுமேவுவிலங்கின்குலத்துளீர்
ஒன்றகூறுவதுண்டினியானுமக்
கின்றுநீர்செய்பணியென்றியம்புவான். (௪௨)

தாரின்மன்னுபுயத்தரிச்சந்திரன்
பாரின்மன்னுயிர்பைம்பொழிறண்பயிர்
வேரினோடுங்களைந்துவிரைந்துநீர்
வாருமென்றுமறைமுனியேவினன். (௪௩)

அக்கணத்திலிறைஞ்சியருந்தவன்
பக்கனின்றவிலங்கும்பறவையும்
திக்கனைத்துஞ்செறிந்துவிரைந்துபோய்ப்
புக்கவத்திருநாட்டின்புறத்தெலாம். (௪௪)

வெள்ளையானிரைவெம்புலிகோளரி
கொள்ளையாடினகொல்லையுஞ்சோலையும்
வள்ளைசூழ்ந்தவயலும்புனங்களும்
கிள்ளைதோகைகிளையொடுமொய்த்தவே. (சரு)

அடர்ந்துமந்தியும்வண்டுமகன்கடம்
தொடர்ந்துசெல்வனசோலைகள்பாழ்படப்
படர்ந்துயர்ந்தபழுமரக்காய்மரம்
இடந்திரிந்தனயானைகளெங்குமே. (சசு)

முழங்குநீர்த்தடமுற்றுமுடைத்துநீர்
வழங்குவண்டன்மடைகளுந்தூர்த்துராய்த்
தழங்குசாலியுஞ்சாடித்தழைகொடிக்
கிழங்குமாய்த்தனகேழற்றிரள்களே. (சஎ)

காட்டுவாழ்கலைமான்கடமாமரை
நாட்டுவாழ்புனஞ்சேரநலிந்திட
ஓட்டுவாரைபொதுக்கிநின்றேபெருந
கோட்டுவாரணங்குத்திப்பிளந்தவால் (சஅ)

இரவுகாவலிருப்பவரியாரையும்
அரவுந்தேளுமரணையுங்கொன்றவால்
கரவினின்றுபுலியுங்கரடியும்
வரவரக்கொன்றுமாக்களைமாய்த்தவே. (சகூ)

மதந்தருங்கரிமான்மரைவல்லுளி
ததைந்ததாமரைத்தண்வயலிற்புகப்
புதைந்துசேற்றினிற்புக்கவும்வேரறச்
சிதைந்தவுஞ்செழுஞ்செந்நெலும்வெண்ணெலும். (ரு0)

நெற்பசும்பயிர்பற்றினியிர்தன்மா
பொற்பின்மன்னர்புயவலியற்றநாள்

கற்பின்மாதர்கருங்குழல்பற்றிநீள்
வெற்பின்மாக்கள்விசித்திடல்போன்றவே. (கூக)

பண்டுபோற்பழனச்செழுஞ்சாலியை
உண்டுபோதவுழக்கியமாக்களைக்
கண்டுபோய்க்கடிவோர்தமைக்கவ்வியே
கொண்டுபோவனகோளரியீட்டமே. (கூஉ)

இந்தவாறுநிகழ்ந்திடவேங்கியே
அந்தநாட்டிலனைவருங்கூடினர்
வந்தயோத்தியின்மன்னனைப்போற்றித் தஞ்
சிந்தனைப்படர்செப்பத்தொடங்கினர். (கூங)

என்னபாவமிதற்குமுன்கண்டிலேம்
மன்னர்மன்னவனத்துவிலங்கினுல்
செந்நெல்கன்னறிளைப்புனந்தேம்பொழில்
இன்னவெண்ணிலவிற்றனவின்றென்றார். (கூச)

கலையுமானுங்கடமையுமேனமும்
மலியுந்தண்பயிர்யாவையுமாய்த்தன
புலியும்பல்லமுஞ்சிங்கமும்புக்குயிர்
நலியுமோட்டநடந்தவர்தம்மையே. (கூரு)

நீரைமாய்த்தனவாரணநீள்பயிர்த்
தூரைமாய்த்தனமான்மரைசூகரம
வேரைமாய்த்தனமென்மயில்பைங்கிளி
சேரமாய்த்தனசெந்நெற்கதிரையே. (கூசா)

தின்றுதின்றுதிரண்டபைங்கூழெலாம்
ஒன்றுமின்றியுழக்கினவோட்டவே
சென்றுசென்றுசெறிந்தவர்தங்களைக்
கொன்றுகொன்றுகுவித்தனகோடியே. (கூஎ)

அரியனந்தமரவுமனந்தம்வெங்
கரியனந்தங்கரடியனந்தமா
நரியனந்தநவியனந்தங்கொடு
வரியனந்தமலிந்தனவந்தென்றார். (௯௮)

மயிலுங்கிள்ளையும்பூவையும்வாவலும்
குயிலுங்காகமுங்கூகையுமன்றிலும்
மயிலுமகாடையுமன்னமுமென்றபேர்
பயிலுங்கூடப்பறவையனந்தமே. (௯௧)

சாற்றமேற்றுவந்தெம்மைநலிந்திடத்
தோற்றுமாகுலச்சூழ்வினை தன்னை நீ
மாற்றிடாயெனின்மன்னவவெங்களால்
ஆற்றொணாதென்றடிதொழுதேத்தினர். (௯௦)

அங்கண்மாநிலத்தன்னநன்னாட்டவர்
தங்கள்வாய்மொழிகேட்டரிச்சந்திரன்
திங்கள்சூடிதிருவிளையாட்டினுக்
கெங்களாற்செய்வதென்னெனவெண்ணினன். (௯௧)

அறைபுனற்றிருநாடழிவுற்றதற்
கிறைபுமக்கிரண்டாண்டினுக்கில்லெனக்
குறைவிலாநிதிகூறையளித்துநீர்
உறைபுழிதொறுஞ்செல்லுமென்றேகினன். (௯௨)

அரிச்சந்திரசரித்திரம்

மூன்றாவது

வஞ்சனைக்காண்டம்

முற்றுப்பெற்றது.

ஆ பாடல்கள் ௯௨௦.

உ

சிவமயம்.

நான்காவது

# வேட்டஞ்செய்காண்டம்.

நிலவுகாலுநெடுங்குடைமன்னவன்
புலவுவாயபுலிமுதல்யாவையும்
சுலவுதானைதொடர்தரவேட்டஞ்செய்
செலவுமேவியசெய்திவிளம்புவாம். (௧)

செல்லுமென்னப்பணிந்தவர்சேறலும்
வெல்லும்வெம்படைவேந்தனமைச்சர்காள்
கொல்லுமிந்தக்கொடுவினைக்கென்செய்கோ
சொல்லுமென்னத்தொழுதவர்சொல்லுவார். (௨)

ஈட்டவேடருங்கோலும்வைவேலுநா
மீட்டமுங்கொடுகானகத்தெய்தி
வேட்டையாடிவிலங்கினமாய்த்தனை
நாட்டையேயாம்பணலனெனக்கூறினா. (௩)

என்றமைச்சரியம்பலுமன்னவன்
நன்றுநன்றெனநண்ணிமனக்கொளாக
குன்றவாணரைக்கூட்டிக்கொணர்கென
நின்றதூதர்தொழுதயலீர்கினர். (௪)

ஓடினார்களுயர்வரைக்கானகம்
நாடினார்கணன்னயகனுங்களைத்
தேடினனென்றசெப்பலுஞ்சிற்சிலர்
கூடினார்துடிகொட்டினரெங்குமே. (௫)

அந்தவேலையருஞ்சுரம்யாவினும்
கந்தன்மேவுகுறிஞ்சிக்கடத்தினும்
குந்தம்வேல்சிலைகூன்குணில்கொண்டவண்
ந்தவேடர்வரவுவிளம்புவாம். (௬)

## வேறு.

லிகட்டிபதன்மீதுமொய்த்தொளிபிறங்குசொட்டைகளைத்துநீள்
மாலைபிட்டுவளர்குஞ்சிதுஞ்சநெல்வரிந்திறுக்கிமலர்சூடியே
காலினிறமெறுசெருப்பணிந்துகழல்கட்டிநீடுடிகறங்கவை
வேல்பிடித்துடலம்வேர்வரும்படிவிரைந்துவந்தனராணந்தரே. (௭)

கொலைபடுத்தசமனுறைவதற்குரியகூடெனத்தகையதூணியில்
கலைபடுத்தபிறையனையமுத்தலையகணைநிறைத்துவளர்மார்பினில்
மலைபடுத்தனையபுயமனைத்திறுகவார்விசித்துவருகாரெனச
சிலையெடுத்துவிழிகனலெழக்கடிதுசென்றவேடுவரானந்தரே. (௮)

பணிலமொத்தபலகறைநிறைத்தபலகவசமிட்டுவெகுதுவசராய்
அணிமயிர்க்கரடிமதகரித்திரள்கள்புலிமுதற்கிரியினளவவாய்க்
கணிலெதிர்த்தவைகள்கரவிலுற்றவைகடுணிபடக்கருவியெறியுமக்
குணிலெடுத்துலகநிறையவந்தனர்கள்கோடிகோடிகொலைவேடரே.

வென்றிமத்தகமதக்களிற்றினெடுவெண்மருப்பில்விளைமுத்தமும்
குன்றிமுத்துநிரையொக்கவைத்தகனகோவைமார்பினிடைதாழவே
பன்றியிற்பருமருப்பிணைத்தெழில்பயின்றகண்டிகையணிந்துயிர்
கொன்றுதின்பதுவிரும்பிவந்தனர்*குடாரவேடரொருகோடியே. ()

பாசமிற்றிடவிசித்தசங்கிலிகள்பற்றறத்தமிலழன்றுவெம்
பூசலிட்டனலெனச்சினந்துறுபுணர்ச்சியின்மிகுமுணர்ச்சியாய்க்
கேசரிக்குருளையென்னவுளைபயில்கீதவோதைதிசைநாலிலும்
வீசமுற்செலநெருக்கமுற்றுவருவெண்சுணங்குசதகோடியே. (௧௧)

---

* குடாரம் - கோடரி.

அந்தரத்திடியெனக்குரைத்துமுதிராழிபோலுறுமிவார்தடங்
கந்தரத்திறுகவிற்றரப்பியிருகான்மடக்கியெதிர்தாவியே
தந்தமிற்கறவுகொண்டுபல்பலதயங்கவெங்கணறடங்கணூற்
சிந்திடச்சருவிமுன்கதித்துவருசெஞ்சுணங்குசதகோடியே. (கஉ)

வெண்டையங்கவடிசண்டைவாரெழில்விளங்குவெங்கனைகளங்களும்
தண்டைகிண்கிணிசிலம்புமின்றொலிதழங்கிடுங்கடியதாள்களும் [வே
துண்டவெண்பிறையிரண்டுமின்றெதிர்துளங்கவெட்டெயிறுமாக
மண்டலங்குழியவந்தஞாளிபலவண்ணமுள்ளசதகோடியே. (கங)

பால்சுருண்டு பணிவாய்வளர்ந்துதடமார்பகன்றிடைசிறுத்துவெங்
மேலுயர்ந்தணிசிரம்பருத்துநெடுவீரவாளெயிறிலங்கிட
காலுகின்றமணிபாரமென்றுநெடுநாவிமிர்த்துமிளிதாழவே
காலுயர்ந்துகிர்விளர்த்துமொய்த்துவருகரியநாய்கள்சதகோடியே. ()

மலைபெயர்ந்துலவுநீலமால்வரைகணிகரெனப்பிடரினுகளிறீஇத்
தலையிறக்கியகல்வாயில்வெண்ணுரைதயங்கநாமுழுமிறங்கவே
அலையெழுஞ்சலதியொலியெனக்கதறியணிகரும்பகடிழுக்கநீள்
மலைகளுந்திரையும்வாரும்வன்கயிறும்வந்தவன்சகடனந்தமே. (கரு)

இமையமந்தரமுதற்றடங்கிரியுமிதனிடைப்படுசுரங்களும்
அமையும்வேடுவரனந்தகோடியரணைந்துமேருவரையன்னதோர்
சமையமண்டபநிறைந்திருந்ததிரிசங்குமைந்தனைவணங்கியே [சினர்.
எமையழைத்தபணிவிடையுரைத் தருள்கவென்றுமண்மிசையிறைஞ்

சிங்கமானைபுலிபன்றிமான்மரைதிரண்டணைந்துதிருநாடெலாம்
எங்கணும்பரவிவந்துதண்பயிரியாவையுங்கொடவழித்தலால்
அங்கவற்றைவதைசெய்வதற்குமையழைத்தனங்கடிதுசென்மெனு
உங்களுக்குதவியாகயாம்வருதலுண்டெனப்பலவுணர்த்தினன். (கஎ)

முன்னடக்கவெனவாடையாபரணமுற்றும்வேடுவர்தமக்களித்
தன்னவர்க்குவிடைநல்கிமண்டபமகன்றுபோனபினமைச்சரைச்

சென்னெறிப்படவிரைந்துநீர்நமதுசேனையோடினிதுசென்மெனுத
தன்னகத்திடைபுகுந்துகற்புடையதையல்வைகுமிடமெய்தினன் ()

கரியகாழகம்விரித்துடுத்துவரிகவசமிட்டுமணிமுடிதரித்
தரியவெற்றியுடைவாளயிற்சுரிகையரையழுதிவயிரவிதரும்
பெரியபொற்சிலையெடுத்துவாளிபலபெய்ததூணி*புறமெய்தவே
தெரிவையர்க்கரசியுடன்வரக்கடிதுசென்றுதேரின்மிசையேறினன்

கோவெழுந்தெனவங்கெழுந்தனகுடைத்திரட்கடையுகத்திலங்
காவெழுந்தகடல்போலவெங்கணுநடந்தமன்னவர்பெரும்படை
வாவெழுந்தகடுரண்டிசாமுகமறைத்தமாமுகினெருக்கியே
தூவெழுந்தனகயங்கள்சென்றனதுரங்கமுந்துறநடந்தவே. (௨௦)

கோடகந்தருவிலாழியுங்கரடகுஞ்சரந்தருவிலாழியும்
ஆடகக்கவரியுஞ்செறிந்துபகிரண்டகோளமுமறைத்திட
மாடவீதிகள்கடந்துசெம்பொன்மதில்வாயில்விட்டகலநண்ணியே
வேடர்சேனையொடுகூடினனமுதவேலைமைக்கடலில்வீழ்தல்போல்.

சிலையெடுத்தபுயமன்னனைத்தொழுதுசென்றுவேடுவர்பரந்துநீள்
அலையெடுத்தமலர்வாவியும்வயலுமகழியும்பொழிலடங்கலும்
வலையெடுத்தருகுதிரைவளைத்துமணிவாரொழிக்கியிடைகூவெனக
கலையுழைத்திரள்கள்கடமைபன்றிபுலிகரடிகோளரிகலந்தவே. ()

ஏனமெண்குபுலியாளிசிங்கமதயானைசம்புழைபுல்வாய்மரை
நானமோரிகடமாவழுங்கிரலைநாவியூகமெலியாகணில்
கானமேதிவரையாடுடும்புமுயல்கால்விசைத்திடைகலந்தன
வானகத்திடைபறந்தெழுந்தபலவன்சிறைப்பறவைவர்க்கமே. (௨௩)

வட்டமாகவரிவிற்குனித்துவயமன்னர்விட்டபலவன்சரம்
பட்டமாவினம்விழுந்துழன்றுடல்பதைத்திறந்தனவனந்தமால்

* முதுசெய்தவே எனவும் பாடம்.

தொட்டவேல்குணிலெறிந்துவேடுவர்துணித்தமாவினமனந்தமால்
விட்டஞாளிகள்கடித்திழுத்திடவிழுந்தமாவினமனந்தமால். (௨௪)

தண்டலைப்படுவிலங்கினிற்படுசரங்களுந்துணிசிரங்களும்
திண்டிறற்குமார்மண்டலத்தலைவர்செங்கையிற்செறிவிலுண்டையும்
விண்டலத்திலுயர்வன்சிறைப்பறவைமீதுபட்டுயிரிழந்துபோய்
மண்டலத்திலிடமின்றியெத்திசையும்வந்துவீழ்வனவனந்தமே. ()

வேல்கள்பட்டவொருகோடிகோடி விறல்வில்லுமிழ்ந்த சுடுபல்
கொடுங், கோல்கள்பட்டவொருகோடிகோடியெறிகுணில்கள்பட்ட
வொருகோடிதேர்க், கால்கள்பட்டவொருகோடிகோடியெரிகவணு
மிழ்ந்தபலகற்கள்பட், டோலமிட்டவொருகோடிகோடி சிலையுண
டைபட்டவொருகோடியே ௨௬)

துடைகளற்றனசிரங்கள்பற்பலதுணிந்துவீழ்ந்தகைதுமிந்தன
இடைகளற்றகுடரோடியற்றனவெழுந்துதாவுமடியற்றன
கடைகளற்றனநிணந்தெறித்தனநரம்புமூளைகள்சுழன்றன
கடையுகத்திலெழுகடலெனக்குருதிககனமீதுறவெழுந்ததே. (௨௭

அலினுடற்களிறுகளிமடிந்துபிடியகல்வதற்கும்வழியற்றன
புலியுடன்கரடியுழைமடிந்துகலைபோவதற்கும்வகையற்றன
எலியெழுங்கணிலிறந்திறந்துமுயலேகுதற்குமிடமற்றன
வலியசிங்கமுடனாளியிற்றுமரைவருவதற்குநெறியற்றவே. (௨௮)

பட்டபட்டவையெடுத்துவேடுவர்பருத்தகட்டைகளடுக்கியே
சுட்டசுட்டதசைதின்றுதின்றுசுணங்கினம்பலபிணங்கவே
மட்டறப்பருகியிட்டளித்திலர்மடுக்களிற்புனலருந்தியே
இட்டமாலைபுனைமன்னர்மன்னவனிருந்தசூழலிடையெய்தினர். ()

இவ்விடத்துளவிலங்கிறந்தவெறிவேல்பிழைத்தும்வலைமீறியும்
வெவ்விடக்கணைகடப்பியுஞ்சிலவிலங்குபோனவுளவாயினும்

அவ்விடத்தினிடைப்பதோவடவிபுகுவதோகரியணைவதோ
எவ்விடத்தினிதுசேர்துமென்றவர்விளம்பமன்னவனியம்புவான். ()

சென்றசென்றதிசைதோறும்யாமினிதுசென்றுதிண்டிறல்விலங்
கெலாம், கொன்றகொன்றவைமுடிந்தபின் வருதலாகுமுன்னிய
குறிப்பெனக், கென்றுதேரின்மிசையேறியே யிறைவனேகலுங்க
ளிறைஞ்சியே, நின்றவேடர்பெரும்படைத்திரளெருங்குகானிடை
பரந்தவே. (௩௧)

அரிபிளந்தகரிபிளிறுமோசையிலையறிதுமென்றணுகிபடர்குவார்
கரிகவர்ந்ததிரள்விளவினன்கனிகழன்றவென்றவணெருங்குவார்
வரிநெடும்புலிபிடித்திடககதறுமாவெனச்சிலைவணக்குவார்
பருமணற்கிழியவுழுதவோதையிலைபன்றியென்றவிடைதுன்றுவார்.

குருகலம்புமொலியிதுதடாக மிதுகுஞ்சரங்கள்கரமொண்டுநீர்
பருகுகின்றவொலியிதுவெனக்கடிதுபற்றுவார்நெடிதுசுற்றுவார்
சருகலம்புமொலிசெவியுணர்ந்திரலைதானெனக்கடிதுதாவுவார்
முருகலர்ந்தபொழிலிலைவதாகமெனமுந்துவார்பகழிசிந்துவார். ()

மயின்முழக்கமிதுகிளிமுழக்கமிதுவாருமென்றுசிலரோடுவார்
குயின்முழக்கமிதுசிவன்முழக்கமிதுகூடவாருமெனநாடுவார்
வெயிலெறிந்ததுவிளங்குமாமணியின்வேகநாகமெனநீடுவார்
துயிலுணர்ந்தவெருமைகலித்ததிதுதொடர்வமென்றுபலர்கூடுவார்.

குன்றுகுன்றுதொறுநீலமேவிய குளந்தொறுங்குளிர்வனந்தொ
றும், சென்றுசென்றடிதொடர்ந்தடர்ந்து பலதிக்கினுஞ்செறிவிலங்
கெலாம், கொன்றுகொன்றுகுவைசெய்தெரித்திடுகொடுங்கனற்படு
கொழுந்தசை, தின்றுதின்றுபுனலுண்டு வென்றிபுனைதிண்*பெரும்
படைநடந்ததே. (௩௫)

* செருப்படை என்றும் பாடம்.

இரவினிற்பெரிதிருண்டுசூன்மழையிரண்டுதுன்றியுலகெங்கணும்
பரவியெய்தகணையெதிர்வரும்படிபடர்ந்தமுண்டகவிறும்பினுற்
றரவினங்கரடிபுலிகள்பன்றிகளழுங்குடும்பெலிமடங்கன்மான்
கரவிலுற்றிதனுளுறைபுமென்றெயினர்காடெலாமெரிபரப்பினார். ()

சண்டவெந்தழல்பசித்தழன்றுலகுதன்னையுண்ணவெழுதன்மை
போல், கண்டமொன்பதுமெரிந்திடத்தெறுகடுங்கொழும்பொறிகள்
சிந்தின, கொண்டலிற்புகைபரந்துசுற்றின கொழுஞ்சுடர்ப்படுகொ
ழுந்துபோய், அண்டமுற்றனபரந்ததந்தரமதற்குமப்புறமெழுந்ததே.

சுட்டசெந்தழலில்வெந்துவெந்துடல்சுருண்டபற்பலவிலங்கினம்
கட்டுபாசமதுவிட்டஞானிகள்கடித்திடச்சிலகழிந்தன
கெட்டழிந்துநிலையற்றமீமிசைகிளர்ந்தெழுந்துகுதிகொண்டுபோய்
விட்டமாமுனியிருந்தசூழலில்வெருண்டுசிற்சிலவிழுந்தவே. (௩௮)

மட்டிலாதனவிடுத்தனமமவனவதைத்தனனமகாவிவனத்துலே
பட்டிலாதனவெருண்டுவந்தனவெனச்சினம்பதைபதைத்திட [ங்
விட்டிலாவினைவிளைப்பல்யானெனவெகுண்டுவிட்ட வெகுவெவ்வில
கெட்டிலொன்றுவரல்கண்டிலேமெனவிருந்தமாமுனியிரங்கினான்.

வேறு.

கலங்கலென்றணிகரத்தினாற்கௌசிகனமைத்து
விலங்கினங்களைநோக்கிநீர்வினைவிளைத்ததுவும்
அலங்கன்மன்னவன்வதைத்ததுமாருயிர்வருந்த
நலங்கிவந்ததுநவிலுமென்றுரைத்திடநவிலும். (௪௦)

காணடுங்கிடக்கண்புனல்சொரிந்திடக்கழுத்தின்
மேனடுங்கிடமெய்யெலாநடுங்கிடவீசும்
வானடுங்கிடமறலியைக்கண்டமன்னுயிரே
போனடுங்கிமாமுனிவனைப்போற்றியேபுகலும். (௪௧)

சென்றனஞ்செழும்பயிர்களுமுயிர்களுஞ்சிதைத்து
நின்றனம்மெமைநெடுமுடிமன்னவனேர்ந்து
கொன்றனன்பிழைத்தெய்தினஞ்சிலசிலகுறையும்
என்றவாலிரிந்தெய்தியவிலங்குகளெல்லாம். (௪௨)

என்றுகூறிடக்கௌசிகனெரியெழவிழித்து
நன்றுநன்றெனநகைத்துக்கைநாசியிற்சேர்த்தி
வென்றிவேந்தனைவெல்வதாகருதியோர்வீரப்
பன்றிதன்றவப்பெருமையாலிமைப்பினிற்படைத்தான். (௪௩)

பொன்னிறத்துமெய்வெண்ணிறத்துகிர்புட்பராகம்
நன்னிறக்கண்டநாலுகாலுஞ்செழும்பவளம்
செந்நிறத்தகண்செம்மணிசெழுமுகம்பச்சை
அந்நிறக்குரநீலம்வச்சிரத்தெயிறதற்கே. (௪௪)

வயிற்றினாற்பெருமண்புவிமறைபடமறைக்கும்
எயிற்றினாலுயர்விண்புவியேழையுமெடுக்கும்
கயிற்றினாலுயிர்கவர்ந்திடுகாலனைக்கலக்கும்
பயிற்றினார்பினையென்செயாதப்பெரும்பன்றி. (௪௫)

அப்பெருங்கொடும்பன்றியையருந்தவனோக்கி
எப்பெரும்படைத்தலைவருமெயினருமிறக்கத்
தப்பறக்கொலைசெய்தரிச்சந்திரன்றன்னை
இப்பெரும்பொழில்கொணர்ந்துநீபோவெனவிசைத்தான். ()

என்றுகூறிடவிருடியைவணங்கிநெட்டெயிற்றால்
குன்றுநீறெழவெற்றிநீள்குவடெலாங்குறைத்து
நின்றுநின்றுசெங்கண்களானெருப்புகவிழித்துச்
சென்றுசாடிற்றமன்னவனசேனையைச்சிதற. (௪௭)

தலைகளற்றிடத்தடக்கரமற்றிடவீரர்
குலைகளற்றிடக்குஞ்சரமற்றிடக்கொலைஞர்

சிலைகளற்றிடச்செஞ்சரமற்றிடத்திரைகள்
கைகளற்றிடவெற்றிற்றுமாயவராகம். (௪௮)

ருமீரலும்பித்துநீள்குடர்களும்பிளக்கத்
தாளுநெஞ்சமுமற்றிடமுடிவலைச்சாடி
ஆரமற்றிருதோளுமற்றங்கையிற்பிடித்த
வாளுமற்றிடவெற்றிற்றுமாயவராகம். (௪௯)

கரிபடப்படசசேனைகள்படப்படக்கலினப்
பரிபடப்படப்பரிகலம்படப்படப்பசுங்கண்
ணெரிபடப்படவிரதங்கள்படப்படவிடைதாள்
அரிபடப்படச்சுணங்குகள்பட்டனவனந்தம். (௫௦)

கைதவம்பிதுவென்றறக்கடற்படைகலங்கி
மைதவழ்ந்ததிண்குன்றினுமரத்தினுமறைந்து
பெய்தவேல்களுங்குனில்களும்பிறைமுகமழுவும்
எய்தவாளியும்பொடிபடவிதிர்த்ததவ்வேனம். (௫௧)

குடர்பிளந்தனகுறங்குகள்பிளந்தனகொடுங்கை
மடல்பிளந்தனவாய்ப்பிளந்தனவிருவகிராய்
உடல்பிளந்தனவுரம்பிளந்தனசிரமுருண்ட
கடல்கிடர்ந்தெனகுருதிநீர்வனமெலாங்கலந்த. (௫௨)

சிரமிதந்தனதிரள்பிணமிதந்தனதெறித்த
கரமிதந்தனகழன்றனகால்களுங்கண்ணும்
குரமிதந்தனகுதிரைகண்மிதந்தனகுணில்வேல்
சரமிதந்தனகுருதியந்தடங்கடறனிலே. (௫௩)

தோளைவீழ்த்ததுதுடைகளைவீழ்த்ததுதோள்சேர்
தாளைவீழ்த்ததுதடக்கையைவீழ்த்ததுதயிர்போல்
மூளைவீழ்த்ததுதாழையின்மாருதமோதப்
பாளைவீழ்ந்தெனவீழ்ந்தனவேடர்தம்பற்கள். (௫௪)

கொலையெடுத்தவேலெயினர்தங்குருதிநீர்பெருகி
மலையெடுத்துநீண்மரங்களைமுறித்தெடுத்தோடிச்
சிலையெடுத்துவீழ்திரைகளுமலைகளும்வாரி
அலையெடுத்தநீர்வாரியையணைந்ததையன்றே. (௫௫)

சென்றசென்றவத்திசையெலாம்பிணக்குவைசெறியக்
கொன்றவீழ்த்திடக்குலைந்ததக்கொடும்படைக்கூட்டம்
நின்றதிக்கினைநாடியேநிருபன்முன்னொருவன்
பன்றியோடியவிசையினைப்பலமுறைபகர்ந்தான். (௫௬)

அந்தவாசகங்கேட்டரிச்சந்திரன்முனிந்தே
எந்தவாறவந்தெய்தியதிவர்களைவதைத்த
தந்தவாறெதுகூறெனவரசனைவணங்கி
எந்தைகேளொருவேடுவன்வகைவகையிசைத்தான். (௫௭)

வானமேழுமண்ணேழுமுன்மருப்பினாலெடுத்த
ஏனமோபுரமெரித்தவனுலகெலாமெரிக்குந்
தானமோவுயிர்துரிசறச்சமனெடும்பன்றி
யானதோவதுசிறிதும்யாமுணர்ந்திலமையா (௫௮)

தலைநிறம்பச்சைதன்னிறம்பொன்னிறந்தறுகண்
ணிலைநிறஞ்செழுமாமணிகுரமிந்த்ரநீலம
மலையினும்பெரிதானதோர்வராகயவந்தெய்திக்
கொலைபுரிந்ததுகூன்பெருங்கோட்டினாலென்றான். (௫௯)

சேனையும்பெருந்தேர்களுந்திண்பரித்திரளும்
யானையுங்கொடுமுடுவெலுமிறந்திடவெற்றிக
கானெலாம்பிணக்காடுசெய்தெய்திற்றக்கண்டாய்
தேனலங்கலாய்தேரினைத்திரிதருளென்றான். (௬௦)

வேறு.

என்றபகர்ந்திடமன்னவர்மன்னனெழுந்தகதத்துடனே
கன்றிதுநன்றெனவங்கையொடங்கையறைந்துநகைத்துடனே

இன்றமடிந்தவரின்னுயிர்தம்மிலுமெம்முயிரோவலிதென்
றன்றசவுந்தரிதந்தநெடுஞ்சிலையங்கையெடுத்தனனே. (௬௧)

பாகரின்றிக்கவனுன்மறைமுற்றெதிர்பாகுகுறித்தவனும்
சாகரமுற்றெழுபானுகுலத்திறைதாளிணையைத்தொழுதே
நாகரிகச்சுடராடரவப்பணிநாயகிபொற்சடிலச
சேகரிபத்திரகாளிகொடுத்தருடேரைநடத்தினனே. (௬௨)

படியபிடிந்ததுபொடியுமெழுந்ததுபலபலபைம்பொழிலும்
மடியவிழுந்தனககனமடர்ந்துயர்வரைபுநெரிந்தனவான்
முடியுமதிர்ந்ததுகதிருமறைந்ததுமுகிலுமுழன்றதுநீ
ரிடியுமுதிர்ந்ததுகொடிமலையஞ்சுடரிரதநடந்திடவே. (௬௩)

மாறுபடச்சிலதேரெனவுற்றெழுமால்வரையதனையும்
நீறுபடப்படநாடிமணிச்சுடர்நேமிநெரித்தனவால்
ஆறுபடப்பட ஆறுபுனற்றிரையாழியையொத்திடவே
வீறுபடுத்துயர்கானமனத்தையும்வேரொடெடுத்தனவே. (௬௪)

தங்கமுடித்தனிவெண்கவிகைத்திரிசங்குதழைத்தெதிரே
திங்களெனத்தவளந்திகழ்மூததொளிசிந்துமருப்பதனல்
வெங்கண்மதக்களிறம்பலவிற்செருமென்றபரித்திரளும்
பங்கமுறப்பலபஞ்சுபடுத்தியபன்றியெதிர்த்ததுவே. (௬௫)

வேயின்றிகுத்தெழுமால்வரையெட்டினுமீதுவிசைப்புறவே
பாயுமுகிற்குலமேழையுமப்பொடுபாரில்விழச்சிதறும்
வாயினுரைத்திசைநாலுமிறைத்துயர்வானுமிறைக்கும்விழித்
தீயின்மணித்திரைநீர்கடலைக்கனல்சீறமெரித்திடுமே. (௬௬)

ஆடன்மதத்திருநாலுதிசைக்களிறுணவையத்தனையும்
கோடதனிற்கரமீதுறவைத்துடல்கூசிவெருகமெகாளவே
சேடன்முதற்படவாளரவத்தலைசோரநடுக்குறவே
உடம்விசைத்தெழுநீள்புவியைப்புனலூறநெரித்துழுமே (௬௭

ஏறுபடுத்திடுபாகர்செலுத்தியவோடைமதக்கரியை
நீறுபடுத்திடும்வீரர்நடத்தியநீளிரதத்தினையே
கூறுபடுத்திடும்வாதுவரெற்றியகோலவயப்பரியைச்
சேறுபடுத்திடுமாமகரத்திரள்சேருமளக்கரையே. (௬௮)

அனர்த்தம்விளைக்கவிடுத்ததவத்தனளித்தவுரைப்படியே
சினத்துவெறித்துமதக்கரிசற்கிதிடுக்கிடவுற்றணுகி
இனத்துரகத்தருணக்கனகத்திரதத்தினையெற்றுகெழு
மனத்திளிரினைத்துவலத்தபுறத்தின்மருப்பையொடுக்கியதே. (௬௯)

உதித்ததுணைப்பிறைபொற்றமருப்பையொடுக்கவுணர்ச்சிபெருக்
சதித்தபெருத்தசிலைக்குளடுத்தொர்கனற்கணைதொட்டுவிட
எதிர்த்தகிருட்டியினெற்றியின்முற்றியெடுத்தகலக்கொடுபோய்
விதிர்த்துடலுட்கிவெருக்கொளமற்றொருவெற்பிடையுய்த்ததுவே.

உய்த்ததுநீளிடைபத்துளயோசனையுற்றெழுமால்வரைமேல்
வைத்தலும்வாய்வழிகக்கியசோரியில்வட்டணையாவுழலா
மெய்த்தவன்வாழ்பொழிலுட்புகவோடலும்விட்டபதாதியெலாம்
மொய்த்தனகாவலனைப்புடைசூழ்தரமுற்கிளர்வாரிதிபோல் (௭௧)

கடற்படைசுற்றியிரைத்திறைபத்மகமுற்றனையைத்தொழலும்
தடக்கையமைத்துமனத்திலலைத்தறவிர்த்திரதத்தினைமுன்
நடத்தியெதிர்த்தகிருட்டிவதைக்கடுத்தனுவைத்துநிணக்
குடற்கடெறித்துவிறற்படைபட்டகொலைக்களமுற்றனனே. (௭௨)

புரவலனப்படைகரிபரிபட்டதொர்புதுமைகளைத்தெரிசித்
தரகரவிப்படிவிளைவதெனக்குனதருளினெறிச்செயலென்
றிருகரம்வைத்திருசெவியைமறைத்தெழின்முடியையசைத்தெதிரே
துரகநடத்திடவிரைவினிழுத்தனசுடரிரதத்தினையே. (௭௩)

ஏனம்விழுந்தயர்மால்வரைகண்டதினேறியிழிந்தகலப்
போனதுணர்ந்தடியீதுதொடர்ந்துபுகாதவனங்கள்புகுந்

ஞானமுர்த்திருமேனியுநுண்பொடியாடமடந்தையுடன்
மானவெல்வந்தொருவாசநெடும்புனல்வாவியணைந்தனனே. (எ௪)

காவின்மிசைந்தெழுதாமரையிற்படர்காவிகளிற்படரும்
தேனின்முழக்கொலிநாலுதிசாதிசைசேரவியப்புறுமால்
மீனின்முழக்கொலியூழியினிற்கடைவேலையையொப்பதுநீள்
வானின்முழக்கொலிபோல்வனசக்கரவாகமிரைப்பதுவே. (எ௫)

தமரநெடுந்திரையெரிகுரையும்பலசகுனமுழங்கிரையும்
அமரமடந்தையர்குடையொலியும்பலவுருவிவிழுங்கலியும்
திமிரமதர்க்கயனிறைவுறமொண்டறல்சிதறதிர்வுங்குரவம்
கமழ்தருமவ்வனமுனிவர்கமண்டலுகளகளனுந்தொனியும். (எ௬)

முறுகுகுடைந்தவரிமுரலளிகுந்தொனிமுதலைகடர்தமின்வந்
தருகுசெறுந்தொனிகுடமிகர்வெள்வளையகடுளையுந்தொனிவெண்
குருகிரியுந்தொனிசிரல்கள்விழுந்தொனிசொரிவரிவந்துபுனல்
பருகுதமிகுந்தொனிபறவைகளின்றொனிபகலிரவுந்தணியா. (எ௭)

அறத்தவர்வற்கலையிற்றுவர்சித்தமலர்ப்பெர்ழில்பொற்பிரசம்
மறத்தகளிற்றின்மதத்திரைழுக்குமடக்கவரிப்பொழிபால்
சிறத்திடுபசசைமணிதருகிர்வச்சிரவித்திலமுட்களுல
கறத்தகெளுதசித்தபசுத்தகணிப்பதெவர்க்கெளிதே. (எ௮)

வேறு.

முளரிசெங்குமுதநீலமுண்டகங்குவளைவெள்ளை
கிளர்நறுமலர்களெல்லாங்கிளையொடுமலியப்பூத்த
அளவிலாமதியுமீனுமருக்கருமலியவண்டம்
வளர்புவிதனிலும்வேதாவகுத்தனபோன்றவன்றே. (எ௯)

பண்கொளாததனுணீரும்வளைகளுமலருமீனும்
விண்கொளாததனுள்வைகும்வெண்குருகன்னநாரை

பண்கொள்வாய்வண்டுவைகும்பதுமத்தின்பரப்புநோக்கின்
கண்கொளாமனமுங்கொள்ளாகாவியுமன்னதேயால். (அ0)

பீதெலாந்தரங்கமஃதின்மேலெலாங்கமலப்போது
போதெலாஞ்சங்கஞ்சங்கின்புடையெலாம்பொருந்துதாது
தாதெலாம்வண்டுவண்டின்றுளெலாஞ்செழுந்தேன்மற்றும்
ஈதலாவில்லையந்தவிரும்புனற்றடத்திலம்மா. (அக)

பங்கயமுகமுங்கண்ணும்பாதமும்பணைத்தபாரக்
கொங்கையுஞ்சைவலப்பூங்கூந்தலுங்குமுதவாயும்
செங்கயற்கண்ணும்வள்ளைத்திருநெடுங்குழையுங்காட்டி
மங்கைபுட்கரணியென்பாள்வள்ளலையுள்ளங்கொண்டாள். (அஉ)

வரையடுத்தரியசோதிமணிகொழித்தருவிபாய்ந்த
விரைமலர்ப்பொழிலினீழல்வெண்டிரைமேன்மேன்மோதி
நிரைநிரைத்தரளமுந்திநெடுநிலாவிரிந்தவண்டற்
கரையினைமன்னன்சார்ந்தான்கடலினையருக்கன்சார்ந்தான். (அங)

யானையுந்தேருமாவுமிழிந்தொருங்கியாருமீண்டித்
தேனையொத்தினியவாவிச்செழும்புனல்குடைந்துண்டாறிக்
கானையுற்றிலங்குதண்பூங்கடிபொழிலிடங்கடோறுஞ்
சேனையுமன்னர்தாமுஞ்செல்வனுமினிதிருந்தார் (அச)

தாபமும்புனலுங்கொள்வார்தாபதர்வந்துமாதர்
தீபமுமயோத்திவேந்துஞ்சேனையுமிருக்கக்கண்டு
கோபமுற்றழன்றுமன்னுகோசிகன்கண்டாலுன்னைச்
சாபமிட்டெரிப்பனீண்டுசார்ந்ததுதகாதேயென்றார். (அரு)

யாமவற்கடிமையன்றேவெம்வயிற்சீற்றமென்னே
யாமவற்கிழைத்ததீங்குண்டென்னினுந்திருத்திப்பின்னைப்
போமதேகருமமென்னுப்புரவலன்புகலக்கேட்டனை
டாமதேகாண்டியென்னவருந்தவரகன்றுபோனார். (அசு)

மாதவராகன்றபின்னர்மாலையம்படாத்துணீங்கிப்
பூதலமென்னுமங்கைப்புதையிருட்படாத்துட்புக்காள்
மேதகுதவத்தின்மிக்கோன்வினைப்படாம்புகுதாமுன்னம்
நீதறுகுணத்தின்மிக்கோன்சித்திரப்படாத்துட்புக்கான். (௮௭)

கடாத்தடங்களிறுமாவுஞ்சேனையுங்கண்கடுஞ்ச
விடாப்படைவேந்தர்தாமுமமைச்சரும்விழிகடுஞ்சக்
கெடாப்பெருங்குணத்துவள்ளலகிளிமொழிமயிலோடம்பொற்
படாத்திடைப்பரியங்கத்துப்பஞ்சணைப்பள்ளிகொண்டான். (௮௮)

பூவலயத்தைமூடும்புதையிருளறச்செஞ்சுட்டுச்
சேவலார்ப்பெடுப்பக்கீழ்பால்செங்கதிர்வந்துதோன்ற
யாவருமுணர்ந்தெழுந்தாரிளங்கொடியுடன்றுயின்ற
காவலன்றானுமற்றோர்கனவுகண்டுணர்ந்தெழுந்தான். (௮௯)

மன்னவன்றறூக்கங்கண்டுவல்லியும்பல்கானோக்கி
என்னைநின்மனத்திலெண்ணமியம்புகென்றிறைஞ்சலோடும்
கன்னன்மென்மொழியாயானோர்கனவுகண்டுணர்ந்தேனென்னப்
பின்னரக்கனவினீர்மைபேசெனப்பேசலுற்றான். (௯ )

அமைச்சரைத்தூதரோடியழைக்கவென்றரசன்கூற
இமைப்பினிற்சென்றழைத்தாரியாவரும்விரைவின்வந்தார்
ஈமைத்ததீவினையைவென்றான்றமைச்சரணம்போற்றி
எமைக்கடிதழைத்தவாறென்னிறைவனீயருள்கவென்றார். (௯௧)

மற்றவர்கூறக்கேட்டுவையகமெல்லாங்காக்குங்
கொற்றவனின்றியானோர்கொடியதீக்கனவுகண்டேன்
உற்றதுகேட்டுமேல்வந்துறுதிறமுரைமினென்றாக
கற்றடந்தோளினோர்க்குக்கனாநிலைகூறலுற்றான். (௯௨)

என்னையீன்றெடுத்ததாதையாக்கையோடெய்தியுமைப்
தன்னையுற்றிமையோர்நீக்கத்தாரகைத்தலைத்தமர்ந்து

உ

தெய்வமே துணை

ஐந்தாவது

# சூழ்வினைக் காண்டம்.

வென்றிவேந்த மன்னன்விட்டவெங்கணைதைத்துவாயால்
துன்றியகுருதிசோரச்சுழன்றுடன்றடிதுடித்துக்
குன்றினைக்கடந்துசென்றுகோசிகன்றவப்பாற்போந்து
பன்றியாய்வந்தமாயம்பட்டபாடனைத்துஞ்சொல்லும். (க)

என்னையாளுடையாயுன்றனேவலிற்படியானேகி
மன்னருக்கரியுமாவுஞ்சேனையுமாளக்கொன்றேன
பின்னவனவிட்டவம்பாற்சுழன்றியானபிழைத்துப்போந்தேன
உன்னருளுடையாற்கல்லாலுய்வுண்டோவென்றதன்றே. (உ)

கோலத்தினுரையைக்கேளாக்கோசிகன்வடவைச்செந்தீச்
சீலத்திற்சிவந்தகண்ணன்சிந்தையுமனையனாழிக்
காலத்திற்கடுங்காலன்னமூச்சினன்கடலிற்றோன்றும்
ஆலத்தின்கிளர்ச்சியன்னகோபத்தனழன்றெழுந்தான். (ங)

பேச்சினிற்கிளிபோற்செங்காற்பெயர்ச்சியிற்பெடைபோற்செங்கை
வீச்சினின்மின்போற்சீற்றமிகுதியான்முனிவன்விட்ட
மூச்சினிற்பிறந்திரண்டுமோகினிமாதராழி
நீச்சினினிலைத்துநிற்குநீலமென்கொடிபோனின்றார். (ச)

செந்திருவமுதிற்றோன்றத்திரைகடற்பிறந்தாஞ்சில்
வந்திருகருந்திருக்கள்வயங்குவதென்னநீலச்
சந்திராதித்தரென்னத்தலையின்மின்கறுத்ததென்ன
இந்திரநீலக்கொம்பிரண்டுவந்தெழுந்ததென்ன. (ரு)

நீலவாரிதியினீலத்துகிர்க்கொடிநின்றதென்னக்
கூலவாரிதியினீலக்கொம்பிரண்டெழுந்ததென்னப்
பாலவாரிதிகடைந்தபஃறலையரவங்கான்ற
ஆலவாரிதியின்மூழ்கிக்கிளர்ந்தெழுமன்னமென்ன. (௬)

ஆலத்திற்பயின்றகண்டனழற்றிருக்கண்ணான்மாண்ட
காலத்திற்புறங்கொடாதுகாமனோடொத்தலைந்து
நீலத்திற்கருகிவெம்பிநினைவில்வந்துதவியன்பாய்ச்
சீலத்திலுயர்ந்தகாமன்சேனையிலிருவரென்ன. (௭)

சுழிகொளும்பெருந்தண்கங்கைசூடினோன்றுளங்குநெற்றி
விழிகொளுந்தழலான்மேனிவெந்தழிந்திறந்தகாமன்
பழிகொளக்கருதிக்காலபாசமேவிழியாக்கொண்டு
வழுவிலாவரங்கள்கொண்டரதியுமாற்றவளுமென்ன. (௮)

*நாவியங்கமலத்துற்றபிரமனைநகைப்பான்வேண்டி
வாவியங்கமலவாசகோசிகன்வாதிற்றீட்டும்
வியமென்னநீலவோதிமமென்னநீண்ட
காவியங்கண்ணார்காந்தட்கைதொழுதிறைஞ்சிநின்றார். (௯)

திலாமறைகணான்குந்தெளிவுறவுணர்ந்தநீர்மைக்
கோதிலாக்குணத்தோர்க்கெல்லாங்கோபஞ்சண்டாளமென்பார்
ஆதலான்முனிவன்மூக்கினூழற்சீற்றத்தோடே
போதலாலந்தமாதர்புலைச்சியராயினாரே. (௧௦)

மாதரைமுனிவன்பார்த்துவாவழைத்திருத்திநானா
பேதமுமெழுத்துஞ்சொல்லும்பெருங்கலையிருநாலெட்டும்
கீதமுநாதயாழுங்கின்னரமுதலவாய
போதமும்வாரிநீரிற்கரைத்துடன்புகட்டினானே. (௧௧)

* நாவி - நாபி.

ஏழுறாதருமின்சொற்கின்னரர்யாருமேகப்
பாடினுற்றீய்த்துலர்ந்தபயிரெலாம்விளைவுமல்கும்
வாடிநாளனைசம்பட்டமரங்களுந்தழைக்குமுனனுள்
ட்டினுருயிர்வந்துற்றவெள்ளென்பும்விதிர்விதிர்க்கும். (கஉ.)

அந்தவேலையிலயோத்தியாசனைக்கண்டுமீண்டு
சந்தவார்சடிலமௌலிக்கௌசிகன்றன்னைப்போற்றி
இந்தகாவியிலேமன்னனெண்ணருஞ்சேனையோடும்
வந்தனனென்னவேதமாதவரெடுத்துரைத்தார். (கங)

பண்ணியந்திரண்டயாக்கைப்புரவலன்வந்தானென்ன
எண்ணியவெண்ணமெல்லாமுடியுமென்றேம்பலெய்தாப்
பணணியன்மதுரச்செஞ்சொற்பவளவாய்க்கரியசெவ்வேற்
கண்ணியர்தம்மைநோக்கிக்கௌசிகன்விளம்பலுற்றான். (கச)

பெடைநடைமடவீர்வாவிப்பெருங்கரைதன்னில்வந்த
படையுடைவேந்தன்பாற்போய்ப்பாடலாலுருக்கிவெற்றிக்
குடையினைக்கொண்மினல்லாற்கலவியைக்கொண்மினென்று
விடைகொடுத்திடலுமாதர்விரைவினிற்றொழுதுபோனார். (கரு)

எடுத்தநன்மகரயாழுமேந்தியகுழலுந்தோன்ற
உடுத்தமேகலையுஞ்செம்பொற்சிலம்புநின்றோசைகாட்டத்
தொடுத்தபூங்கோதைசோரத்துணைமுலைத்தும்பிவிம்ம
அடுத்தபூஞ்சோலைநீங்கியகன்புனற்பொய்கைபுக்கார். (கசு)

கனைகழற்கடுங்காற்சேனைக்கடலினிற்சென்றுபுக்க
வினைநெடுவேற்கணாரையருள்பொழிவிழியானோக்கி
இனையரென்றவரைத்தேருதையுறவெய்துமெல்லை
புனையிழைமாதர்வந்துபுரவலற்போற்றிநின்றார். (கஎ)

தோளுமத்தோளிற்சாத்துஞ்சுடர்மணிவலயமுஞ்செந்
தாளுமத்தாளில்வீரக்கழலுநேர்தாழ்ந்தகையும்

வாளுநீண்மாலைமார்பும்வதனமுநோக்கிமார
வேளுநேரில்லான்றன்னைப்புகழ்ந்தனர்வியந்துரைப்பார். (௧௮)

யாணர்க்குள்யாணனின்னையெய்துதற்கிழைத்தவேதா
வீணர்க்குள்வீணனெம்மைவிதித்தவன்றிர்த்திரற்கும்
வாணர்க்குமனந்தனார்க்கும்வாய்த்தவாறேபோனின்னைக்
காணற்குத்தொழற்குவாழ்த்தக்கண்கைநாப்படைத்திலானே. (௧௯)

வையநின்னகரிசெம்பொன்வடகிரிநினதுபீடம்
வெய்யவனினதுதீபம்வேலைமஞ்சனநீர்ச்சாலை
செய்யவனினதுபாரிதிங்களினின்கவிகைசெவ்வே
லையநின்பெருமையெம்மாலளவிடற்கரிதேயென்றார் (௨௦)

சொல்லியமாற்றங்கேளாத்தோன்றலும்வியந்துநோக்கி
வல்லிநீர்யாரேதூர்தான்வந்தவாறேதீண்டென்றான்
அல்லியந்தொடையன்மார்பவிவ்வனத்தகத்துவாழ்வோம்
புல்லியசாதியீனப்புலைச்சியர்யாங்களையா. (௨௧)

வேதமாமுனிவன்வைகுமேதகுசாரனின்றன்
பாதமேபணிந்துநோக்குமார்த்தியிற்பதறிவந்தேம்
போதமுநெறியுமில்லாப்புல்லியேநல்லியாழும்
கீதமுஞ்சிறிதுவல்லேங்கேளெனக்கிளத்திப்பின்னர். (௨௨)

மகரயாழ்வாங்கிநீங்குமாடகமுறுக்கிச்செம்பொற்
சிகரமாமுலையிற்சேர்த்திச்செவியுறவிசையெழீஇத்தந்
நிகரிலாவமுதப்பாடற்பாணியினிறுவிப்பின்னர்
பகர்தருமிசைகளேழும்வகைவகைபாடினாரே. (௨௩)

காவியங்கண்ணுமூடாகவரிதழ்தானுங்கோடா
வாவியங்கமலமன்னவதனமுநுதலுமேரு
தூவியந்தோகைநல்லார்சுவரின்மேலெழுதிவைத்த
ஓவியம்பாடிற்றென்னப்பாடினாருருகயாரும். (௨௪)

கரும்பினைக்கடிந்ததீஞ்சொற்காரிகைக்கடிந்தகூந்தற்
பரும்பணைக்கொங்கைமாதர்பவளவாய்ப்பிறக்குங்கானம்
வரும்பனிமதியைநோக்கிக்கிண்கிணிவாய்கொண்டார்ப்பின்
அரும்பவிழாம்பற்போதுள்வண்டிருந்தார்ப்பதென்ன. (௨௫)

இல்லையேயாவிமைத்தலென்பாரெடாதுகைதொடாதுவைத்த
வில்லையேயுருவமாகவிதித்தனன்வேதாவென்பார்
முல்லையேயாமுருந்தோமுத்தோமுறுவலையறியோமென்பார்
நல்லையேநல்லையென்றுநராதிபர்வியந்துரைத்தார். (௨௬)

அட்டமாவனைத்தும்புள்ளுமாவிபெற்றேகுமென்பார்
சட்டநீளவனயகளெல்லாஞ்சோலைபாத்தழைக்குமென்பார்
பட்டவாள்வீரரெல்லாமுய்வகைபலிப்பதென்பார்
வட்டமாமதியமன்னவதனசதார்பாடல்கேட்டே. (௨௭)

நாடெலாமழிக்கக்கேட்டுநரபதிவெகுண்டுவேட்டை
யாடலால்வெருண்டுபோய்த்தம்மாருயிரோம்பித்தன்றங்
காடெலாங்கரந்தமாக்கள்கன்னியர்மதுரகீதப்
பாடலால்வெளிப்பட்டுற்றபறவையும்பறந்தவம்மா. (௨௮

மஞ்சலம்பிடியேறென்னமாமுரசதிருமோதைக்
கஞ்சலாலனந்தகோடியசுணமாவனைத்துமாவி
துஞ்சலாதீண்டிமொய்க்கத்தும்புருமுதலோரெல்லாம்
இன்சொலினோசையெய்தயாழிசையாதென்றோர்வார். (௨௯)

கல்வியன்மகரயாழின்றமுமிடறுமொன்றப்
புல்லியகீதவோதைசெவிவழிபுகுதலோடும்
வல்லியர்தம்மைநோக்கிமலர்த்திருக்கரமமைத்த
மெல்லியருனும்வெற்றிவேந்தனுமிகமகிழ்ந்தார். (௩0)

மணியொடுகடகஞ்செம்பொன்வளையெரிமணிப்பொன்னாரம்
அணிதுகில்பிறவுநீட்டிக்கொண்மெனவளித்தலோடும்

பணிகளுந் துகிலும்பொன்னும்பெறற்கியாம்படர்ந்தேமல்லேம்
திணிசுடர்முடியாயாங்கட்டேடியபரிசில்கேளாய். (௧௧)

எத்தியபரிசிலாளர்க்கெண்ணியவனைத்துநல்கும்
பார்த்திவவிவையெலாநின்றிருவுளப்படியாலுள்ளேம்
மூர்த்திகண்மூவர்க்காகுமுடிபுனையர்நாளேநீ
சாத்தியதவளக்கொற்றக்கவிகையைத்தருதியென்றார். (௧௨)

பழிவழியொழுகாநீதிப்பானுவின்குலத்துவேந்தர்
வழிவழிவந்தகொற்றக்கவிகைபவழங்கமாட்டேன்
விழிவழிகண்டவேறுகவிகையைவிளம்பிலுங்கள்
மொழிவழிதருவேனென்றுமொழிந்தனன்மன்னர்கோமான். (௧௩)

ஈனத்தவெங்காதலார்க்குக்கணித்தவாலலாதவ
னத்தவவொருவராலேயின்பமுண்டாகவற்றோ
மானத்துவேள்குறித்துவேந்தமணிக்குடைவழங்காயேலெந்
தனத்தினைத்தமூவியின்பந்தருதியென்றவர்களசொன்னார். (௧௪)

வாட்பொருகண்ணார்கூறமந்திரத்தலைவன்சொல்வான்
வேட்பனவில்லையென்னமெய்ந்நெறிவேந்தன்றன்பாற்
கேட்பனவறிந்துமக்குக்கிடைப்பனவுணர்ந்துகேளீர்
சேட்படுதில்லுமென்னத்தெரிவையர்செப்பலுற்றார். (௧௫)

முன்பியாஙகருதிவந்தமுழுமணிக்குடையுநல்காய்
பின்பியாஙகுறித்தவின்பப்பெரும்பயன்றானுந்தாராய்
அன்பியாமுன்மேல்வைததவத்திலேபோனதந்தோ
வன்பியாமுன்பாற்கண்டோம்வள்ளன்மைகண்டிலேமால். (௧௬)

கொடுப்பனகொடுப்பசல்லாற்கொடாதனகொடுக்கமாட்டார்
விடுப்பனவிடுப்பரென்றும்விடாதனவிடவுமாட்டார்
தொடுப்பனதொடுத்து நம்மாற்சொல்வனசொல்லி நுங்கட்
கடுப்பனகொண்டினல்லாலகன்றிடினென்றமைச்சன்சொன்னான். ()

வள்ளலென்றடைந்தோமுன்பால்வந்திரந்தோர்க்கொன்றீயாக்
கள்ளனென்றறிந்தாலிங்குவருகலங்கண்டாயென்றார்
உள்ளமுங்கண்ணுஞ்செந்தீயுருத்தெழச்சினத்துவேந்தன்
தள்ளுமென்றருளிச்செய்தான்வினைவதுதன்னையோரான். (௫௮)

பார்த்திவனுரைப்பக்கேட்டுப்பப்பரர்நெருங்கிச்சீறித்
தீத்திரள்செங்கட்சிந்தநூக்குவான்செல்லவேங்கிச்
காத்திரநடுங்கக்கையுங்கால்களுநடுங்கமார்பிற்
சேர்த்தியயாழும்*போகட்டிரிந்தனர்திசைமயங்கி. (௫௯)

ஆறுகொண்டோடார்செல்லாவடவியிற்சென்றுமேனி
மாறுகொண்டுதிரஞ்சிந்தமஞ்சினைப்பழித்தகூந்தல்
காறுகொண்டீர்க்கச்()சோர்ந்ததுகில்கிழிந்தகலச்சாப
வீறுகொண்டேவிவிட்டமுனிவன்முன்வீழ்ந்தார்வந்து. (௬௦)

வேறு.

மண்டலந்தனிலிழுப்புண்டசெந்துகில்களுமாறடித்த
புண்டனிற்பொழிபசுங்குருதியுந்துவரிதழ்ப்பொருமலுந்தான்
கண்டனன்கௌசிகன்கடையுகக்கனலெனக்கடியகோபம்
கொண்டனன்வந்தவாறேதெனக்கோதைமார்கூறலுற்றார். (௬௧)

ஐயகேணின்னருட்படியிலரசன்மாட்டணுகினின்றே
பையவேழிசைகளும்பாடிநீசொன்னவப்பரிசுரைத்தேம்
கையனெங்களையடித்துமரணச்செய்தவக்கண்டனத்தால்
உய்யவும்போகுமோவுரையுமுண்டோவெமக்குயிருமுண்டோ. ( )

எனவுரைத்திடவெயர்த்திடியிடித்தெனநகைத்திருகணும்
கனறெறித்திருபுடைக்கடமனைத்தும்புகைகடிதுமூடச்
சினமிகுத்திறைவனுக்கிடர்விளைத்திடுவதேசெயலெனத்தன்
மனனினைத்தருமறைத்தவமுனித்திரளுடன்வரநடந்தான். (௬௩)

* போகட்டு - போகவிட்டு. () சேர்த்த எனவும் பாடம்.

கரதலத்திடுமெழிற்குசைவிதிர்ப்புறவிணைக்கழல்வருந்தப்
பரவுபொற்றடமலர்ச்சடைவிரிந்தகல்பெரும்படியினலச்
சுரர்மிகப்பரதவித்தயமிட்டலறிடச்சுவணவெற்பாற்
புரமெரித்திடவரும்புனிதனொத்தணிமலர்ப்பொய்கைபுக்கான். ( )

பிணிமுகத்திரள்களுங்குருகினப்பகுதியும்பிரிவுறாத
அணிமலர்க்குளிர்தடத்ததிசினத்தொடுநடந்தணுகலோடும்
பணிமுடிச்சுமைதவிர்த்திருபுயத்தினின்மிசைப்படிதரித்த
மணிமுடிக்குரிசிலக்கொடுவினைக்கௌசிகன்வரவுகண்டான். (௩௫)

கடல்களென்படுநெடுந்திசைகளென்படுமகக்ககனமென்னும்
உடல்களென்படுமவற்றுயிர்களென்படுமிடிந்துலகமென்னும்
விடலருந்தவமுடைப்பெருவலிக்கௌசிகன்வெகுளியாலென்
றடனெடுஞ்சிலையவன்கடிதெழுந்தெதிர்நடந்தபடிபணிந்தான். (௩௬)

உருமிடித்தனவெனச்சினமிகுத்திகல்செயற்குறுவதற்குக்
கருமிடற்றவனலேன்கடனிறத்தவனலேன்கமலனல்லேன்
இருமையிற்கடையதாமெளியனேவலனெனக்*கெழுமையன்புற்
றிருமலர்க்கழல்களைக்கரமுறத்தழீஇநிலத்திடைகிடந்தான். (௩௭)

கரமுறத்தழுவலுங்கௌசிகப்பெயரினன்கால்பறித்தே
சிரமிசைத்திருமுடிச்சுடர்மணித்தொகைகள்பஃறிசைதெறிக்க
உரமிசைப்பணிதெறித்திடவுதைத்தனனுதைத்திடலுமுன்றன்
மருமலர்க்கழல்சிவப்புறுமெனுக்கைகளால்வருடலுற்றான். (௩௮)

குடியினிற்பிழையிழைத்திலமுனக்கடிமையிற்குறையுமில்லேம்
இடியிடித்தனவெனச்சினமிகுத்திடைவிடாதெனையுதைத்த
அடிவடுப்படுமெனக்கவலுகிற்பதையொழிந்தையவென்றன்
முடிவடுப்படுமெனக்கவல்கிலேன்வெகுளியென்மொழிதியென்றான்.

---

* கெழுமியேகுற் எனவும் பாடம்.

மாவினைத்துணிசெய்தாய்கேழலுக்கிடர்செய்தாய்வானளாவுங்
காவினைப்பொடிசெய்தாய்நீதியாலீன்றவெண்காதன்மக்கள்
பாவினைப்பழிசெய்தாய்தீவினைக்குரியதோர்பாவிநீதான்
ஆவினற்றோல்பொதிந்தபுலித்தொழில்செய்தாயழகிதென்றான். ()

நாடழித்திடினுநன்னகரழித்திடினுமென்னறுமலர்ப்பூங்
காடழித்திடினுநீள்காலறக்கிளையினைக்களையினுங்கொண்
றீடழித்திடினுநீதான்விடுத்தனையெனுயானறிந்தால்
பாடிழைத்திடுவனேயென்றரிச்சந்திரன்பலமொழிந்தான். (௧௧)

சிறியரானவர்தமக்குரியவேயல்லவோதீமைநன்னூ
லறிஞரானவர்தமக்கல்லவோபொறைபிறர்க்காகுமோதான்
நெறியிலாவினையினேனொருவனைப்பொருளதாநீமுனிந்தால்
பொறையுநின்னருளுமென்னளவிலோவிலவெனப்போனதென்றான்

மடித்தவாயினன்மிகக்கொதித்தநெஞ்சினனெதிர்மறுத்துநீதான்
படித்தவாசகமெலாமெனக்குநீபிதற்றிடற்பாலவோதான்
வடித்தவேழிசைநினக்கிசைக்கவேவந்தவெண்மக்கடம்மை
அடித்தகாரணமெலாமெனக்குநீதக்கவாறறைதியென்றான். (௧௩)

வேறு.

மீண்டுமன்னவன்வேதியன்றாள்கரம்
பூண்டுவாயிற்புனல்வறந்தற்றிட
ஆண்டநாயகவிம்முனிவாற்றிடல்
வேண்டும்யானதுவிண்ணப்பஞ்செய்வனால். (௧௪)

இக்கருங்குழலேழையர்தம்மைநின்
மக்களென்பதுணர்ந்திலமாதவ
தக்கவாறுரையாமையிற்றள்ளினேம்
புக்கதீதுபொறுத்தருணீயென்றான். (௧௫)

கழுத்தரிந்திதுகைபிழைவந்ததென்
றழுத்தமாகவுரைத்தனையாதலால்
பழுத்தநல்லறிவுற்றனைப்பற்றிய
ஒழுக்க * மென்றுளமுட்கிடக்கூறினய். (௫௬)

இரப்பவர்க்கொன்றிலையெனில்யாரையும்
கரப்பவர்க்குறுகட்டுரைகூறுவர்
புரப்பவர்க்குப்பொருத்தலல்லாலடித்
துரப்பலுந்தகுமோவென்றுருத்தனன். (௫௭)

கட்டகில்லெனநின்றவக்கள்வர்பாற்
கெட்டவான்பொருள்காட்டக்கிலேசியா
விட்டமூச்சுடன்விம்மலினலலை
பட்டளாரிற்பையப்பையக்கூறினன். (௫௮)

மைகுலாவுகண்மாதரைமோதிய
கைகுறக்கினுங்கண்ணினைச்சூலினும்
மெய்குறக்கினும்வேண்டியவாறுநீ
செய்கவென்னமறைமுனிசெப்புவான். (௫௯)

கொய்துமாக்களைக்கொன்றதும்பன்றியை
எய்ததும்மிசைகேட்டடித்தீனமாய்
வைததும்மென்றன்மக்களைநீமணம்
செய்திடிற்பொறப்பேனென்றுசெப்பினன். (௬0)

நிலத்தில்யாருநெறியலசெய்திடின்
விலக்குநீயிவையென்கண்விளம்பலென்
புலைக்குலத்தொடுமன்னர்பொருந்துதல்
நலத்ததோவென்றுநாயகன்கூறினன். (௬௧)

---

* ஒழுக்கமற்றுள என்றும் பாடம்.

மலையின்வைகும்வசிட்டன்சபித்தலாற்
புலையனானவன்மைந்தவிப்பூவையர்
முலையில்வைகன்முறைமையன்றேவெனக்
கலையுணர்ந்தகௌசிகன்கூறினன். (கூஉ)

அற்றைஞான்றெமதையன்வசிட்டனால்
பெற்றசாபப்பெரும்புலைதீர்த்தனை
இற்றைஞான்றிங்கெனைப்புலையாக்கநீ
கற்றதேதெனக்கால்கரம்பூண்டனன். (கூஙு)

முன்னமுந்தைமுழுப்புலைநீக்கினம்
இன்னநீக்கவெமக்கரிதன்றியாம்
சொன்னவாசகங்கேட்டுச்சுடர்முடி
மன்னர்மன்னவெம்மக்களைச்சேர்கென்றான். (கூச)

அடினுநின்விழியாமழலாலெனைச்
சுடினுமென்னுடறன்னைத்துறந்துயிர்
விடினுமேனியைவெட்டியறிந்துகூ
றிடினுமிச்சொற்கிசைகிலன்யானென் ன்ன். (கூரு)

யூபவேள்விக்கௌசிகனேய்விலாக்
கோபமெய்திக்கொடியிடைமங்கையர்
தீபமன்னவர்ச்சேர்கிலையாயினென்
சாபமீபெறுகென்றுரைசாற்றினன். (கூகூ)

கூற்றமுண்ணக்கொடுத்தெமதாருயிர்
தோற்றனன்றநன்றென்றுதுணிந்துநின்
சீற்றமாறிடச்செப்பிடுஞ்சாபம்யான்
ஏற்றனன்னிடுகென்னவியம்பினன். (கூஎ)

அப்பெருந்தகையன்னதுரைத்திட
இப்பெருந்தகைக்கும்பொறைக்கும்பியாம்

ஒப்பெடுத்துரைக்கத்தகுமோவெனுச்
செப்பருந்தவன்சிந்தையிலெண்ணுவான். (௬௮)

இரைத்தெழுந்தகதத்தையிருத்திடின்
வரைத்தடம்புயவாசவன்முன்னர்யாம்
உரைத்தவாசகந்தோற்குமென்றன்னுபு
நிரைத்தவேணிநெடுந்தவன்கூறுவான். (௬௯)

துடிமருங்குலத்தோகையர்தங்களைக்
கடிமணஞ்செயறீதென்றகள்வனே
குடிமைசெய்புகழ்கொடும்புலையற்குநீ
அடிமையாவையறிதியென்றோதினன். (௭0)

கொஞ்சிப்பேசுங்குழவிசொற்குற்றத்தால்
ஒஞ்சித்தன்னைவனமுலைப்பாலினில்
நஞ்சிட்டாலதைநாடிவிலக்குநன்
னெஞ்சத்தாருளரோவிந்நிலத்திலே. (௭௧)

வாரிகாய்ந்துகொதித்திடின்மாற்றத்தண்
ணீரியாவர்தருவரந்நீதியிற்
சீரியாயெனைநீமிகச்சீறிடின்
யாரியாரஞ்லென்பவரென்றனன். (௭௨)

தாயுந்தந்தையுந்தஞ்சமுந்தெய்வமும்
நீயுண்டென்றுநினைந்திருந்தோமெனுச்
சேயும்வேந்துந்திருவுமமைச்சனும்
போயுன்பாதம்புகலென்றுபூண்டனர். (௭௩)

அன்னையெனைபையருந்துணையென்பையுண்
முன்னைவாழ்வுமுதல்வனுமென்பைமற்
றென்னையிப்படிவெல்பவளிச்சமத்
தன்னையல்லதுகண்டிலமுண்மையே. (௭௪)

கண்ணைவேண்டினுநர்குவனகாக்கைற
மண்ணைவேண்டினும்வாழ்வுடனீகுவன்
பண்ணைவேண்டியசெஞ்சொற்பறைக்குலப்
பெண்ணைவேண்டிலன்யானென்றுபேசினான்.

மன்னர்மன்னனுரைத்திடமாதவன்
அன்னதேநமக்காமென்றவாவறீஇச்
சொன்னதேயமையுங்கடல்சூழ்புவி
என்னதேயென்றெழுந்தெழுந்தாடினான். (௭௬)

மருவுநாடும்வளநகரும்பெருந்
திருவுமீகுவனென்றனைசெவ்வியோய்
தருவனென்றமொழிதவறுமலுன்
அரசளிக்கினமையுமெனாச்சொனான். (௭௭)

அந்தணாளனைநோக்கியவ்வண்ணலும்
உந்தமக்களுறுநலன்வேண்டிலேன்
எந்தநாடுமிருநிதிக்குப்பையும்
தந்தனன்மொழிதப்புவதில்லென்றான். (௭௮)

பாரைவார்த்தையினாற்றாற்பாலதோ
தாரைவாரெனக்கௌசிகன்சாற்றிட
நாரைவாய்கயல்பாயுநறுந்தட
நீரைவார்த்தனனீபுவியாள்கெனா. (௭௯)

வையநின்னதுமாநகர்நின்னது
வெய்யவாசியும்வேழமுநின்னபொற்
செய்யதேர்களுஞ்செல்வமுஞ்சேவிக்குந்
தையலார்களுந்தானையுநின்னவே. (௮௦)

என்றுமன்னனியம்பியிறைத்தநீர்
அன்றுகௌசிகனங்கையினேற்றபின்

நின்றமாதவர்தங்களைநோக்குறித
தின்றுநீரெழுந்தார்ததிடுமென்றனன. (அக)

வேறு

கோசிகனினைனகூறியபின்கூகூவெனவே
ஆசிகள்சொன்னாராடினராராததாரணியாடை
வீசினர்நீயேமேனமகனென்றுமேனமேலும
பேசினாபேசிமாசனாநேசம்பெரிதுறறா (அ௨)

வாரணமுந்திணடோபரிதேசம்வளனெல்லாம
ஆரணமோதுஙகௌசிகனுககாயினவெனறே
பூரணகும்பமவீதிகடோறுமபொலிவித்துத
தோரணமிட்டாாதாரணியெஙகுந்துறவோரே. (அ௩)

மென்னடையனனநனடையாளைவிறலானை
முன்னடையாநின்றினனவைபினனுமுனிகூறும
என்னகர்நினறேயிவுலகெல்லாம்யானுள
நினனடையாளாநதந்திடுமாறுநெறியெனறுன (அ௪)

வாழியநாரோசெல்வமமைசசனமாசேனை
சூழிநெடுஙகைப்போாமதவேழந்துரகந்தேர்
ஊழியின்மட்டுமாளுநிதந்தேனுனதென்றே
ஆழியளித்தான்பாருளமட்டுமழியாதான். (அ௫)

குடைதந்தேனீளகொடிதநதேனெனகுழுவாய
படைதந்தேனற்கனகத்திண்டோபரிதநதேன
தடைதந்தேநினறடியேனேகததவனே்
விடைதந்தேகெனறடிமேற்பரவிவீழவானே. (அ௬)

துணியுந்தனிநெஞ்சுடையானினதுதோணமாலை
மணியும்வளையும்வலயஙகளுநிறவடிவாளும

அணியும்முடியுஞ்சேயுந்தாயுமணியும்பொற்
பணியுங்கழலுந்தந்தேகென்றுபலசொன்னான். (அஎ)

எத்துக்கிவையென்றணிமாமுடியும்வடிவாளும்
புத்திப்புதல்வன்பூணும்பணியும்புனைமாதின்
பத்திக்கிரணப்பணியுங்கனகப்பணியும்வெண்
முத்திற்பணியுங்கழியாமுனிவன்முனமுய்த்தான். (அஅ)

உனையுமமடமாதினையும்மரசேயுன்மைந்தன்
றனையும்விடுதற்கணியும்பணிநீதந்தாய்காண்
வனையுங்கழலாய்மகனும்நீயும்மடவாளும்
புனையுங்கிரணக்கலைதந்தகலப்போவென்றான். (அ௯)

ஆரையிரப்போமாடையளித்தாலரனேயென்
றாரையளித்தகாவலனின்றேயுயிர்சோருந்
தாரைநினைந்தேகௌசிகனுக்குதான்மூடும்
சீரைகிழித்தேமூவகையிட்டுச்செலவுய்த்தான். (௯0)

நாறற்பாழ்ந்துணிசீலைப்பேனொருநாண்மாறுப்
பீறற்சீலையிதாருக்கென்றுரைபேசாமே
மாறற்காலமிதாகிற்செய்வதென்மற்றென்னுக்
கூறற்காமிசைபூணக்கோனதுகொண்டானே (௯௧)

காவிச்சீரையுடுத்துக்கூறைகழித்துசமசன
றாவிக்காகுலமாகச்சேனையழுங்கப்போய்ப்
பாவிக்கோசிகனுர்முன்னுமொருபால்வைத்துத்
தாவித்தாளிணைபூசித்தேவிடைதாவென்றான். (௯உ)

தாவென்றான்விடைதந்தேனீயொருசார்பூசி
போவென்றானிதுவேநலமெனன்னுப்போவானை
வாவென்றானதுகேளாமீளவும்வந்தெய்தி
யாவென்றானினியீகுவவெந்தாயானென்றான். (௯௩)

செந்தேனொடுந்தண்பணைசூழ்திருநாடா
வந்தேநானும்மாமுனிவோரும்வளர்வேள்விக்
குந்தேரண்ணியிரந்தபசும்பொனுளவெல்லாம்
தந்தேபோவாயென்றிறையோனைத்தடைசெய்தான். (௧௪)

முன்னமுனக்குச்சொன்னதிறத்தின்மொழிமாறி
அன்னதுகைக்கொண்டிங்கிதிதந்தேனல்லேன்யான்
நன்னகரோடுபொன்னுளமுற்றுநனிதந்தேன்
இன்னமுனக்குப்பொன்றரவென்பாலிடமுண்டோ. (௧௫)

தாருடனேசெந்தாமரையாள்சேர்தடமார்பா
யாருடனேயிம்மோசமுரைப்பாயறிவில்லாய்
ஊருடனேமுன்கூறியபொன்னுமுடனென்றே
நீருடனேநீபேசிய ரித்தநெறியுண்டோ. (௧௬)

சொன்னதுமாருர்பானுகுலத்திற்றொல்வேந்தர்
அன்னதுகாணொணின்னிடையேன்றனதுகேளா
மன்னவனுள்ளநொந்தறநாணிமதிவல்லோய்
இன்னமுமொன்றுண்டென்னவிரந்தேயிவைகூறும். (௧௭)

வேறு.

சித்தனைப்பிரமனையனையாய்வினைவழிந்த
பித்தனைப்பொருள்விஞையினையெங்கியான்பெறுகோ
இத்தனைத்தினத்தீவதென்றியம்புவையெனின்யான்
அத்தனைக்குநிற்பொருடர * வவதியீதென்றான். (௧அ)

ஒருநாடுநீண்மலைகளுங்கானமுமுழன்றே
யாருமேனொடிமுப்புண்பவரவதியாரிடுவார்
சோரமுள்ளநீகூறுமப்பொருடனைச்சொரிந்து
போரடாவுனைத்தடுத்தனன்போர்கலையென்றான். (௧௯)

* அவதி - கெடுவு.

பக்கநோக்கிலன்பார்மிசைவிழுந்தடிபூண்டு
கக்கல்வந்திடமிடற்றினையொடுக்குமக்கதைபோல்
விக்கலும்பொருமலுமிசைமிசையெழவிரிநீர்
உக்ககண்ணன்வாயூறுநீர்வற்றிடவுரைப்பான. (க00)

இழைத்ததீவினைபொறுத்தனனரசுதாவென்னத்
தழைததவன்பொடுதந்தியானகன்றிடுங்காலை
அழைத்தநீயெனக்கவதியிட்டாள்விடினைய
பிழைத்தனன்னிமீதார்பெரும்புகழ்பெறுதியென்றிரந்தான (க0க)

சுற்றுண்டாகியமலைகளில்வனங்களிற்றெருட்டுள
பற்றுண்டாகியபதிகளிற்படுபொருளல்லால்
உற்றுண்டாகியநிதியமுன்றிருவுளமுணர
மற்றுண்டாமெனின்விளம்பிடுவழங்கிடவென்றன். (க0உ)

ஆமதேயெனினரசகேளவதியானுரைப்பன்
ஏமகூடமுங்காசியுமன்றியிலிப்பால்
தாமமார்பநீதந்தநன்றூடிதற்கப்பாற்
போமதுண்டெனிற்பொருளுமப்பொருளலாதமரியேல். (க0௩)

இந்தவெல்லையிலிப்பொருளீதலில்லாமல்
அந்தவெல்லையிற்பொருடரவல்லையேயானல்
முந்துநீசொன்னமுறைமையாலவதியாலீவேன்
தந்திடாயெனிற்சத்தியமேதெனச்சாற்றும். (க0௪)

நிற்பிழைத்திடினிக்கியானருநிதியளிக்குஞ்
சொற்பிழைத்திடற்கூறுறவேதெனிற்சொல்வல்
கற்பிழைத்தநற்சொற்பரதாரத்தைக்கருதி
இற்பிழைத்தவனுவனின்னிருநிதிகொடேனேல். (க0ரு)

காசிநாட்டினிற்சென்றவந்நாளிலுங்கனகம்
ஆசின்மாதவவளிப்பனவ்வவதியிலதுந்

பசிடாயெனவிருபதுநாளையிற்பினைபு
மூசிவண்டுறைதாரினேய்தருகெனமொழிந்தான். (கoசு)

அங்குற்றெய்தநாளம்முறைக்கிருமடங்கடங்கா
எங்குற்றீட்டுவதிப்பொருளையவென்றியம்ப
ஈங்குற்றம்நிலைநாற்பதிற்றெட்டெனகவிசாற்றன்
உங்குற்றம்பிறற்குட்கொடாதொழிந்திடினென்றான். (கoஎ)

வேறு.

இப்புத்திக்கிளிதொத்தனனுள்விடுகென்று
துப்புற்றேகலுங்கௌசிகன்மீளவுங்கூவித்
தப்புத்தீர்தரத்தந்தவப்பொருளெலாம்பதிவந்
தொப்புத்தர்தும்பின்போவெனுமன்னனுக்குரைத்தான். (கoஅ)

பாரளித்தலைபுரக்கவின்பதியிடைச்சென்றால்
ஆரளித்தனரென்பர்நின்னடியவரெல்லாம்
ஊராளித்திடவுடன்வாத்துணிதியீதொழியின்
சீரளித்ததேயெனக்குமண்ணினக்கெனுமொழிந்தான். (கoகூ)

நன்றுநன்றுநீநகரியிலெழுந்தருளுமையன்
இன்றுநின்பிறகெய்துவலென்றினிதியம்பச்
சென்றுகௌசிகன்றேர்மிசையேறினன்றிரண்டு
நின்றமாதவர்கரியினும்பரியினுநிறைந்தார். (ககo)

தேரிலேறிமாமுனிசெலச்சேனைபின்செல்லப்
போரில்வீரனுந்தேவியும்புதல்வனுநடுவே
பாரின்மேனடந்தடிபொருதுடல்பதைபதைக்க
வேரிவாவிவிட்டயோத்தியைநோக்கியேவிரைந்தார். (கசக)

கன்னலம்பெருங்கமுனியுஞ்சோலையுங்கடந்து
வன்னமாமணிப்புரிசையின்புறத்துவந்தணைந்தார்

ரன்னகர்ப்பெருஞ்சனமெலாமெதிர்கொடீண்ணி
மன்னனைச்செழுந்தேர்மிசைக்கண்டிலர்மருண்டார். (ககஉ)

இரதமேன்முனிமேயறியதகிதமோவிதமோ
ச தமோவெனுமையத்தார்வந்தவண்சார்ந்தார்
விரதகிவகைவிளைந்தவாறேதெனமெலிந்து
சரதலங்களான்முகத்தறைந்தழுதனர்கதறி. (ககங)

செங்குவாரிளங்கொடியையுஞ்சேயையுமோர்தித்
தாஙகுவாரசெழுந்தாளிமேல்வீழ்ந்துவீழ்ந்தயர்வார்
நங்கிமேயாஙகிமேயறைந்தறைந்தொரீமுகங்கன்றி
ங்கருவாரமுவார்விழுவாருளமெலிவார். (ககச)

மன்னவற்குரம்மன்னைக்குமைந்தற்குமந்தோ
என்னபாவம்வந்தெய்தியவென்றிருந்தேங்கப்
பொன்னகர்ப்பெரும்புரிசையிரபுறத்துவந்தணுகி
இன்னல்செய்தவக்கௌசிகனிரதம்விட்டிழிந்தான். (ககரு)

கோசிகன்றனையுடன்கொடுகோநகர்புகுந்து
ராசியுள்ளவுமதகரியுள்ளவும்வழங்கிக
காசினல்லறைபூசனையறையெலாங்காட்டித்
தூசிநல்லறைதுயிலறைபாரெனச்சொனனன். (ககசு)

என்னின்முன்னவரிருபதோடொருவருண்டந்த
மன்னர்வைத்தசெம்பொன்னறையீதெனவழங்கி
அன்னசத்திரமிவையிவையடியனேன்வைத்த
பொன்னறைத்தொகைகொள்கெனக்கொடுத்தனன்புகழோன். ()

ஆடரங்குகளம்பலமடமன்னசாலை
மாடமாளிகைமண்டபமஞ்சனச்சாலை
கூடகோபுரமடைப்பள்ளிகோயில்செய்குன்றம்
பீடமாதனமிவையெனக்கொடுத்தனன்பின்னை. (ககஅ)

இந்தவாதனத்திருந்தருளெனமுனியிருந்தான்
அந்தவெல்லையிலரசனுமவனடிபணிந்தான்
வந்தமன்னருமமைச்சருமங்கையர்குழாமும்
சுந்தரக்கழற்சேனையுமவனடிதொழுதார். (கககூ)

தொழுதெழுந்துதஞ்சுடர்முடிமன்னனை நோக்கி
அழுதுநின்றவத்தலைவரையவன்கையாலமைத்துப்
பழுதிலாதுநீரெமக்குமுன்செய்தவப்பரிசே
முழுதுமிந்தமாமுனிவற்குமுறைசெயுமென்றான் (கஉ0)

எவற்குநல்லவர்திரிபுரமெரியெழச்சிரித்த
சிவற்குநல்லவர்செங்கண்மாலுக்குநான்முகத்த
னவற்குநல்லவரமரர்க்குநல்லவராவர்
இவற்குநல்லவரெனக்குநல்லவரெனவிசைத்தான். (கஉக)

வையமேழுடைமன்னவனவ்வுரைவழங்கச்
செய்யவாய்மலர்செங்கையாற்புதைத்தடிவணங்கி
ஐயநின்மொழிமறப்பவராரெனுமுகத்திற்
கையறைந்தழக்கண்டவக்கௌசிகன்கருதும். (கஉஉ)

அறந்திரண்டொருவாகியவரசனையவமே
புறம்பறைந்தனம்புன்மையேம்புந்தியில்லாமல்
திறந்தெரிந்தவர்செயலிதோவெனுக்கௌசிகன்மெய்
மறந்திருந்துபின்மற்றுமோர்வாசகமுரைப்பான். (கஉ௩)

இந்தவையமுமிருநிதிக்குழுவுமிப்பொருளும்
முந்துநீதரமொழிந்தவப்பொருளும்யானிழப்பேன்
எந்தன்மக்களைமணம்பணர்ந்திந்நகரிருவென்
றந்தணன்மகிழ்ந்தரசனைக்கைபிடித்தமைத்தான். (கஉ௪)

கைபிடித்தலுமுனிவனைக்கால்பிடித்திறைவன்
மெய்பிடித்தலுமிக்கவைசெய்தலுமல்லால்

மைபிடித்தகட்பரத்தையர்ப்புணர்தலும்வழங்காப்
பொய்பிடித்தலுமறனலசெய்தலும்புகழோ. (௧௨௫)

உமக்கியான்சொலல்வேண்டுமோமனுவின்பினுதித்தே
எமக்குமுன்னரசாண்டபார்வேந்தர்மூவெழுவர்
தமக்குமுன்னொருத்தருக்குந்தாங்கரும்பெரும்பாரம
சுமக்கவல்லனேதவிர்கவிச்சொல்லெனத்தொழுதார் (௧௨௬)

சூளைக்கூட்டம்யான்பொருந்திலேனசொன்னவிப்பொருளுக்
காளைக்கூட்டெனவரசனைநோக்கியேமுனிவன
நாளைக்கூட்டுவனின்றுநீநடபுறத்தெனனத்
தாளைக்கூட்டரவாக்கியதலையினன்சாற்றம். (௧௨௭)

சிறுத்தாயினேனசெய்தவிப்புன்மைகளெல்லாம்
பொறுத்தல்வேண்டுமென்றடியிணையிருகரம்பூண்டான்
கறுத்தசிந்தையன்கௌசிகன்பொறுத்தனனென்றன
மறுத்துமின்னுமொன்றுரைத்திடக்கேளனுவள்ளல். (௧௨௮)

கையினற்பிடித்தமைச்சரைக்காட்டிமற்றிவர்கள்
வையினுந்தினைமறக்கினும்மற்றமோர்குற்றம்
செய்யினும்பொறுத்தருள்செய்வாய்செல்கதியளித்த
ஐயனையுனதடைக்கலமிவரெனவளித்தான் (௧௨௯)

குடைநிழற்பொலிகௌசிகனடியின்மேற்கொடிநே
ரிடையினளையுமகனையுமிறைஞ்சுவித்தேத்திப்
படையைநோக்கிநீர்நின்மினென்றங்கையாற்பணித்து
விடையிதேயெனப்பணிந்தனன்வேந்தர்கருவேந்தன. (௧௩௦)

பரமுனக்குலகென்றிறையகன்றனன்பரிந்து
புரமெரித்தவனனையமாமுனிபுவிபுரந்தான்
சிரமநீங்குவீரர்கள்செறிமன்றமுந்தெருவும்
பிரமசாரிகண்மலிந்தனர்பெருகுமுட்களிப்பால். (௧௩௧)

காமத்தோகையர்கருங்குழல்விரித்தனர்பரப்பிச்
சேமத்தூமங்கள்காட்டுமச்சிறப்பெலாந்தேய்ந்து
தாமத்தூமலர்த்தருப்பைகள்சமிதைகள்விரித்த
ஓமத்தூமமேயோங்கினவுயர்மனையெல்லாம். (௧௩௨)

தோலினோர்களுந்துரகதத்தோர்களுஞ்சோதி
வேலினோர்களுமாதருமிடைந்தமைமாறி
நாலினோர்களுமண்ணிடைக்கவுந்தியர்களுமுக்
கோலினோர்களுமலிந்தனர்கொடிதெருவெல்லாம் (௧௩௩)

புனிதமாதவர்சூழ்ந்திடப்புரவலர்போற்றக்
கனிதிருந்தியசெய்யவாய்க்கன்னியர்காண
நனிதிருந்தியநவமணியாதனத்தேறி
இனிதிருந்துலகாண்டனன்கௌசிகனிப்பால். (௧௩௪)

அரிச்சந்திரசரித்திரம்

ஐந்தாவது

சூழ்வினைக்காண்டம்

முற்றுப்பெற்றது.

ஆக பாடல்கள் ௭௩௨.

---

உ

சிவமயம்.

## ஆறாவது

# நகர்நீங்கியகாண்டம்.



தலமுழுதுந்தவமுனிவன்றனக்களித்தே மினியுறைதற்குரியன்
றென், றிலகுமணிமண்டபமுமெழின்மணிச் சிங்காதனமுமிழந்து
போந்து,பலவரசருடனமைச்சரமுதுடன்போய்ப்பாதவிக்கப்பதாதி

மொய்ககக, குலமகனுமடமயிலுமுன்னடக்கப்பின்னடந்தான்கொ
ற்றவேந்தன். (க)

தொடைதுறந்துமுடிதுறந்துபணிதுறந்து துடிமுரசந்துறந்து
தாமக, குடைதுறந்துவெண்கவரிக்குழாந்துறந்துகரிபரிதேர்க்குலந்
துறந்து, கடைதுறந்துமறுகணைந்தகாவலன்றன் றிருமுகத்தைக்
கணடோரெல்லாம், அடையமமனமழிந்துருகியவரவரேமுகத்திலறை
ந்தழுவாராஞர். (உ)

மயிரோடுஞ்சிறையிழந்தபோகில்போல்வேலியொடுவரம்பிழந்த
பயிரேபோற்கரமிழந்தகரியேபோற்பொறியிழந்தபாவை யேபோல்,
உயிரேபோயப்பாதவிககு முடலேபோன் மத்தாவுள்ளுடைந்தலம்
புந், தயிரேபோறறளாந்தலைந்துதத்தமககு நிகழ்ந்தவெலாஞ்சாற்ற
லுற்றார். (ந)

கொடிமீதுசெறிந்தேருங்குஞ்சரமும்பொற்சிவிகைக்குழாமுமின்
றிப், படிமீதுநடந்திடவும்படிததனவோபார் வேந்தன்பாதமென்
பார், அடிமீதுதொழுமரசர்முடிமீதுமடிமீதுமன்றிசசுட்ட, பொடி
மீதுநடந்திடவும்பொறுத்தனவோ குலகுமரன்பொற்றுளென்பார்.

அஞ்சாயன்மடவன்னத்தணிதூவியதனுலுமனிச்சத்தாலும,பஞ்
சாலும்பதைபதைக்கும் பதத்தாட்குக் கானடையோபலித்ததென்
பார், செஞ்சாலிக்கோசலமுமிராச குலவளநாடுந் தேவர்நாடும்,
அஞ்சாமற்காத்தருளும்பெருமானுக்கிதுவோவந்தடுத்ததென்பார்.

கச்சைக்குத்திளமுலைச சந்திரமதிதன் கணவனொடுகழியே
கக், கொசசைக்குவலய மயில்கொற்றவனைவிட்டு முனிக்கூட்டம்
வெட்டாள், இச்சைக்கிதம்பேசியீந்தாரைப்பாராட்டியீவார்தம்பாற்,
பிச்சைக்குவந்தவரோபெண்ணுக்குமணவாளப்பிள்ளையென்பார். ()

முலைமுகைககையாளுமுடி வேந்தனும்மகனுமுழுதும் போ
ன, ...யலாமணவறையுமலரணையு முண்டோவென் றிரங்கி

வீழ்வார், தொல்லைவிதிப்பயனலேவந்திரந்தமாமுனிவன் சொன்ன தெல்லாம், இல்லையெனுசீங்தோருக்கித்தனையோபெறும் பேறென் றேங்கிவீழ்வார். (எ)

வல்லார்க்குமாட்டார்க்கு மறமேநன்றென்றுரைப்பார் மறநன் றாமோ, அல்லார்க்குங் குழன்மடவீ ரறமேநன்றென்றுரைப்பார நன்றாகில், நல்லார்க்குந்தீயார்க்கு மெல்லார்க்குமொருமையினுண் டாதென்னே, எல்லார்க்குமுளதாகிலெங்கோனுக் கிலையானதென் னோவென்பார். (அ)

கொண்டிருந்தவளநாடுங்குறையாதபெருந்திருவுங்கொடித்தின் டேரும், பண்டிருந்தமாளிகையும்பரிசனமுந்தமக்களித் தப்பாலேறு டும், வண்டிருந்ததாரானும்வாணுதலும் வறியோர்போல்வனத்தே போகக், கண்டிருந்தும்விலக்காதகௌசிகனார் தம்மனமுங்கல்லோ வென்பார். (கூ)

செம்மையினுலகமெலாந்தனக்களித்துச் செறிவனத்தேதேம் பிச்செல்வோர், தம்மைவரவழைத்திருத்தி பொருமனைக்குத் தலை மீயாத்தறுகட்பாவி, நம்மையெலாங்காத்தளிக்கவல்லவனோவெனக் கரங்கணடுக்கிமாறு, வெம்மையினல்வெய்துயிர்ப்பார்மின்னுமை விடவந்துவீழ்ந்ததென்பார். (கo)

என்றலமந்தனைவோரும்வயிறலைத்து விழுக்தேங்கியிரங்குங்கா லை, கன்றினெடும்பிடியினெடுங்கிளையினெடும்வனம்புகுதுங்களிறே போல, இன்றளித்ததருண்முனிவர்க்கேற்றனவோவேற்றிலவோவெ ன்னவேங்கிக், குன்றனையமதில்கடந்தேதனிநடந்தசரையுவினைக் குறுகினனே. (கக)

உரைபெறுசீரிரவிகுலத்தரசர்க்குவழிவழியேயுரிமையாய, சரை யுவெனுந்தாதியரிச்சந்திரற்குவந்தவினைதானேதென்று, விரைமல ர்த்தாள் பூண்டுகிடந்தாற்றிடவுமிழிந்தேகி விரைந்துபோய்மேல், கரையணுகிவரிமணலில்விரிமலர்கள்சொரியுநறுங்காவிற்புக்கான். ()

வரைக்கனகபுயத்தினனம்மலர்க்காவில்வரிமணன்மேல்வந்திருந்தான், விரைக்கரும்பூங்குழலாளுந்திருமகனுமிருபாலும்வீற்றிருந்தார், திரைக்கடலுட்பொருளெனப்போய்ச்செங்கதிரோன்சென்றனனச்சென்றகாலை, உரைப்பனவும்விளைப்பனவுமறிதுமெனுமுனிவனும்வந்தொளித்திருந்தான். (௧௩)

அக்காலத்தமைச்சரெலாமடல்வேந்தனடிபோற்றியரசேநீமீண்டெக்காலமெழுந்தருள்வதென்றுரைக்கவாங்கவரையிருகணோக்கி,முக்காலங்களுமுணருமுனிவனுக்கின்றியான்கொடுத்த மூதூர்தன்னில், எக்கால மும்வருவ தில்லையென்று னமைச்சரெலா மேங்கிவீழ்ந்தார். (௧௪)

முன்செய்ததீவினையோமுனிசெய்த வுபகாரமுன்னுண்டாகப், பின்செய்தகைம்மாறோ பேரரசுகொடுத்தகன்று பெருங்காடெய்தல், மின்செய்தநெடுவேலாய்மெய்த்தவனையாந் துரந்துவிட்டேமாகில், என்செய்வானெனவுரைப்பார்யாம்போதுமவன்போருக்கெதிர்க்கவென்பார். (௧௫)

தோலேந்துமார்பமலர்த்தொடையேந்தத் தருப்பைமுடிச்சுருக்கத்தோடே, கோலேந்துங்குறுங்கைகதிர்வேலேந்தக் கனகமுடிக்கோடீரத்தின், மேலேந்தியிருடியிருந்துலகாள வவன்குடைக்கீழ் வீணையன்றோ, காலேந்திவாழ்வதின்யாங்கனன் மூழ்கலமையுமெனக்கட்டுரைப்பார். (௧௬)

சடைபிடித்துங்கரம்பிடித்துந்தாள்பிடித்து மாவுரியாற்றகைத்துடுத்த, உடைபிடித்துமீர்த்தவனையுயர்வனத்தி லிப்பொழுதேயோட்டுகின்றோம், மடைபிடித்தவயல்சூழும்வளநாடு நீபுரக்கவருவாயென்று, படைபிடித்தமலர்க்காத்தாற்பதம்பிடித்து விறல்வேந்தர்பணிந்துவீழ்ந்தார். (௧௭)

படிபுரக்குமன்னவன்கேட்டிருகாத்தாற் செவிபுதைத்துப்பாவமற்றோ, குடிகெடினுமுயிர்கெடினுங்கொடுத்தது வாங்கேனென்று

கூறுமெல்லை, கடிபொழிலிற்காத்திருந்தகௌசிகனும் வந்தெதிர்ந் தான்கண்டபோதே, அடியிணைதன்முடிசாத்தியிருகரத்தா லுறப் பூண்டானரசர்கோமான். (கஅ)

வெய்தாநீவேடுவரால்விலங்கினைத்துங் கொல்வித்தாய்வெகுண் டேனத்தை, எய்தாயென்மக்களையு மிசைகேட்டுத் துரத்தடித்தா யின்றுமென்னை, வைதாய்நீயெனக்களித்தமண்டலத்தை யான்றரநீ வாங்காயாகில், செய்தாயின்றிவருரைத்ததீமையெல்லா மென்ன முனிசெப்பினனே. (கக)

சிறுத்தவர்களறியாமற்செய்தபிழை யத்தனையுஞ்செவவியோய் நீ, பொறுத்தருளாயாமாகிற்பொறையென்னும் முறையென்னும்புல மையென்னும், ஒறுத்திடினும்வெறுத்திடினு முனக்களித்தவரசுரி மையொருகாலத்தும், மறுத்தினியான்வாங்கேனென்றெடுத்துரைத தான மன்னன்முனிவாட்டமுற்றான். (உ0)

பொன்கேட்கப்பொன்னளித்தான் புவிகேட்கப்புவியளித்தான போதாதென்று, என்கேட்கினுந்தருவதில்லையெனும் புன்மையிவ னிடத்திலில்லை, முன்கேட்டபொருளாலேமொழிவழுவந் தெய்து மதுமுடக்கமானால், பின்கேட்டாரிகழ்வார்கள் யாம்பொறுத்து மெனநினைந்துபேசலுற்றான். (உக)

ஒன்றுரைக்க நீகேளாயுண்மைக்கும் வண்மைக்குமுரியோயெ ன்னை, இன்றுரைத்தபிழைபொறுத்தேனழல்வேள்வி முடித்திடுதற் கிவேனென்றங், கன்றுரைத்தபொருளதனையளிப்பாயோ வளியா யோவரசவென்றான், என்றுரைத்தகௌசிகனையடிதொழுது வாய் புதைத்தாங்கிதுரைப்பான். (உஉ)

உன்னுடனே யுரைத்தபொருளுனக்கடியே னுகந்தளித்தவுரி மைச்செல்வந், தன்னுடனேபோனதெனவுணர்ந்தேனியினு முனி வாற்றருவலென்றே, நின்னுடனேயானுரைத்தசபதமினிமாறுவனோ

நீயாள்விட்டால், பொன்னுடனேதருவனென்றான்புகரோனை யவ
னழைத்துப்பொருத்தினானே. (உங)

உள்ளியதீவினையனைத்துந்தணித்திருத்தி வகைவகையேயுரை
த்துநீபோய், அள்ளியிடும்பொருள்கவராதானையின்மேற் கவண்சிலை
போமளவுந்தந்தால், கொள்ளுதிநீபின்போன கூலியையும்பெறுதி
யெனக்கூறித்தீய, வெள்ளிதனையுடன்கூட்டிமீண்டு மழைத்தொரு
வாய்மைவிளம்பலுற்றான் (உச)

துன்றுபசிக்கடகுகனிதேடும்போ தெனக்கினியசோறுவேண்
டும், என்றுமொழிதந்திடினுமேலாதுவேண்டா வென்னிவனாண்
பெற்றால், அன்றுபொருடருமுனுணர்க்கலே னில்லெனத்தநிகம்
மவதிவந்தால், நின்றவரைக்கரிகுறித்து மறுதினத்தினில்லாமலீவா
னென்றான். (உரு)

அடுத்திருத்திமனங்கலக்கிமுனிக்களித்த. மொழிமாறியளியே
னென்று, எடுத்துரைக்கிலுன்னரசையான்வாங்கித் தருவேனென்
னிசைந்தானாகில், தடுத்தழைத்துவருதிநமக்கதுபோதுமெனப் பல
வுஞ்சாற்றிக்கூட்டி, விடுத்தனன்விட்டரசனுக்கு விடைகொடுத்து
மாமுனிவன்மீண்டுபோனான் (உசா

முனியேகமன்னவனுமூரிநெடுஞ்சேனைதனைமுனிவன்றன்னோ
டினியேகுமவற்கினியாரெனக்கினியாரெனவழுதங்கியாருமீண்டார
பனியேகுமுனமெழுந்துபைந்தொடியுமன்னவனும்பாலன்றானும்
தனியேகக்கண்டமைச்சன்சத்தியகீர்த்தியுமவர்கடம்பிற்சென்றான்.

வருகின்றமந்திரியைமன்னவனுங்கண்டு விழிவழிநீர்வார, உரு
கினியவன்பினுடனீபோந்தான்மறைமுனிவற்குறநருண்டோ, அரு
கிருந்துபுவிநடத்தநின்போலங் கறிவுடையாராருமில்லை, திருநகர்க்
கேமீண்டேகென்றுரைத்திடலுமமைச்சர்பிரான்செப்பலுற்றான். ()

கோதிலாப்பெருங்குணத்தாய் குற்றேவலிங்கெடுநாள் கொடி
யேன்செய்தேன், ஆதலானீயேகுமருஞ்சுரத்திற் பணித்தபணியாற்

தான்செய்வார், மாதராருடனேகமகனேக நின்னுடன்யான்வாரேனா கில், எதிலானானேனென்றிடியேறுண்டமரமென்னவீழ்ந்தான். ()

இடிவீழ்ந்தமரம்போல வீழ்ந்தரசற்றுமந்திரியை யெடுத்துமே னிப். பொடிதுடைத்துமுடிதடவிப்பொழிவிழிநீர்தனைமாற்றிப்பொ ருமலாற்றிக், கடிநகரிலினைவிடினுயிர்விடுவனெனக் கதறிக்கலங் கிக்காமர், வடிவழுங்கமனங்கருகவுயிர்நடுங்கவருந்தேனீவருதியென் றான். (௩௦)

வேறு.

வாழ்வினைவளர்ந்தபொழுதென்னின்மிகவாழ்ந்தாய்
தாழ்வினைநிகழ்ந்தபொழுதென்றனொடுதாழ்ந்தாய்
சூழ்வினைநமைக்கடிதுசுற்றினவையெல்லாம்
ஊழ்வினையெனச்சொலியுடன்கொடுநடந்தான். (௩௧)

தொடர்ந்தமதிமந்திரிதொடர்ந்துபிறகேக
விடந்திகழ்கடுந்தொழிலின்வெள்ளிமுனடக்க
வடந்திகழ்செழுந்தனமடந்தையொடுமன்னன்
நடந்தனனயோத்திவளநன்னகர்கடந்தே. (௩௨)

நண்பினொடுநின்புரிசைநன்னகரைநோக்கி
விண்புலமெழுந்தமதில்வேலிதனைநோக்கித்
தண்புனல்வழங்கிடுதடங்களையுநோக்கிக்
கண்புனல்சொரிந்தழுதுகாரிகைநடந்தாள். (௩௩)

பாதகமலங்கள்பதறப்பதறவைத்துக்
காதலிநடந்தநடைகண்டரசர்கோமான்
நாதனருளிப்படியிருந்ததெனநக்கான்
ஆதபனழன்றெழுமருஞ்சுரமடைந்தார். (௩௪)

படிசுடவடிக்கணகல்பாரினெழுகாய் நுண்
பொடிசுடவுடற்கணழல்பொங்குவெயின்மீது

முடிசுடமிகத்துடிதுடித்துமுதிர்தீப்பூங்
கொடிசுடரெழுந்துபடுகொள்கையினரானார். (௩௫)

அந்தநெடுவெஞ்சுரமழன்றெழுதல்கண்டே
மைந்தனையெடுத்துமதிமந்திரிநடந்தான்
பைந்தொடிபடும்பரிசுகண்டுயிர்பதைத்தே
வந்தெனதுதோளினிவர்வாவெனவுரைத்தான். (௩௬)

பூமகளுமண்மகளுமேறுதல்பொறாமல்
மாமுனிவனுக்குறவளித்தநின்மணித்தோள்
நாமநெடுவேலிறைவநாயினிகழ்பெண்பால்
ஆமெமியமேறினரகாழ்ந்தழிவனென்றாள். (௩௭)

என்றுமயில்கூறிடவிரங்கியெறழ்மன்னன்
நின்றுதளர்வெய்திவிழிநீருகவுயிர்த்து
மன்றல்சொரிகின்றகுழல்வல்லியனையாய்நிற்
கென்றுமுளதிந்தவறிவென்றழுதுசென்றான். (௩௮)

சுட்டடிகறுத்துடறுளக்கமுறநீரை
விட்டெரிகொழுந்தழலினெய்சொரிவிதம்போல்
* கட்டுறவிதேள்பணிகருங்குளவிபூரம்
மட்டறவழைத்துமுனிவிட்டனன்வழிக்கே. (௩௯)

பட்டமரமேடுகுழிபாறைவழியெல்லாம்
அட்டையொடுமுட்டைமிசையாடரவுமொய்ப்ப
கட்டரவுதேளரணைகண்டவிடமெங்கும்
மட்டறநெருங்கியடிவைக்கவிடமில்லை. (௪0)

நடந்தவடி ∪ யுட்புறநலிந்திடுமெறும்பர்
அடர்ந்துபலபூரமுடனட்டைகள்கடிக்கும்

* கட்டுறவி - கட்டெறும்பு. ∪ பட்டற எனவும் பாடம்.

தொடர்ந்துபலவாளரவுசுற்றியடிதீண்டும்
கடந்தகலினும்பலகருங்குளவிகொட்டும். (௪௧

அறப்பழுதுபட்டுளமழுந்துவதிலாவி
இறப்பதினிதென்றுமனமெண்ணினுயிர்போகா
*வறப்பதினுலந்தொருமருந்துமிலையாகம்
கறுத்தழகுகெட்டுடறடித்தனகறுத்தே. (௪௨

மைநடுவிளங்குவிழிமங்கையெதிர்சீறிப்
பைநடுநடுங்கவருபல்லரவுகண்டே
மெய்நடுநடுங்கிடவரம்பையர்வெரீஇத்தங்
கைநடுநடுங்கவிருகண்மலர்புதைத்தார். (௪௩

நீருமிலைநெட்டிலையினீழலிலைநீள்பேய்த்
தேரதனைநீரெனநடந்தடிசிவந்தார்
வேரினொடுவெந்தமரநீழலைவிரும்பிச்
சேரினுமடர்ந்தரவுசீறியெழுமன்றே (௪௪

காவலவனப்பரிசுகண்டுனையறைந்தே
யாவரொழுபாரினிதுபட்டவர்களென்று
மூவரையுநோகிலனம்முனிவனையுநோகான்
தேவரையுநோகிலன்முற்றீவினையைநொந்தான். (௪௫)

சுடுந்தழலில்வெந்தெழிலெருலைந்தரசர்கோமான்
கொடுஞ்சுரமகன்றுகுளிர்கோமதிபுகுந்தான்
நடுங்கிடவிலங்கினநலிந்திடுமெனச்செங்
கடுங்கதிர்பயந்தலைகருங்கடல்புகுந்தான். (௪௬)

மைதிகழ்குறும்பொறைவனத்திலிழிமால்யா
றெய்தியதன்வண்டுறையிழிந்துபுனலுண்டு

---

* வறுப்பதினு வந்தொரு எனவும் பாடம்.

கைதவநினைந்துநீணீர்கண்கலுழிசிந்தப்
பெய்தமணல்வண்டலிடைப்பேதையொடிருந்தான். (௪௭)

அந்தவமையத்தடவியும்பொழிலுநண்ணி
வந்தடிவருந்தியவருத்தமுணராமல்
கந்தமொடுகாய்கனிகளர்ந்தருகுவந்தே
மந்திரியுமன்னவன்முன்வைத்தடிபணிந்தான். (௪௮)

அக்கணமெடுத்திறைவனக்கனியுளெல்லாம்
மிக்கனதெரிந்துமறைவிப்பிரன்முன்வைத்தே
தக்கனவுரைத்தெனதுசஞ்சலமுணர்ந்தே
இக்கனியெடுத்தினிதருந்தெனவிசைத்தான். (௪௯)

பரிந்துறவிரந்திறைபகர்ந்தமொழிகேளா
விரிந்தநெடுவாயினிதழ்வெண்பலினதுக்கி
* எரிந்திடுசினத்தழலிரண்டுகணினாலும்
சொரிந்துளம்வெகுண்டுசுடுசொற்கள்சிலசொன்னான். (௫0)

வேறு.

நீயுமுனியுநிகழ்த்துநெறிமுன்னுணர்ந்து
தோயுந்தயிர்நெய்பால்சோற்றோடருந்தாமல்
காயுங்கிழங்குங்கனியுமிலையுந்தினறு
வாயும்வயிறும்வளர்க்கிலேன்மன்னவனே. (௫௧)

என்றுபுகரியம்பவேங்கிக்குலைகுலைந்து
நின்றுமொழிகுழறிநெஞ்சடைத்துவாய்புலர்ந்து
சென்றுபணிந்துதிருக்கரத்தாற்றாள்பூண்டு
குன்றுஞ்சிலையுங்கரைந்துருகக்கூறலுற்றான். (௫௨)

நாடுநகருமுனிக்களித்துநானறியாக்
காடுதிசைநோக்கிவந்தமைநீகண்டிலையோ

* கரிந்திடு என்றும் பாடம்.

வாடுந்தமியேன் வருந்திப்போய்ப்பாலடிசில்
தேடும்பரிசுளதோசெப்பாய்நீ ரவென்றான். (௩௩)

கன்னெஞ்சராயகௌசிகனார்நெஞ்சம்போல்
வன்னெஞ்சேசாவுன்னெஞ்சமென்னமயிலுரைத்தாள்
மன்னெஞ்சுருகியொருசற்றேதயையாகித்
தின்னுங்கனியருந்தித்தெண்ணீருந்தான்குடித்தான். (௩௪)

தாமந்திகழ்புயனுந்தையலாளும்மகனும்
மாமந்திரியுமலர்க்கரத்தாலேவாங்கித்
தேமென்கனியருந்திச்செவவாய்வெளுப்பேறத்
தாமும்புனலருந்தித்தாரணிமேல்கண்வளர்ந்தார். (௩௫)

வேந்தன்மகனைவிழிமஞ்சனமாட்டக்
காந்தண்மலர்க்கைவழியேகாரிகைகண்ணீரோடச்
சார்ந்தவிடம்பார்த்துத்தடத்துமிடித்தும்மழைகாள்
சேர்ந்தவழிப்பெய்யியர்செல்கின்றானமாமுனிவன். (௩௬)

மண்டலமுமந்தரமுமைபோலிருண்மூடி
அண்டபகிரண்டமதிரவெடித்திடித்துக்
கொண்டலடர்ந்துகொடுங்காலடித்துநவ
கண்டமதிரமழைக்காலூன்றிவீழ்ந்தனவால். (௩௭)

மங்கைதனைத்துமகனைத்துமன்னனைந்
தங்கைநடுங்கியடிநடுங்கிமெய்நடுங்கிப்
பங்கமதுபட்டுப்பற்கிடுகிடென்றடிப்பத்
துங்கமணிமுடியான்சுக்கிரனைப்பார்த்துரைப்பான். (௩௮)

மாறுவதுமில்லைமழைதான்மறையோனே
ஆறுபெருகிமுனைப்பாற்படுத்துமெனச்
சீறுமரவேபோற்சினத்துநீர்செல்லுமூர்
தோறும்வரவெனக்குக்காரணமென்சொல்லுமென்றான். (௩௯)

எந்நகரிற்புக்கேமிடர்வனத்தைவிட்டினியோர்
நன்னகரஞ்சேர்ந்தாலந்நாளேயுனக்கடியேன்
சொன்னபொருடருவேன்றாயேயாய்வருதியென
மன்னவனுமந்திரியுமாதுமவன்றாள்பூண்டார். (௬௰)

வந்தடியிற்பூண்டவதற்கன்றுமறைமுனிவன
முந்தமொழிந்ததற்காவெள்ளிமுயன்றெழுந்தான்
சிந்தைமகிழ்ந்திறைவன்றேவிகரங்கைப்பிடித்தான்
மைந்தன்றனையெடுத்துமந்திரிமுன்னேநடந்தான (௬௧)

காலால்வழிதடவிக்கட்டைமுளைவேரிடறி
ஆலாலங்காலுமரவின்றலைமிதித்து
மேலாறுங்கீழாறுமினவிளக்கத்தாலறிந்து
கோலான்முன்றூன்றிக்கொடுங்கானியாற்றிழிந்தார். (௬௨)

சங்கந்தவழுந்தடவண்டலுரகயமும்
அங்கங்கேசோதித்தடிவைத்தடிவைத்துப்
பங்கமிகப்பட்டுப்பல்காலுநீர்குடித்துச
சிங்கம்புலிதிரியுந்திண்கரையிலேறினார். (௬௩)

நீந்திப்பயமகன்றுநெஞ்சிற்பயமகன்றவ
வேந்தனினிநாம்விடுந்தேகத்தக்கதெனத்
தோய்ந்தகலையாற்குழலாற்சொரிபடுநீர்
பாய்ந்தொழுகவாண்டோர்பழுவத்துறகின் (௬௪)

வேறு.

பாதவமுற்றெழுபைம்பொழிறன்னில்
ஏதமிகுத்தவெரய்கியநாளில்
மாதவனேவியவன்கணபேயும்
பூதமும்வந்துபுகுந்தனவன்றே. (௬௫)

மண்ணிலெழுந்துவளர்ந்தகருங்கார்
விண்ணிலெழுந்தனமேனியவிண்ட
புண்ணிலிரண்டுபதங்கள்புரைந்த
கண்ணினவெண்ணில்கணங்கண்மலிந்த. (௬௬)

பின்றியெழும்பிறையொத்தவெயிற்றால்
தின்றிதழ்வந்துதெறிக்கவதுக்கிக்
கொன்றுதிரங்கள்குடிக்குதுமென்றே
சென்றுபிடுங்கினதிண்கிரியெல்லாம். (௬௭)

திண்டிறல்கொண்டுயர்செந்தலைமீதே
மண்டியெழுந்துவளர்ந்தசெழுந்தீக்
கொண்டலெழுந்துகொழுந்துசுருண்டே
அண்டமுகட்டையடைந்தனவன்றே. (௬௮)

ஐயனருந்தசையானயில்வேலிச்
செய்யனருந்தசைதின்றவன்யானித்
தையலருந்தசைதம்பினெனக்கிப்
பையலிளந்தசைபற்கெளிதென்னும். (௬௯)

சென்மினடந்துசெறுத்திவர்தமைக்
கொன்மினெடுந்தசைகூறுறமென்று
தின்மினினைத்தவைசெய்மினெனப்போய்ப்
பின்முனெருங்கினபேயெடுபூதம். (௭௦)

சிறப்பமைசேயொடுதேவியுமன்னும்
உறத்தழுவித்தமுணர்ச்சிவிடாமல்
அறத்தினைநற்றுணையாகநினைத்தே
இறத்தலெமக்கினிதென்னவிருந்தார். (௭௧)

சொல்லுவிரன்முனிசொல்லியவண்ணம்
கொல்கவிரெம்முயிர்கொல்லுதிரேலெம்

அல்லலுழுங்களரும்பசியும்போம்
வில்லிலைவாளிலைவம்மெனவிண்டார். (எஉ)

கொன்றிடமாமுனிகூறினனல்லன்
சென்றிடரித்தலைசெய்தமைபோதும்
என்றுகணைகளுமெண்ணிகுபேயும்
நின்றனகட்புலநீங்கியவன்றே (எங)

தசகுலவளமறளாசங்புணாந்த
செயகதிரோனுயர்தேரினில்வந்தான்
மகருநெடுந்துளிமாரியொழிந்த
சகுல்விடித்துகழிந்ததையன்றே. (எச)

அன்றுவிடிந்தபினத்தலம்விட்டுச்
சென்றுசெழுங்கனிதின்றயனணிக்
குன்றுகடந்துகுளிர்ந்தமலர்த்தாள்
கன்றநடந்தணிகங்கையணைந்தார். (எரு)

கிரைதொறுமுருள்வனசெம்மணியாரம்
கரைதொறுமுருள்வனகாரகிலாரம்
நுரைதொறுமுருள்வனநுண்ணியவண்பூ
விரைதொறுமுருள்வனவெறிமதுகரமே. (எசு)

தூளைமணிவெண்பலராமணிதுத்தி
விளைமணிவெயில்விடவெண்புனலூடே
களைமணியொடுமெதகரிமணியோடும்
வளைமணிநிலவெழும்வாலுகமெல்லாம். (எஎ)

களினமரத்தநறுங்கனிநாகத்
தளிரல்வப்புனலரவமடக்கத்
தெளிநதிபுக்கணிசிறைகள்புலர்த்தும்
புளினமுயர்ந்தெழுபுளினமறைப்ப. (எஅ)

வெங்கயமாமதமேறிகநாறம
கங்கைவளம்பலகண்டுமகிழ்ந்தே
செங்கைகொடண்ணல்சிறப்புளவெல்லாம்
மங்கைதனக்குவகுத்துரைசெய்வான் (எக)

இந்திரசாபமிரண்டுபடைத்த
செந்திருவாணுதலாய்தெளிநன்னீர்ச
சுந்தரமேவுசுழித்திரளோர்சின்
உந்தியையொப்பனவுற்றிடல்காணாய் (அ0)

புள்ளியெழுங்கரிபோய்ப்புனலூடே
அள்ளியெறிந்தவராமணியெல்லாம்
துள்ளியெழுந்தவிர்சோதிவிசும்பின்
வெள்ளிவிழுந்தெனவீழ்வனபாராய் (அக)

விரிதிரையுந்தியவெண்மலர்காலால்
வரிமணலுந்தியவண்டலினூடே
பிரிவுறுசேவல்கள்பெடையெனவோடித்
தெரிவுறநின்றுதிகைப்பனகாணாய். (அஉ)

புண்ணியர்நுறைபுள்ளினநம்மைக்
கண்ணிடைகண்டுகலந்துபறப்ப
மண்ணிடமின்றகல்வானிடமுண்டென்
றெண்ணிவிசும்பிலெழுந்தனபாராய். (அங)

கங்கையொருத்திசிலம்பணிகாலும்
சங்கணிகந்தரமூந்துவர்வாயும்
செங்கயலுண்கணும்வெண்புளினத்தண்
கொங்கைகளுஞ்சதகோடிகள்பாராய். (அச)

முத்தணிகொங்கையிரண்டுமுளைக்க
நித்தலையம்பிகைநேயம்விளைத்தாள்

பொருப்பதிரப்பிளிறிக்கைபுடைத்தே
மருப்பைவிதிர்த்துமலைந்தகயங்கள்
செருப்புலிகோளரிசெங்கணுமவாயும்
நெருப்புகவந்துநெருங்கினவன்றே. (கூஉ)

அன்றெமினத்தையறுத்தபழிக்குக்
கொன்றுநினைக்குருதிப்புனலுண்டு
தின்றுமபெரும்பசிதீருதுமெனறே
நின்றுமொழிந்துநிறைந்தசெறிந்து. (கூங)

அன்னதுகண்டவரஞ்சிலர்தம்மைத்
இன்றுவமேயினிதென்றுதெளிந்தார்
உன்னியவெண்ணமுணர்ந்தவையெல்லாம்
மன்னியகானின்மறைந்தனவன்றே. (கூச)

நீதிவழாதவர்நீர்மையுணர்ந்தே
சாதிவிலங்குகள்சார்விடநண்ண
ஓதியவேதனுரைத்தகுறிப்பால்
வேதியனமற்றோர்விசாரமுரைப்பான். (கூரு)

மன்னவகேள்வினைவந்ததுசற்றே
இன்னம்வரும்வினையெல்லையிலாத
முன்னமுணர்ந்துமுனிக்களியேனென்
றுன்னரசெய்துதலுத்தமமென்றான். (கூசு)

நின்பரமீந்திலன்யானெனநிற்றல்
என்பரநின்னரசெய்தவளித்தல்
துன்பமுணர்ந்திவைசொல்லறுணிந்தேன்
பின்பயில்வேலவமீளுதியென்றான். (கூஎ)

அந்தணனவ்வுரைகூறிடவண்ணல்
மைந்தனுமங்கையுமற்றுமுளோரும்

னைந்தெனுடன்றொலைவெய்தினுநான்முன்
தந்ததுமாறிலனென்றுதணித்தான். (கூஅ)

சொன்னவைகொள்கிலைசூழ்வினையெய்தின்
அன்னவைபட்டறியாகுலமன்றோ
என்னைவிடுந்திருவேளைகலுமேகி
மன்னனைவடந்தனன்மற்றவரோடும். (கூகூ)

வல்லையிலேகிமறித்திரள்பொங்கு
முல்லைநிலத்தினைமுற்றுமகன்று
புல்லைமிகக்கொள்குறிஞ்சிபுகுந்தாங்
கெல்லையிலாமலையேறியிழிந்தார். (க ௦)

வேறு.

அரிகளுமரிகளால்வீழ்ந்தழிந்தவெங்
கரிகளுங்கரிகளான்மடிந்தகாவெறி
வரிநெடும்புலிகளும்புலிகளான்மறிந்
திரிதருமுழைகளுஞ்செறிவைப்பெய்தினர். (க௦க)

நானமுநரந்தமுநாறுநாண்மலர்க்
கானமுமாரமுங்காகதுண்டமும்
பானமும்பார்த்தவின்முடங்கும்பாய்கரி
தானமுந்தெரிகிலதலைமயக்கமே. (க௦உ)

நல்லணியரம்பையர்விஞ்சைநங்கையர்
மல்லணிநெடும்புயமணாளர்தம்முடன்
புல்லலினுதிர்ந்தசெந்தருவின்பூக்களும்
பல்லவசயனமும்பார்த்துப்போயினர். (க௦ங)

அழிதருநிருலுகுநறவுமாய்மலர்ப்
பொழிதருபிரசமும்பெருகிப்பொங்கியே

வழிதருமருவிகள்சிவணிமாமணி
இழிதருசோணமாநதியையெய்தினர். (கO௪)

கடகரியிழிதுறைக்கஞ்சமுத்தமும்
தடவரியிழிதுறைச்சரிந்தசெம்பொனும்
படவரியிழிதுறைப்பதுமராகமும்
இடமறமிளிர்வனவிரண்டுபாலுமே. (கO௫)

பருமணல்வண்டலும்பரந்தசங்கமும்
கருமணற்புளினமுங்கடிகொள்சந்தனத்
திருமணமருவுநீர்ச்சுழியுந்தெண்புனல்
வருமணிவரன்றியவாலுகங்களும். (கO௬)

குரண்டமுமன்னமுங்குருகுநாரையும்
திரண்டபோதாக்களுந்திகிரிப்புட்களும்
முரண்டநீர்முடிவலுமுதலேயீட்டமும்
கரண்டமுங்கம்புளுங்கண்டகண்ணெலாம். (கO௭)

கால்கரைமேய்கின்றகானமேதியின்
பால்கரைந்திழிபுனற்பரப்பைநீந்திப்போய்
மேல்கரைவெண்மணற்பரப்பில்வேதநன்
னூல்கரைகண்டவனெய்தினெய்தினன். (கOஅ)

அடர்ந்தபூஞ்சோலையினன்றுதங்கியே
விடிந்தபின்னவவிடம்விட்டகன்றுபோய்ப்
படர்ந்தவெங்கானமும்பருப்பதங்களும்
கடந்துபோயமுனையின்கரையைமேவினர். (கO௯)

எடுத்தமன்னனைத்துறந்திருடிதன்னுடன்
அடுத்தகற்பழகிதென்றவனிமங்கையைக்
கடுத்திடித்திறைவனைக்கடிதுமீள்கெனத்
தடுத்தவாறொத்துளதியமுனைதானுமே. (ககO)

கட்டனினன்பொருள்கௌசிகன்கொளப்
பட்டனவதற்கிதுபகுதிகொள்கென
இட்டெனயமுனையாறியாணர்ச்சந்தகில்
மட்டறக்குவித்ததுமணியும்பொன்னுமே. (ககக)

கொழித்தசெம்மணிகளும்பொன்னுங்கோசிகற்
கழித்திடற்கெண்மடங்கானதாயினும்
எழிற்றவமுனிவனுக்கீந்தவெல்லையி
னுழிப்பொருள்கொள்ளுதறகாதென்றுன்னினான். ( )

இன்னதுநிகழ்வுழியிறைவன்காளிந்தி
நன்னதிக்கரையினைநண்ணிவைகினான்
அந்நதித்துறைபடிந்தாடிவைகுமம்
மன்னெதிர்கௌசிகன்வந்துதோன்றினான். (ககங)

வேறு.

அரவுயிர்த்தமணிதுற்றுதரபந்தனமழுத்தியதன்மேல்
மரவுரித்தொகைவிசிப்புறநெருங்கியமருங்குறவிடஇக்
கரதலப்பிரணவத்தொழில்செவிப்புடைகலக்கமுடிமேல்
குரவுநொச்சிவெளெருக்கலரிகொத்திதழியுற்றலையவே. (ககச)

இடைநுடங்கியுமடங்கியுமெழுந்துறவலைந்திடுசெழுஞ்
சடைகுலைந்துறவரிந்தணிதலந்தனில்விழுந்துபுரள
வடநெடுங்கனலும்விண்டலமுமண்டலமும்வெந்துகருகக்
கடைசிவந்தகொடுவிழித்தொறுமடுங்கனல்கனன்றெரியவே. (ககரு)

படைபிடித்தணிநெறித்தகைபவித்திரதருப்பைசிறுவிக்
குடைபிடித்துவரமற்றொருகைகுண்டிகைபிடித்துவரவே
மடைபிடித்தவயன்மண்டலமுமாநகரும்வண்பொருளுமுன்
கொடைகொடுத்தகருணைத்திருமுகக்குருசிலைக்குறுகினான். (ககசு)

கண்டனன்கருணையங்கடல்கடுங்கௌசிகன்வரவினை
மண்டலத்தலைவர்மந்திரிகடன்பணிமறுத்தனர்கொலோ
தண்டமென்றன்மிசையுண்டெனமெலிந்திருசரண்டழுவியே
கொண்டனன்புனலிரண்டுகணுநின்றருகுதிகொண்டொழுகவே. ()

எந்தநாயகவுனக்கெமர்நெடும்பிழையிழைத்தனர்கொலோ
தந்தமாநிதியினிற்சிலகரந்துசிலதந்தவுளரோ
உந்தமேவறவறிச்சிலர்பிழைத்தெதிருரைத்தனர்கொலோ
வந்தகாரணமெடுத்தினிதுரைத்தருள்கருத்தமறவே. (ககஅ)

இந்தவெங்கடமணைந்துடறளர்ந்துயிரிடைந்தனையெனு
நொந்தனன்மனதுநொந்தபடர்சிந்தனைதணிந்திடமுனி
தந்தநாடுநகர்தந்ததிலைதந்ததிலையென்றுமொழிதந்
தந்தநாடுதனில்வந்தரசுகொண்டுறைகவென்றருள்செய்தான். ()

எந்தநல்லுயிருமென்கிளைஞரின்னுயிருமன்னுயிர்களும்
நந்தினும்முடல்பதைக்கநரகத்தினிலிருத்திவிடினும்
முந்தவந்தணரறிந்திடமொழிப்படியளித்தபொருளைத்
தந்ததில்லையெனவுன்றனெதிர்நின்றுரைசெயத்தகுவதோ. (கஉ0)

கடிஞையிட்டபலியைக்கையிலெடுத்துபசிக்குநுகரும்
மிடியரிப்புவியிடத்திலையெனக்கிதுவிதித்ததலவென்
றடிகளிற்கரமிறுக்கினனிறுக்கிடமறுத்தரசன்முன்
கடியசொற்கொடுவினைக்கௌசிகப்பெயரினன்கழறுவான். (கஉக)

தொக்கபற்பலவிலங்குகடொடர்ந்துடல்பிளந்துநலியும்
புக்கவிக்குடிஞையிற்குடிஞைபற்பலபொருப்புமஃதால்
இக்கடத்தினிலவத்திலெளிதிற்புகுதறக்கதலதென்
மக்களைத்திருமணஞ்செய்துபுணர்ந்துநின்வளம்பெறுதியால். (கஉஉ)

கண்ணிலாதமதனப்பிணிகருத்திடைபெருத்திடின்மனத்
தெண்ணிலாதுயிரிறுத்திடுமிடத்தினுமிருட்கணுறுவார்

மண்ணிலாசையுநீதிப்பெருவளத்தினிடைவைத்தமனமும்
பெண்ணிலாசையுமொருத்தர்கைபிடித்துவிடுதற்குரியவோ. (க௨௫)

குக்கிபுக்கதுசெருக்கொடுகுடற்கருகருப்புவரவே
கக்கிவிட்டதுபுசிப்பவர்கடற்புவியிடத்திலுளரோ
தக்கசொற்றிறமுரைத்திலைசமர்க்கினனெனப்பெயரிடும்
இக்கருத்தையினிவிட்டுவிடுவிட்டுவிடெனக்கழறினன். (க௨௬)

இடுதலுந்தவிர்தலும்மிடமறிந்தியல்பறிந்தொருதரம்
விடுதலுந்தொடுதலும்வினையறிந்துவிளையும்விளைவறிந்
தடுதலும்படுதலும்மளவறிந்தடைவறிந்துசெயலால்
கெடுதலுண்டுறுதலுண்டவையறிந்துணர்பரிற்கெடுவரோ. (க௨௭)

இத்தவத்தரமுனக்கினிமெனக்குரைசெயத்தகுவதோ
வெந்தழற்குளெனைவிட்டிடினும்வெட்டிவகிரிட்டுவிடினும்
மூந்துவன்பினுடனென்வயின்முனிந்தமுனிவிற்கடியனேன்
தந்துவிட்டபொருள்கொள்வதில்விருப்பமொருசற்றுமிலையே. (க௨௮)

புனிதரின்சொலைமறுத்தவில்வெறுத்திடல்பொறுத்தருளெனப்
பனிதவழ்ந்தபொழிலிற்படிவிழுந்தடிபணிந்துதொழலும்
முனிவெகுண்டிருவிழிக்கடைசிவப்புறநெருப்பெழமுனிந்
தினிவரும்பரிசுகண்டிடுகவென்றவணகன்றனனரோ (க௨௯)

மாதவன்கடிதகன்றிடவருங்கொடுமையைக்கருதியே
சீதபங்கயமுகங்கருகியெண்மடிதெளிந்ததுடனே
பூதலம்பெறுவதும்புலைமடந்தையர்புணர்ச்சியுமலால்
ஏதுவந்திடினுநன்றெனவிருந்தனனிருந்தபொழுதே (க௩௦)

வேறு.

இறையவனின்னணமெய்துமெல்லையில்
சிறைமலர்ச்சோலையின்மலறந்தரின்றுழி

அறைகழற்கௌசிகனரசன்பானின்ற
மறையவன்வரும்படிமனத்தினெண்ணினான். (சஉக)

மாதவனினைத்திடமறையவன்விரைக்
காதரின்மயங்குறுமரசைநீங்கியே
ஏதமும்வஞ்சமுமிழைக்கவெண்ணியே
பாதகனின்றதும்பழுவத்தெய்தினான். (கரு௦)

வெஞ்சினக்கௌசிகன்வேதியன்றனை
வஞ்சினத்தழைத்தடல்வல்லராவியை
நஞ்சினிற்றோய்த்ததேபோலநன்கிலா
நெஞ்சினுக்குறுவினைநிகழ்த்தியேகினான். (கருக)

இன்னதுகௌசிகனியம்பிப்போனபின்
மன்னனைமறையவன்வர்தநண்ணினான்
நன்னதிபெருக்குநீரற்றநாளிலே
அந்நதிதன்னைவிட்டகன்றுபோயினார். (கரு௨)

கன்னியுமன்னனுங்காதன்மைந்தனும்
நன்னதியமுனைவிட்டேகுநாளிலே
சென்னியைத்தூக்கிக்கண்சிவந்துகௌசிகன்
வன்னியைவருகெனமனத்திலுன்னினான். (கருங)

வருகெனநினைத்தலுமலர்த்தண்குழலில்
இருபிறப்பாளனுய்விரைவினெய்தியே
அருமறைமாதவவெனையழைத்தவக்
கருமமேதுரையெனக்கனல்விளம்பினான். (கருச)

சுடுநெருப்பின்னணம்பகரக்கௌசிகன்
நெடுவனம்பொடிபடவெரித்துநீமறித்
தடுதிறன்மன்னனையடர்ந்துகோவொளாடும்
சுடுகெனவுரைத்தனனவனுஞ்சொல்லுவான். (கருரு)

கற்பினின்மிக்கவள்கன்னிநன்னெறிப்
பொற்பினன்மன்னன்யான்சுடவும்போதிலேன்
வெற்பினின்றருந்தவவெளியடக்கிநின்
சொற்படிமறுக்கிலேன்சுடுவன்யானென்றான். (கருசு)

இவ்வகைகேட்டபின்முனிவனேகினன்
அவ்வழிநீங்கியேயகலவெய்திட
வெழ்வழன்மறித்தினிதிருக்கவேந்தனும்
ந வியன்னொளுடனடந்துபோயினன். (கருஎ)

வெறிகமழ்சோலையும்வெற்பும்வெண்டிரை
எறிபுனற்பொய்கையுநீங்கியேகியே
செறிகழைவனத்திடைச்செல்லச்சேணிடைப்
பொறிகளுங்கரும்பெரும்புகையுந்தோன்றின. (கருஅ)

கண்டனர்புகைவதேதென்னுங்காலையில்
மண்டலம்வளர்ந்துயர்வானைத்தாவியே
அண்டரண்டங்களும்வெடிக்கவார்த்தழன்
மண்டலமெங்கணும்வளர்ந்துகொண்டதே. (கருகூ)

இடஞ்செறிதிலையெனவெண்டிசாமுகம்
படர்ந்தனவிலங்கெலாமிரிந்துபாறிடக்
கடந்தவத்தொகுதியைக்கடிதுநாடியே
தொடர்ந்தனவெனவழற்சுடரெழுந்ததே. (கசO)

அவ்வழல்வளர்ந்திடவரசர்கோமகன்
இவ்வழலெவ்வழலென்றுகூறலும்
செவ்வழலயிற்படைச்செல்வகேளென
வெவ்வழலனையநீர்வெள்ளிகூறுவான். (கசக)

சண்டவெம்பசியினலழன்றுதாவியே
அண்டகோளத்தினையடர்ந்தசெந்தழல்

மண்டலத்தரசர்தம்மரபிலோருயிர்
உண்டலதேகிலதென் றுணர்த்தினன். (கசஉ)

ஒருவரையாருயிருண்டுபோகில்யான்
ஒருவனேயிறப்பனீருய்ந்துபோமெனத்
திருவையுமகனையுநோக்கிச்செங்கணீர்
வரவரவனலெதிர்மன்னனேகினன். (கசங)

புரவலனடிகளைப்பூண்டமைச்சனோர்
உரையிதுகேட்டியாவொருவனிற்கவே
அரசழிவதுனலனென் றுசிற்றிநீ
விரைகொடுகனலிடைவீழ்வல்யானென்றான். (கசச)

வேறு.

அன்னவையுரைக்கவண்ணலவனை மார்பிறகப்புல்லி
மன்னவர்தம்மையன்றிமற்றஉருயிரையுண்ணா
தென்னவுங்கேட்டேன்யானாயிறக்கினுமிறக்கவேண்டும்
உன்னுயிர்விடாமலென்றனுருயிர்விடுதனன்றே. (கசரு)

இருவருமிறந்தோமாகிலிவரையோர்பதியிற்சேர்க்க
ஒருதுணையுண்டோசொல்லாயுறுபொருளுணர்ந்தோயென்று
மருமலர்நறுந்தார்மன்னன் மறுதலைத்துரைக்குமெல்லை
திருவெழில்வடமீன்கற்பிற்றிருந்திழைசெப்பலுற்றாள். (கசசு)

மாந்தராலிறத்தல்வாழ்தன்மாதரார்க்கென்றுமேனாள்
ஆய்ந்தநூலறிந்தோர்கூறக்கேட்டனனதலாலே
வேந்தனைவிடாதுகாத்தியண்ணனீயானிவ்வெந்தீப்
பாய்ந்துயிர்விடுவேனென்னாப்பைந்தொடிமுந்திச்சென்றாள். (கசஎ)

அன்னைதானேகமைந்தனலறிச்சென்றடிவீழ்ந்தன்னாய்
என்னைநீர்பயந்தீருங்களிடுக்கணுக்குதவவன்றோ
முன்னையூழ்விதியினாலேமுந்தயான்றழலில்வீழ்வன்
பின்னைநீர்பிழைமினென்றான்பெருகுநீரருவிக்கண்ணான். (கசஅ)

தையலாள்சொற்கேட்டுத்தனயனைத்தழுவிமோந்து
செய்யவாய்ப்பல்வீழ்ந்தில்லாய்செழுமுலைமறந்தாயல்லை
ஐயவித்துணிவுமிந்தவறிவுமெங்கடுத்ததென்னாக்
கையினான்முகத்தின்மோதிக் *கண்ணினாலருவிசோர்ந்தாள். (௧௪௯)

செய்தவப்பயத்தினாலேதோன்றியசெல்வசெய்த
கைதவமுண்டேனம்மைக்கடுங்கனல்சொல்லுமல்லால்
உய்தகவுதவுமுள்ளம்வருந்தலையொழிநீயென்னா
மொய்தழறன்னைச்சென்றுமுடுகினின்றினையசொல்வாள். (௧௫௦)

மறைவழிகடந்தேமாகில்வரும்விருந்திகழ்ந்தேமாகில்
முறைவழிசெய்யேமாகின்மூப்பரையிகழ்ந்தேமாகில்
பிறர்மனைநயந்தேமாகிற்பிறர்மணம்வைத்தேமாகில்
குறைசிலசெய்தேமாகிற்கொல்லெனக்கனலிற்பாய்ந்தாள். (௧௫௧)

மதுரமென்மொழியாள்கற்புவளர்நெடுவடவைத்தீயின்
முதிர்தழலதுதானென்னைச்சுடுமெனாமுழங்குசெந்தீ
அதிர்குரலார்ப்புமாறியடங்கிநாவொடுங்கிக்காலைக்
கதிரவன்வரவுகண்டவிருளெனக்கழிந்ததன்றே. (௧௫௨)

மண்டழறணிந்துமூங்கில்வனமெலாம்வாவியாகி
முண்டகங்குமுதநீலமுளரிகணிறையப்பூப்பக்
கண்டகங்குளிர்ந்துகற்பிற்கரசியைப்புகழ்ந்துபோற்றி
வண்டலின்மணிகொழிக்கும்வாரணவாசிசேர்ந்தார். (௧௫௩)

வாரணவாசிநண்ணிவண்டுறையதனின்மேவி
ஆரணநெறிநீராடியந்தியகன்றுபோகிப்
பூரணக்கொங்கைமாதும்புதல்வனும்பின்னேபோதக்
காரணத்தமைச்சனோடுங்காசிநன்னாட்டைச்சேர்ந்தார். (௧௫௪)

அரிச்சந்திரசரித்திரம்

ஆறாவது

நகர்நீங்கியகாண்டம் - முற்றிற்று.

ஆக பாடல்கள் ௯௦௫.

* கண்ணிநீரருவி எனப் பிரதிபேதம்.

உ

தெய்வமேதுணை.

## ஏழாவது

# காசிகாண்டம்.



மாவெலாமரிகள்பாடமகிழ்ந்துநல்வாசமன்னும்
பூவெலாஞ்செழுந்தேனல்கப்பூவையுங்கிளியுமோதும்
பாவெலாமுருகக்கேட்டுப்பலகனிபரிசினல்கிக்
காவெலாந்தலையசைக்குங்காசிநாட்டியல்புசொல்வாம். (௧)

தேவியுங்கோவுமெய்தத்திகழ்செழுங்கமலப்போதும்
காவியுங்குமுதப்போதுங்காமர்செங்கிடையுந்தண்ணீர்
வாவியுங்காட்டமாதர்வதனமுங்காட்டவண்டாம்
பாவியுமீதெதென்றுபரதவித்துழலுமன்றே (௨)

வயலெலாஞ்செந்நெல்செந்நென்மருங்கெலாங்கயல்கள்வாவும்
கயலெலாங்கலவைவாசங்காவெலாம்புயல்கள்காவிற்
புயலெலாம்புகையேயந்தப்புகையெலாம்பூழில்பூழில்
அயலெலாமாரமாரத்தருவெலாந்தேவதாரம். (௩)

நுரைமணநாறுஞ்சீதநுண்டுளித்திரள்கள்சிந்தும்
திரைமணநாறுமீனத்திரண்மணநாறுஞ்செந்தா
மரைமணநாறும்வெள்ளைவளைமணநாறும்வாவிக்
கரைமணநாறுமாதர்கனதனக்கலவையம்மா. (௪)

கரும்பினையொடித்துமள்ளர்கடாவினையடிக்கச்சிந்தி
நிரம்பினமுத்தமெங்குநீணிலாக்கதிர்பரப்பித்
திரும்பினதிசைகடோறுந்திகழ்தலாற்செறிந்துபன்மீன்
அரும்பியவானுமந்நாட்டசனியுமொத்தவன்றே. (௫)

காய்ந்தவெஞ்சினக்கடாக்கள்கமலங்கள்சிதைத்தழுந்தச
சாய்ந்தவக்குழிகளெல்லாஞ்சங்கினஞ்சரிவமேதி
தோய்ந்தபூந்தடங்களெல்லாந்துள்ளுவவாளைகாளை
பாய்ந்தவக்குழிகளெல்லாம்பறிவனபலவினூறல் (௬)

கடைசியர்குரவைகேட்டுக்கலங்கிமெய்மயங்கிக்காவி
னிடையிடைமறைவதேபோலிரிவனகின்னரிகளெல்லாம்
மடையிடைசரியுமுத்தம்வளரிளநகைகண்டஞ்சி
உடைபெரும்புனலிலோடியொளிப்பனபோன்றவன்றே (௭)

இளவிளைமதுவுண்மள்ளரிருந்துநாள்கொண்டுவித்தி
முளைவிளைசெந்நெல்கொய்துவருமுதனமுதிர்ந்துகாய்ந்த
பிணவிளைகதிர்களாலைப்பெருக்கினின்முளைப்பவெல்லாம்
பொன்விளைகுரலிற்றோன்றும்வெள்ளிவால்போன்றவன்றே. (௮)

இயலறிபுலவோர்தம்மாட்டுள்ளன * வில்லோர்க்கீந்த
செயலறிந்துளநாள்கைம்மாறளித்திடச்செல்வோர்போல
வயல்வளஞ்சுரக்கமேனுண்மழைவளஞ்சுரந்தசீர்சால்
புயல்வளர்விசும்பிற்செந்நெல்போய்ப்புகவளர்ந்தவன்றே. (௯)

இத்தகையாயநாட்டெல்லைகடொல்லையேகி
மைத்தழைகபாடவாயின்மணிநிழல்வந்துநண்ணிக்
கொத்தலர்குழலியோடுங்கோளொடுங்குமரனோடும்
மெய்த்திறலமைச்சனோடும்வித்தகன்காசிபுக்கான். (௧0)

ஆரணசாலைகோடியாவணவீதிகோடி
தோரணவாயில்கோடிசுடர்மணிமாடங்கோடி
பூரணகும்பமின்னிப்பொலியுமண்டபங்கள்கோடி
வாரணபந்திகோடிவயப்பரிப்பந்திகோடி. (௧௧)

* வீரவோர்க்கீந்த என பிரதிபேதம்.

ஆடுமங்கையரனந்தராடுவாராடல்காண
ஓடுமங்கையரனந்தருலாவுமங்கையரனந்தர்
பாடுமங்கையரனந்தர்பயிறருவீதியெல்லாம்
வாடுமங்கையுமயோத்திமன்னனுங்கண்டுபோனார். (௧௨)

தொலைவிலாமுதல்வனார்க்குஞ்சுக்கிரன்றனக்குமாய
அலைவின்மாநகரம்புக்காரரிவையராளகக்காடும்
கலைவிழிக்கடலுமின்பக்கடிதடவரவும்பார
முலையெனுமலையும்வந்துமுடுகினமறுகுதோறும். (௧௩)

உத்திரபத்திரீதிலுயர்ந்தமாளிகையினெற்றிச்
சித்திரச்சாளரங்கடிறந்துசெந்திருவையன்னார்
வத்திரச்சிலைகள்கோட்டிமன்னனையிலக்காவெய்த
அத்திரமனந்தகோடியணைந்திலவறிவுக்கஞ்சி. (௧௪)

அன்னவைபலகண்டேகியணிமணிக்கோயினண்ணி
நன்னதிபுனைந்தசென்னிநாயகனவிசுவநாதன்
சன்னிதிதன்னிற்சென்றுதலையுறவணங்கிப்போந்து
மன்னவர்பெருமானங்கோர்மணிமுடிப்பொதியில்சேர்ந்தான். (௧௫)

அப்பெரும்பொதியில்புக்காரமைச்சனங்காடுநண்ணி
எப்பெரும்பண்டமுங்கொண்டெய்தினனிமைப்பினட்டுச்
செப்பருந்திருவினல்லாடிருக்கையாற்படைத்தவன்னம்
துய்ப்பனசெய்திருந்தாரிருந்தபினிகழ்ந்தசொல்வாம். (௧௬)

வேறு.

ஒருநாள்செலமறுநாளையிலுறுதீவினைநினையா
பொருமால்களிறுடையானெடுபுகரோனமிகவெகுளா
முருகார்தொடைமுடியாய்மறைமுனிகூறியபொருணீ
தருமாறுளதெனிலின்றதுதருகென்றுதடுத்தான். (௧௭)

அதிரப்பெருகரவத்தொடெழல்கட்புகர்பலகால்
முதிரச்சிலசுடுகட்டுரைமொழியப்பொருடருமச்
சதுரெப்படியெனவெய்த்துடறளரத்துணைவிழிமுத்
துதிரசசிறிதெதிருத்தரமுரையாமலிருந்தான. (கஅ)

மொழியும்பழியுணராமுகிழ்முலையாண்முதிர்கடனீர்
பொழியுங்கயல்விழியாண்முனிபொருணல்குதருணியா
எழுகினறதொர்பசியானலிவெருகஞ்சியவெலிபோல்
அழுகினறதெனரசேயெனவவனுஞ்சிலமொழிவான். (கக)

மினைஞ்சியவிடையாய்கதிர்வேலஞ்சியவிழியாய்
மனைஞ்சுடைமுனிநம்முடைவளமுள்ளதுகொண்டான்
எனைஞ்சமுமுன்னெஞ்சமுமொன்றாகறியிரண்டோ
உனைஞ்சறியாதென்வயினுளதோபொருளென்றான். (உ0)

கல்லெனறுயர்தோளாய்கெளசிகனெண்ணுதலல்லால்
இல்லெனபதுமுளதெனபதுமியாமெண்ணுதறகுமோ
எல்லொன்றினியவதித்தினமெனையும்மகனையுநீ
வில்லென்றனள்கற்புக்கொருவித்தாகியுதித்தாள். (உக)

அவ்வாறுரைசெயமன்னவனலையுங்குறைபுயிர்கொண்
டெவ்வாறுமைவிலைகூறுவலெனவெண்ணியிடைந்தான்
வெவ்வாய்வடிவேலோயெமைவிலைகூறுதலரிதென்
வெறுவ்வாயெனினெவிடுமோநமதூழினவலியென்றாள். (உஉ)

தேமெனகனிவாயாளிதுசெப்பச்செயலிதுவே
யாமென்றெழவேவெள்ளியுமதுவேநலனென்றான்
மாமன்னவன்மைந்தன்றலைமிசையுங்குலமடவாள்
பூமென்குழன்மிசையுஞ்சிறுபுல்வைத்துநடந்தான். (உங)

மெள்ளச்செலநாணுஞ்செலவிரையச்செலவாய்மை
தள்ளப்புதல்வனையும்மயிறனையும்முனடத்தி

உள்ளத்துயரறிவாரியவுரனுலுகவிழிநீர்
வெள்ளத்திலேயடையாவிறைவிலைகூறிநடந்தான. (உ௲)

தாலத்தறமுணராதுயிர்தளரும்படிபலசெய்
மேலைப்பழவினைபற்றிடவிற்கின்றனனவினையேன
வாலைச்சிறுபருவத்தெனன்மாபிற்புதல்வனையும்
நீலக்கயல்விழியாளையுநிதியுள்ளவர்கொண்மின (உ௫)

சோதித்திருமுடியாணிவைசொல்லச்சுடர்மாட
வீதித்தலைநின்றோர்சிலர்மிகவும்மனமழலாப்
போதிற்றிருவனையாளிவடனையும்புதல்வனையும்
எதிப்படிவிலைகூறிடவெய்துந்திறமென்பார். (உ௬)

செருவுற்றகணையிலைப்பொருதிருவொப்பவளிவளும்
மருவுற்றணிதெரியற்புயமதனொப்பவன்மகனும்
ஒருவர்க்குறவிலையிற்பொருளுடையார்களுமுளரோ
இருவர்க்குறவிலையிப்பதியெவர்நல்குவரென்பார். (உ௭)

தவருக்கலதயிராவதமமனுக்கரசைலத்
தவருக்கலதளகாபுரியரசுக்கலதலைசேர்
உவரிக்கடல்புடைசூழ்வியனுலகத்திடையுறவார்
எவருக்கெளிதிவருக்குறவிலைநல்குவதென்பார். (உ௮)

மண்மின்னெனவருமென்மனைவியையும்மகனையுநீர்
கொண்மின்னெனவிலைகூறியகோமானுரைகேளா
விண்மின்னெனவலையம்பரிவெண்ணூலணிமார்பன்
கண்முன்னொருமறையோனதிகளவோடெதிர்வந்தான். (உ௯)

என்சொல்லினைமுன்சொன்னவையின்னம்பகரெனவே
மென்சொல்லியையிளமைந்தனைவிலைகூறினனெனவும்
மன்சொல்லலுநிலசேயையுமடமானையும்விற்கும்
பொனசொல்லெனவிறல்வேலினன்மறையோனொடுபுகல்வான். ()

களபப்பிடர்மிசைநின்றெறிகவணிற்படுசிலைபோம்
அளவுக்கிருநிதிநல்கிடினதுவேவிலையென்றான்
உளதப்பொருண்முழுதும்முனதுரையின்படிதருவேனா
தளவத்திருநகையாளொடுமகளைத்தரினென்றான். (ட க)

வேறு.

இருவருக்குமிதுவிலையாமெனில்
பொருளளிப்பனின்றென்றபுகன்றிடத்
தருகவப்பொருடாவெனச்சாற்றலும்
வெருவிலந்தணன்மீளவுங்கூறுவான். (ட உ)

உண்மகிழ்ந்தின்றளிக்குமுறுபொருள்
கொண்மர்தம்மையழையெனக்கூறினன்
வெண்மனத்தனென்வெள்ளியைக்கூவியந்
நுண்மறைக்குலத்தோன்முகநோக்கியே. (ட ங)

இவர்தமக்களியென்றலுமீவனென்
றவர்தமக்கவணங்கையறைந்தனன்
உவரிசூழ்புவிமன்னவனுற்றநீர்
கவருமாநிதிகைபுக்கதோவென்றான். (ட ச)

வந்ததென்பொருண்மாதையுஞ்சேயையும்
அந்தணர்க்களித்தாவணநல்கென
முந்தவாவணந்தீட்டிமுடிந்தபின்
மைந்தனோடுமயிலைவணங்கினன். (ட ரு)

வல்லிபோற்றிவருந்தலெமக்கெனச்
சொல்லிவேற்கட்டுளிபலசிந்திட
அல்லிமாமலர்த்தாள்களையனபுடன்
புல்லிவீழ்ந்துகிடந்துபுலம்பினள். (ட சா)

நின்றுகாணுநிருபருமியானுமன்
றன்றுகாணவவாவுறுசெம்முகம்
இன்றுகாண்டகவெய்தியதன்றிமற்
றென்றுகாண்பனினியெனவேங்கினாள். (டுஎ)

ஏங்கிமன்னனிடைவனென்றேபடர்
தாங்கியநாயகதாவிடையென்றயல்
நீங்கினாளிறைநீள்கழுத்தைத்தழீஇத்
தூங்கிவாய்விட்டுத்தீதான்றலரற்றினன். (டுஅ)

எமையவென்னையுமியாயையுந்தாங்கிய
சுமையிறக்கினையோசுகமுற்றதோ
உமையணைந்திங்குறவென்றிருந்தவா
றமையுமோவையனேயென்றரற்றினன். (டுகூ)

கழுத்தைப்பூண்டழுங்காதலன்கைகளை
அழுத்தமாம்பற்றறவிடுவித்தனன்
விழித்தகட்பொறிசிந்திடவேதியன்
இழுத்துப்போய்த்தனதில்லிடமெய்தினன். (சo)

கடியவேதியன்கைதொட்டிழுத்தவக்
கொடுமைகண்டுகுலைகுலைந்தேங்கியே
இடிவிழுந்தமராமரமீதெனும்
படிவிழுந்தனன்சற்றும்பதைத்திலன். (சக)

வந்துமந்திரிமன்னனைத்தாங்கிநீ
புந்தியில்லவர்போலப்புலம்புவ
தெந்துகாரணமென்றடிபோற்றலும்
சிந்தைவாட்டமுங்கோட்டமுந்தேறினன். (சஉ)

அந்தணன்முகநோக்கியரும்பொருள்
வந்ததோவென்றுமன்னன்விளம்பயான்

இந்தமாநிதிபெற்றனனின்னமும்
சிந்தையோடுரைசெய்வதொன்றுண்டென்றான். (௬௩)

முனிக்குமுன்னமொழிந்தபொனீந்தனை
எனக்குக்கூலிநீயீகுவதென்னென
உனக்குமீகுவன்வாவெனவுத்தமன்
றனக்குப்பின்னடந்தான்வினைச்சல்லியன். (௬௪)

அன்னகாலையமைச்சனைநோக்கியே
என்னைநீவிற்றிவற்குப்பொனீகெனுஞ்
சொன்னபோதிற்றுணுக்கெனவேங்கியெம்
மன்னகேளெனமந்திரிகூறுவான். (௬௫)

அன்னையாயெமதாண்டகையாகிய
நின்னையான்விலைகூறுதனீதியோ
என்னைநீவிற்றிவற்குச்செலத்தகும்
பொன்னைநல்கெனவீழ்ந்தடிபூண்டனன். (௬௬)

மண்ணில்வீழ்ந்தவமைச்சனைமார்பிணைத்
தொண்ணிலாவதனத்தொளிமாழ்கவே
கண்ணினிற்புனலாட்டிக்கௌசிகன்
எண்ணுநீர்மைக்கிதேற்குமதோவென்றான். (௬௭)

ஏற்குமோபொருட்குன்னைவிற்றீகுவ
தார்க்குமாதவனெண்ணமறியலாம்
தார்க்குலாவுவெள்வேலவதாழ்க்கிலா
தூர்க்குளென்னைவிற்றெண்ணிநல்கென்றான். (௬௮)

என்னபாவமெனக்குப்பலித்ததென்
றந்நகர்ப்பலவாவணவீதிவாய்ப்
பொன்னின்மாமுடிமீதிற்புற்சூடியே
மன்னனைவிலைமந்திரிகூறுவான். (௬௯)

ஆதிநூலினராயினுமல்லது
சாதியீனர்களாயினுஞ்சால்புடைக்
கோதிலான்றனைக்கொண்டிடுகெனப்பல
வீதிதோறும்விலையதுகூறினான். (ரு0)

வாரமேதகுமந்திரிமன்னனைத்
தூரவேவிலைகூறியசொற்கொளா
வீரவாகுவெனும்பெயர்மேவினோன்
சூரநீர்மைப்புலைமகன்றோன்றினன். (ருக)

சூடக்கணிங்கிமயங்கியகொள்கையால்
தடக்கைகால்விதிர்ப்புற்றதளர்ச்சியான்
விடக்கின்றூறுதசைவிணவின்றண்டினில்
தொடக்கிக்காவியதிண்பெருந்தோளினன். (ருஉ)

சுமக்குநகாவைர்துத்துசொவாய்புதைத
துமக்குவேண்டுமுறுபொருணல்கிடின்
அமைக்கும்புன்றொழிலாளரெம்போல்பவர்
தமக்கும்விற்கத்தகுதியுண்டோவென்றான். (ருங)

அன்னதன்மையரசன்மனங்கொளா
இந்நகர்க்குளிவனலதெம்விலைப்
பொன்னளிப்பவனில்லெனப்புந்திவைத்
தென்னைவில்லெலன்றமைச்சற்கியம்பினான். (ருச)

ஆயினன்றென்றமைச்சனுமவ்வயின்
மேயினனனிவிற்பனுனக்கென்றான்
ஈயுநல்விலையேதெனப்பொன்பதி
னாயிரமென்றமைசசனியம்பினான். (ருரு)

தருகுவேனெனத்தன்பெயராற்பொறித்
தருளினன்புலையற்கமைச்சாவணம்

பொருளைவாங்கிப்புகர்க்களித்தையபோய்
வருகவென்னமகிழ்ந்தவனேகினான். (௫௬)

மீளிவேந்தும்விடக்கின்றசைச்சுமை
தோளிலேற்றிப்புலையற்றொடர்ந்தனன்
ஆளிமொய்ம்பினமைச்சனுமன்னவன்
றாளில்வீழ்ந்துதளர்ந்துவருந்தினான். (௫௭)

கொற்றவாநின்குளிர்மலர்த்தாளிணை
உற்றநாடொட்டுமுன்பணியேசெயப்
பெற்றமாதவப்பேறெனக்கின்றொடும்
அற்றதோவென்றயலழுதேகினான். (௫௮)

வலையநீத்தபுயத்திடைவைத்தகா
அலையவேபின்றொடர்ந்தரிச்சந்திரன்
தொலைவிலாமுடைநாறியதொன்னெறிப்
புலையன்மேவும்புலைக்குடிநண்ணினான். (௫௯)

பார்த்தவர்க்குப்பசுத்தசையாய்மறை
கோத்தகாவையிறக்கிக்கொடுத்தபின்
பாதைக்கொட்டிலினுள்ளிருந்தேபுவி
காத்தகோவுடன்காலனியம்புவான். (௬0)

வேறு.

ஆங்கிருள்கடியுஞ்செந்தீச்சுடலையிற்சுடும்பிணத்துக்
கோங்கியபுலைப்பேறுடையொன்றுண்டுபணங்காலுண்டு
வாங்கியீதெனக்குவைத்துவாய்க்கரிசியைநீயட்டுண்
டாங்கிருவென்றுபின்னுமண்ணலுக்கவனுரைப்பான். (௬௧)

எனக்குநீபணமுங்கொள்ளியாடையுமினிதுநல்கி
உனக்குவாய்க்கரிசிதந்தேனுண்டிருபசியைநீக்கி

மனத்துளேவஞ்சமின்றிமயானத்திலுறைவாயென்னத்
தனக்குநேரில்லான்றானுநன்றெனச்சுடலைசார்ந்தான். (௬௨)

சுட்டவெம்பிணத்தோடொக்கத்தொலைந்துவெந்தெரிந்தகொள்ளிக்
கட்டையும்பாடைசேர்ந்தகழிகளுமெடுத்துக்கூட்டிக்
கொட்டிலொன்றெடுத்துமேனாள்கொடுஞ்சவங்கொணர்ந்துபோட்ட
கட்டிலொன்றேறிச்செங்கோற்காவலன்வீற்றிருந்தான். (௬௩)

பாடையிற்கொணர்ந்துவைத்தபிணஞ்சுடுபணமுங்கொள்ளி
ஆடையும்வாங்கியீட்டியாண்டகைக்களித்தங்குற்றுக்
கூடையினிறைத்துநாளுங்கொடுத்தவாய்க்கரிசிவைத்தாங்
கோடைமாக்களிற்றின்மன்னனுறைந்தனனுறைந்தபின்னர். (௬௪)

அத்திருநகரின்மற்றோரம்பலத்திரவுதங்கிச்
சத்தியகீர்த்தியென்பான்றங்கனாயகனைத்தேடிப்
புத்தியில்வருத்தநண்ணிப்புலைக்குடிலருகுதேடி
உத்தமனீமங்காக்குமாறுகேட்டோடிச்சென்றான். (௬௫)

நெருப்பெழுந்தெரியுஞ்செந்தீச்சுடுகரைநீந்தியேகி
மருப்பயிலலங்கன்மன்னைமந்திரத்தலைவனண்மிச்
செருப்பயில்வீரவேலான்சிறுகுடிறனிலேபுக்கங்
கிருப்பதுகண்டான்காணாவேங்கியேயலறிவீழ்ந்தான். (௬௬)

மன்னவரிடம்பொருதுவந்துசூழ்ந்திறைஞ்சிப்போற்ற
அன்னமென்னடையாராடவரம்பையர்பாடவைகும்
பொன்னெடுங்கோயினீங்கிப்பூதமும்பிசாசுமாடும்
இந்நெடுங்கோயிலோவந்தெய்தியதையவென்றான். (௬௭)

கதிதருமயனுமாலுங்கடக்கருங்கொடியநீர்மை
விதியினையெளியநம்மால்வெல்லலாந்தகைமைத்துண்டோ
அதிகம்வந்தெய்தாமேனுளமைத்தவேயடுக்குமல்லால்
மதிவலோயிதற்குவாடிவருந்தலையென்றுசொன்னான். (௬௮)

என்னவேயமைச்சன்றேறியிருந்தனனிருக்கவேந்தன்
முன்னமேயுய்த்துவைத்தவரிசியைமுறையினீந்தான்
இன்னமுதடுவதற்கென்றெண்ணியேயமைச்சனவீழ்ந்து
பொன்னடிவணங்கிவாங்கிப்புல்லினிற்பொதிந்துகொண்டான். ()

மண்டலத்திறைவனுய்த்துவைத்தவாய்க்கரிசிதன்னைக்
கொண்டுபோய்ச்சுரபிக்கீந்துகோமயத்துடனேவீழ்ந்த
தண்டுலமெடுத்துக்குத்திச்சமைத்தினிதுதவவசோ
றுண்*டவருறைந்தார்பின்னையுற்றவாறெடுத்துரைப்பாம். (எ0)

அரிச்சந்திரசரித்திரம்

ஏழாவது

காசிகாண்டம்

முற்றுப்பெற்றது.

ஆக பாடல்கள் கூஎகூ.

உ

சிவமயம்.

## எட்டாவது

# மயானகாண்டம்.



வல்லியுமகனுமந்தமறையவன்மனையிற்சேர்ந்து
சொல்லியபணிகளெல்லாஞ்சோர்வறசெய்துபின்னும்
எல்லியோர்சாமமென்னவெழுந்திருந்தேவன்முற்றி
அல்லிருசாமஞ்சென்றுலளித்தகூழுண்டுறங்கி. (க)

* டவனுறைந்தார எனவும் பாடம்.

கையினி லுலக்கைபற்றிக்காந்தளினுதிரம்பாய
மெய்யினில்வெயர்நீர்சிந்தவிழியினிலருவிபாய
செய்யினின்முடித்தகூந்தனெற்குத்துங்கொடுமைகாணு
மையினிற்றிகழ்வேற்கண்ணாரம்பையர்மறுகிச்சோர்ந்தார். (௨)

புன்கணுற்றரம்பைமாதர்வருந்தவும்புந்திசெய்யா
வன்கணனிரக்கமில்லான்மடித்தவாய்வெடித்தசொல்லான்
தன்கணன்பில்லான்பொல்லான்றறுகணன்விலைகொண்டான்வோன்
இன்கணில்லாதாளபாரியிவனிலுங்கொடியபாவி. (௩)

அடியினலஞ்சிமைந்தனனந்தலைப்பயமுணர்த்த
விடியுமுன்னெழுந்திருந்துவிளைபுலங்களைப்பறித்துக்
கடிவனத்தடகுகொய்துகாட்டமுஞ்சமித்தையும்பொன்
முடிபுனைதலையில்வைத்துமுறைமுறைவருமந்நாளில். (௪)

மைந்தனுஞ்சிறுபோரடேகிவனந்தனில்விறகுகட்டித்
தந்திடுவழியிலோர்பாற்றருப்பைகண்டதுவிட்டேகில்
அந்தணன்முனிவானென்றேவஞ்சியேயார்வடத்தினீழல்
இந்தனமிற[illegible]ப்புலிருந்திடுபுதற்கட்சென்றான். (௫)

பறித்தனன்குசையைப்பற்றிப்பறித்தலுமுனிவனேவக்
குறித்துவந்ததனுட்டங்குங்கோளராச்சீறியோங்கித்
தெறித்தழல்விழியாற்சிந்தத்தீண்டிற்றுத்தீண்டலோடும்
வெறித்தெழுந்தலறியோடிவெருவியேதரையில்வீழ்ந்தான். (௬)

வடத்தின்கீழிருந்ததோழர்மறுகிப்போய்வள்ளல்வீழ்ந்த
இடத்தினையணுகியையோவென்னுற்றதுரையாயென்னப்
படத்திறற்பெரியநாகங்கடித்ததுபாருமென்று
விடத்தினலறிவுசோர்ந்தான்விட்டுயிரடங்கிற்றன்றே. (௭)

ஆவிபோயகன்றபின்னையனைவரும்புரட்டிப்பார்த்துப்
பாவியூழென்னேயிந்தப்பாலகனிறந்தானென்று

மேவியவ்வடத்தின்கீழ் வந்தவரவர்விறகுகொண்டு
காவியங்கழனிசூழுங்காசியம்பதியிற்புக்கார். (௮)

பாலர்வந்தூரிற்புக்கார்பானுவுங்கடலிற்புக்கான்
மாலைவந்திறுத்தபின்னர்வழியினைநோக்கியன்னை
பாலன்வந்திலனென்றேங்கிப்பரதவித்திருகண்டாரை
காலனொத்துருகிவாயிற்கடைத்தலைவந்துபார்த்தாள். (௯)

வணங்கியகரத்தாள்சாலவாடியமனத்தாண்மக்காள்
இணங்கியும்முடனேவந்தவென்மகனெங்கேயென்றாள்
மணங்கமழ்குழலாயுன்றன்மைந்தனையரவுதீண்டி
உணங்கியேயிறந்தானென்றாருயிர்த்திலண்மறுகிவீழ்ந்தாள். (௧௰)

மடத்தகைவல்லிபின்னுமைந்தரைநோக்கியெந்த
இடத்திலேயிறந்தானென்னயாம்வரும்வழியினிற்கும்
வடதிணுக்கயலேசற்றேவடக்கினிற்குசைபடர்ந்த
தடத்தினிற்றெற்கேயென்றுசாற்றியேயவர்கள்போனார். (௧௧)

அறுதியீதென்றுசாலவறிவழிந்துருகிவீழ்ந்து
மறுகினாளுடையோர்க்கஞ்சிவாய்திறந்தரற்றாண்மாழ்கிச்
சிறுதொழின்முழுதுஞ்செய்துதீர்த்தபின்றேடிச்சேறல்
உறுதியென்றுளத்தினுள்ளேயொடுக்கிவந்தகத்திற்புக்காள். (௧௨)

முறைமுறைபணிகளெல்லாஞ்செய்தறமுடித்துப்பின்னர்
மறையவன்றன்னையேத்திவாய்புதைத்தழுதுவிம்மி
இறைவகேளரவந்தீண்டியென்மகனிறந்தானியானச்
சிறையிலேசேறற்குன்றன்றிருவுளமறியேனென்றாள். (௧௩)

சினக்கடுஞ்சொல்லாற்சீறித்திடுக்கிடவுரப்பிவீணீ
எனக்குறுகுறையேயன்றியென்பொருட்கழிவுவந்தால்
உனக்குறுகுறைதானுண்டோவுறுவிலைப்பட்டபையல்
தனக்கொருதாயுமுண்டோதவிர்கநீபோவதென்றான். (௧௪)

அடிமையேயெனினுமையாவர்தரத்திறந்தானென்றால்
கொடியனேன்றனக்குப்பெற்றவயிறுதான்கொதித்திடாதோ
படியின்மேலிறந்தான்றன்னைப்பார்த்தெடுத்தடக்கிக்கங்குல்
விடியுமுன்வருவேனல்குவிடையெனத்தொழுதுவீழ்ந்தாள். (கரு)

மாலையங்குழலாள்கூறமறையவன்மனம்பொருந்தி
வேலைகண்ழிகவுமுண்டுவிடியுமுன்வருவாயாகில்
நீலவேல்விழியாயேகுநீயெனவொருகாற்சொன்ன
காலையேயெழுந்திருந்துகடிநகர்கடந்துபோனாள். (கசு)

பாவியேன்மகனேயென்பள்பதைப்பண்மென்முகத்தின்மோதித்
தாவியேவிழுவணின்றுதயங்கியேமயங்கிவீழ்வள்
காவியங்கண்ணீர்பாயக்கதறுவள்பதறியேகி
ஆவியைத்தேடித்தேடியலமருமுடலமொத்தாள். (கஎ)

ஆறெலாமடிகள்வைத்தவடியெலாம்விழிநீர்சினற
நூறெல்லாமரிவைசெனறசுவடெலாங்குருதிதொட்ட
மாறெலாங்கூந்தறுன்றுவனமெலாந்துணிகள்யார்க்கும்
தேறலாந்தகைமைத்தன்றிச்செடியெலாந்தேடிச்சென்றாள். (கஅ)

ஓடினாளுள்ளமெல்லாமுருகினாள்கருகிமேனி
வாடினாள்விறகுவைத்தவடத்தினுக்கருகேவந்தாள்
நாடினாள்கழுகும்பேயுநரிகளுங்குறளுந்துன்றிக்
கூடியகுழுவினுப்பண்குமாரனைச்சென்றுகண்டாள். (கக)

கண்டனள்கதறிவீழ்ந்தாள்கழுகெலாமிரியல்போகக்
கொண்டதோர்மகவினாசையாவியைக்கொள்ளைகொள்ள
முண்டகக்கரத்தாலேந்திமுருகனைமடிமேல்வைத்தே
அண்டருமறுகியேங்கவாய்திறந்தரற்றலுற்றாள். (உ0)

வேறு.

பனியானனைந்துவெயிலாலுலர்ந்துபசியாலலைந்துமுலவா
அனியாயவெங்கணரவாலிறந்தவதிபாவமென்கொலறியேன்.

தனியேகிடந்துவிடநோய்செறிந்துதரைமீதுருண்டமகனே
இனியாரைநம்பியுயிர்வாழவமென்றனிறைறையோனும்யானுமவமே ()

நிறையோசைபெற்றபறையோசையற்றுநிரையாய்நிறைந்தகமுகின
சிறையோசையுற்றசெடியூடிறக்கவிதியாரிழைத்தசெயலோ
மறையோனிரக்கவளநாடனைத்தும்வழுவாதளித்தவடிவேல்
இறையோனளித்தமகனேயுனைக்குமிதுவோவிதித்தவிதியே. (உஉ)

வானின்றிழிந்துசொரிகின்றதாரைமழைபோலவீழவிழிநீ
ரூனின்றிமேனியுதிரங்களசிந்தவுயிரின்றிவெம்புதழலின்
மேனின்றவெந்ததளிர்போலுயங்கிவிதியாரைநொந்துதனியே
யானின்றிரங்கவேனென்பதில்லையிதுவோவுனீதிமகனே. (உங)

செங்கோலறத்தின் முறையேசெலுத்து திறலோனெவர்க்கு முரவோன, வெங்கோபயானை விறன்மன்னனம்மை விடுவிக்க வெண்ணிவருநாள், பங்கேருகத்துமலர்போல்விளங்குவதனுமகிழ்ந்த பரிவால், எங்கேயென்னைமகனென் றுரைக்கிலினியேது சொல்லென் மகனே. (உச)

நீராளவாவிசெறிநாடனைத்துநிறைமாதவற்குதவியும்
பாராளுநீர்மைதொடர்பற்றதன்றுபடியாளுமெந்தைமுடியில்
காராளரோர்கள்கடவோசையோய்வில்கனனேசிநாடதனைமேல்
ஆராளவல்லரவமேவனத்திலரவாலிறந்தமகனே. (உரு)

நல்லோர்வகுத்தமுறையாமறங்களெட்டிலொன்றுகுறையேயும்
இல்லோரையற்பமிகழோமிறக்குமிறையன்றியேறவுகவேம்
சொல்லோமறுத்துமுரையோமுரைத்த துறவோர்கள்புத்திகடவேம்
எல்லோர்தமக்குமினிதேவிளைப்பமேதாகவந்ததிதுவே (உசு)

மறைநீதியுற்றபுறநாடழித்துவருசேனையாளவதறியம
அறைநீதிமுற்றமுணராவமைச்சையணிவாயிலவைத்துமறியேம்

குறையேயிழைத்துவினையேவிளைத்தகுடிவைத்திருந்துமறியேம்
இறையேயதவத்தின்விளைவேயெமக்குமிதுவோவிதித்தவிதியே. ()

கனமுந்தருக்கள்குலமுந்தரித்தகரமும்பெருத்தவுரமும்
தினமுஞ்சிறக்குமுகமுந்தரித்தசிகையுங்கிடக்குமுறைகண்
டினமுந்தரித்ததுயிரானபாவியிறவாமலென்றன்மகனே
மனமுந்தரிப்பதிலைநொந்துபெற்றவயிறுந்தரிப்பதிலையே. (உஅ)

பரவாதிகட்குமிகவேவிளைத்தபடிபோலுளத்திலறமே
விரவாததுட்டமுனிகௌசிகற்குவினையேயிழைத்தகுறைபோல்
கரவேபிடித்துவறியேனளித்தகனிருவிசெற்றகடுவாய்
அரவேயுனக்குமுனாதோபணைக்கவனிமீயனிழைத்தவினையே. (உகூ)

என்னையகன்றன்மணிமார்பிலேறிவிளையாடுகின்றவெழிலோய்
முன்னைப்பிளைந்தகனன்மூழ்கவெம்பின்முதலேநடந்தமதலாய்
செந்நாய்சிரண்டுசெறிகானிருந்துதெளியாதிரங்குமெனை நீ
அன்னையருந்தலையெனுதநூன்றனறிவுக்கடாதுமகனே. (கூ0)

மறவாளெயிற்றுமணிமாசுணத்தின்வலியாலிறந்துளவெனே
டிறவாதிருக்குமதிபாவிதன்னொடுறவேதெனக்கருதியோ
திறவாய்சிவத்தகனிவாயுரைத்தல்செய்கிலாய்முகத்துவிழியாய்
பிறவாதநித்தனடியேவழுத்துபெருமானளித்தமகனே. (கூக)

வடியேறுவெற்றிநெடுவேன்மலர்க்கைமகனேடிறந்துமடியாக்
கொடியேன்முகத்தில்விழியார்முனிக்குவளநாடளித்தகொடையார்
இடியேறுடைத்தமரமாகிமண்ணினிடையேயுழைத்தலழகோ
அடியேனையொக்கமுடியாதிருத்தலனியாயமிக்கயமனே. (கூஉ)

வேறு.

எனமழுகியிவனுடனேபிறந்தேமாகிலிவனை
யெடுத்தெரித்தடக்கவுரியாரில்லை
மனமுருகானம்மைவிலைகொண்டோன்சால
வன்கண்ணன்மனைவியவன்றனின்மாபாவி

னைமுடையார்விடியுமுதற்செல்லேனாகிற்
செறுவரிவன்றனைக்கருக்கிச்செல்வனென்று
தனதுதிருமகனையெடுத்தணிதோள்வைத்துத்
தள்ளாடிமதிதயனார்தனையைமீண்டாள். (௩௩)

காடுமேடுஞ்செறிந்தசெந்நாய்முன்னே
கௌவியிழுத்திடப்பறந்துகழுகுமோதப்
போடுபோடெனப்பலபேய்தொடாக்கொண்டு
போகேனீயெனக்கொடியபூதஞ்சூழ
மாடுதோறும்பறிக்கநரிகடாவ
வார்குழலுஞ்சோர்துகிலும்வனந்தொட்டீர்க்க
சுடுபொடித்தனையும்பட்டுநீண்முள்
ளிடுகாடுநீந்திநெடுஞ்சுடுகாடுற்றாள். (௩௪)

பிணங்கள்சுடுங்கடும்புலையாரவத்தாலும்
பிளந்துதலைவெடித்திடுபேரமலையாலும்
நிணங்கருகிச்சுறுநாறமுடையினாலும்
நெடுங்கனலின்கொழுந்தெழுந்தெரிவப்பினாலும்
கணங்கண்மிகக்களித்தாடுந்துழனியாலும்
கனற்பொறியின்மலிவாலும்புகையினாலும்
சுணங்குபலபிணங்குபெருங்குரைப்பினாலும்
தோகையறிந்துணர்ந்துகொடுஞ்சுடலைசார்ந்தாள். (௩௫)

கண்டனளீதிமமெனக்கருத்திலுன்னிக்
கடவுளர்தங்காவலிற்றன்மகனைவைத்துப்
பண்டுவெந்துகரிந்தகுறைக்கட்டையெல்லாம்
பலதிசையும்விரைந்தோடிப்பார்த்தெடுத்துக்
கொண்டுவந்துபிணங்கள்சுடுஞ்சுடலைநண்ணிக்
கொள்ளியெடுத்தோடியனல்கூட்டிமூட்டி

மண்டுதழற்கட்டையின்மேன்மகனைவைத்தாள்
வளர்ந்தெரியுங்கனல்விளக்கமன்னன்கண்டான். (௩௬)

அரவுகடித்தரசிளங்கோவிறந்தானென்ப
தறியாமல்வெகுண்டிறைவனாரேயிந்த
இரவுதனிற்பிணஞ்சுடுவாரறிவோமென்று
வெழுந்திருந்துவிரைந்தோடியேடிமூடி
தரவுரியபொருளெனக்குத்தாராதேநீ
தனியேயிப்பனியிருளிற்சவங்கொணர்ந்து
கரவினழற்சுடுவதுனக்கடைவோவென்றுக்
கால்வீசிக்கான்மூளையெயடித்தெறிந்தான். (௩௭)

எறிந்திடலுமுயிரேங்கவேங்கிவேனி
லிடிவிழுந்தாற்படிமிசைபேயடிசாய்ந்தாடி
முறிந்துவிழுமரம்போற்சென்றடிமேல்வீழ்ந்து
மொழிகுழறிவிழியருவிசொரியவல்லி
அறிந்துமிலனிவ்வூரில்வழங்குநீதி
யருவினையேனாருமிலியறவும்பாவி
மறிந்தமகன்றனைச்சுடநான்வந்தேனையா
வறியேற்குப்பொருளுளவோவழங்கவென்றாள். (௩௮)

பொருளுடையேன்றமருடையேனானாலிந்தப்
புத்திரனைத்தோண்மீதுவைத்துப்போந்திவ்
விருளிடையிச்சுடலையில்வந்தெய்துவேனோ
வெரிந்தகுறைக்கட்டையினிலேற்றுவேனோ
தெருளுடையாயறமுடையாய்வினையேனீன்ற
சிறுவனையான்சுடக்கருணைசெய்யாய்தேயா
அருளுடையாயாதாரமற்றேற்குன்ற
னடியிணையேதஞ்சமெனவலறிவீழ்ந்தாள். (௩௯)

பொன்னனையாய்விடுவிடுயான்புலையனென்னிற்
புலையனுமல்லேன்புலையற்கடிமைகண்டாய்
என்னடிநீதீண்டுவதுதகாதுதீதா
ளிப்பொருட்கியானுரியனலேனென்னையாள்வோன்
சொன்னபணங்காலுண்டுகொள்ளியாடைத்
துண்டமுமொன்றுண்டுதந்துசுடுதியன்பால்
அன்னவன்றன்படியாகவெனக்குத்தந்த
வாய்க்கரிசியானளிப்பேனறிதியென்றான். (௬௰)

துஞ்சியமைந்தனையெடுத்துச்சுமந்துபோந்து
சுடுவாரற்றிடுகாட்டிற்றேண்மேலேற்றிப்
பஞ்சிபடும்பாடுபடும்பாவியேற்குப்
பணமேதுகொள்ளிமுறிப்பாதியேது
நெஞ்சுதளர்ந்தருவினையேன்வருந்தக்கண்டு
நீயிரங்காயெனவிரந்துநிற்குங்காலை
யஞ்சிதிருமணிமிடற்றில்வயங்காநின்ற
மங்கலநாண்கண்டிறைவன்மறித்துஞ்சொல்வான். (௬௧)

நல்லைநல்லையறச்சமர்த்திநீயேகண்டே
னன்னுதலாரனைவரினுமிந்த்ரசாலம்
வல்லைவல்லைவிரகுகளுங்களவேசெம்பொன்
மங்கலநாணுனகழுத்திலிருக்கவேதும்
இல்லையெனச்சொல்லுவதுசற்றுமேலா
திதனையெனக்கீவாயென்றியம்பவேடர்
பல்லமுயிர்நிலைவாயிற்பட்டமான்போற்
பதைபதைத்துப்பைந்தொடியாள்பதறிவீழ்ந்தாள். (௬௨)

வேறு.

வாடினாடளர்ந்தாண்மலர்மாமுகம்
கோடினாள்குலைந்தாளலைந்தாள்கொடுங்

கோடிநாள்வந்ததென்றுகிலேசமெய்
மூடினாணெடுமூச்செறிந்தாளரோ. (௬௩

அலைவிலாவரிச்சந்திரற்கல்லது
தொலைவில்யாவர்க்குந்தோற்றருமங்கலம்
புலையன்காணவும்போதுவதோவெனா
உலையின்மீதுமெழுகொத்துருகினாள். (௬௪)

இருளறுங்குணத்தெந்தைக்குநல்வரம்
அருளுங்காலத்தரவணிவேணியான்
திருவுளஞ்செய்ததிவ்வியமென்மொழிப்
பொருளுமித்தலம்புக்கபின்பொய்த்ததோ. (௬௫)

பனிமதிச்சடைப்பாவைபங்காளனார்
இனியவாசகமின்றொடுந்தீர்ந்ததால்
புனிதனாரினும்பூவளர்ந்தோனினும்
முனிவனோமுதியோனெனவேங்கினாள். (௬௬)

அற்புக்காழியனாணரிச்சந்திரன்
விற்பப்போயினமென்மைக்குலத்தொடும்
பொற்புப்போம்பொறைபோநிறைபோமென்றன்
கற்புப்போவதென்னென்றுகலங்கினாள். (௬௭)

அனையகாலையரிச்சந்திரனுந்தன்
மனைவியாமிவளென்றுமனங்கொளாத்
தனையன்மாண்டதுதன்னையுட்கொண்டுள
நினைவைநீக்கிமறப்பையுநீக்கினான். (௬௮)

கள்ளவேகத்தரவுகடிக்கநம்
வள்ளலோவிறந்தானென்றுமன்னவன்
* உள்ளேநொந்துயிர்த்துயிர்த்துப்புறம்
விள்ளலானுரைவிம்மிமயங்கினான். (௬௯)

* உள்ளநொந்து எனவும்பாடபேதமுண்டு.

அன்னையின்றியருங்கானிலெய்திய
உன்னையோடியுரகங்கடித்தலின்
பின்னையும்முன்னையும்விற்றவெவ்வினை
என்னையெவ்வணநொந்தனையேந்தலே. (ரு௰)

நந்தநாடுநலமுமிழந்துநீ
எந்தமோடுவந்திவ்வணம்பட்டனை
மைந்தனேயென்றனைற்பெற்றவாழ்வுனக்
கிந்தவாழ்வளவோவென்றிரங்கினான். (ருக)

ஒன்றிலாதவுயிரினையோம்பியெ
பொன்றிலாதுபுலையனுக்காட்பட்டான்
வென்றிவேந்தினிமீட்கத்தருவனோ
என்றிறந்தனையோவென்றியம்பினான். (ருஉ)

விற்றநாவிலென்மேனிதழீஇயழுஞ்
பற்றியந்தணனீர்த்ததும்பார்த்திருந்
திற்றைநாண்மட்டிரங்காதவென்ஐயின்
உற்றபாவமொழித்தனையோவென்றான். (ருங)

விலைபட்டாய்ப்பட்டும்வெவ்வரவாய்பட்டுத்
தொலைபட்டாயன்னைதோளிற்கொணர்ந்திடத்
தலைபட்டாய்தமியேனெறியத்தகர்ந்
தலைபட்டாயிதுவோவிதியையனே. (ருச)

காதலாலுனைக்காணாததாயையும்
ஈதெலாம்விளைத்தெற்றியவென்னையும்
மீதெலாமரவின்விடமேயநாள்
ஏதெலாமுரைத்தாயுரையேந்தலே. (ருரு)

பிறப்புணர்ந்தவன்றேபிறிதின்றியுன்
இறப்புணர்ந்தனமென்னினுமெம்முனோர்

சிறப்புஞ்செல்வமுஞ்சேர்தலிற்றீர்ந்தவா
றறப்பெரும்பிழையென்றென் றழுங்கினன். (௮௬)

வாயின்மிக்கவயமன்னர்வந்துநின்
றாளில்வீழ்ந்தழலின்றிநின்றாய்திருத்
தோளிலேற்றிச்சுடலையிலேவா
வேளின்மிக்கவெவ்வினையோவென்றான். (௮௭)

இன்னவாறுரைத்தேங்கிடவேந்திழை
தன்னகத்தினுணர்ச்சிதழைத்திட
மன்னனேயிவனென்றமதித்தவன்
பொன்னடித்துணைபூண்டழுதோதுவாள். (௮௮)

சொதித்தெழுந்துபடர்குடிகொண்டிளங்
கதித்ததுன்வயிற்கண்டனனுத்தம
விதித்தரல்லதுவேறனுகாதென
மதித்திருநூல்வல்லிவிளம்பினாள். (௮௯)

தீமைசெய்ததனக்குஞ்சிறுவற்கும்
வாய்மைதானதுமண்ணுக்கும்விண்ணுக்கும்
தூய்மையேயளியென்றுதுணித்தனன்
மேயங்கலறத்தைநினையென்றாள். (௯௦)

தோகைகேள்புலையற்குத்தொழும்பனான்
ஆகையான்மற்றவன்பணிநீந்தவன்
ஈகையாளிழந்தாற்றவறெய்திடும்
போகைநன்றுபொருடருதற்கென்றான். (௯௧)

உன்னையாளுமறையவற்குற்றிது
சொன்னகாலந்தரினந்தத்தூசொடு
பொன்னைவாங்கியளித்துநின்புத்திரன்
றன்னைநீசுடத்தக்கதுனக்கென்றான். (௯௨)

அரக்கெனச்சிவப்புற்றவழற்கணன்
இரக்கமற்பமுமில்லவனிப்பொருள்
தரக்கருத்திலன்றந்திடிற்காண்பனென்
றுரைத்துவல்லிமகனைவைத்தோடினள். (௬௩)

வேறு.

பங்கைகடிதேகிடலுமைந்தன்முகநோக்கி
அங்கைதொடநாணிமனமஞ்சியயனின்றே
கங்கைவளநாடனிருகண்கலுழிசிந்த
வெங்கையநுகர்ந்தவிளவின்கனியையொத்தான். (௬௪)

மன்னவன்வருந்தியுறமாமயிலையன்னாள்
துன்னவரிதாயசுடுகாடதுகடந்தே
என்னவினையின்னம்வருமென்பதுகருத்தாய்
மின்னுமணிநீள்புரிசைவீதியிடைபுக்காள். (௬௫)

கிள்ளைமொழியம்மறுகுகிட்டுவதன்முன்னே
வள்ளையொலிமாடநிறைகாசிநகர்மன்னன்
பிள்ளையையெடுத்தயல்பெயர்ந்துயிர்செகுத்தே
கள்ளர்சிலர்நல்லணிகவர்ந்துகொடுபோனார். (௬௬)

அம்மதலையைத்தெருவகத்தினிடைகாணா
இம்மதலையார்மதலையென்னவலமந்தாள்
எம்மதலையைக்கணமெறிந்ததுகொலென்னாத்
தம்மதலைமெய்க்குறிதனைத்தெரிதலுற்றாள். (௬௭)

விடிந்திடுமுனந்நகரிகாவலர்விரைந்தே
இடிந்தமதிலேறியுமிழிந்துமறுகுற்று
மடிந்தகுழவிக்கருகுகண்டுமடமாதைக்
கடிந்தனர்கொணர்ந்துயிர்கவர்ந்தவிவளென்றே. (௬௮)

பதைத்திடுசினத்தொடுபசுங்குழவிதன்னை
வதைத்ததிவளாமெனமலர்க்குழல்பிடித்தே
விதைத்தலின்விழுந்தெனவிழிக்கனநெறிக்க
உதைத்தனரடித்தனரொடித்தனர்களொன்பை. (சுகூ)

சென்றவர்கள்சென்றவர்கள்சேரவடரக்கண்
டன்றவர்களிற்சிலர்விலக்கியகலப்போம்
என்றுதலமேதுகுலமேதுசிறுசேயைக்
கொன்றபரிசேதரிவைகூறெனவுரைத்தார். (எ௦)

தேவருணமக்கிலைசெகுத்திலனெனிற்றான்
ஆவதிலைநம்மொழியையாருறுதிகொள்வார்
சோவதிலுநம்மகவிறந்ததகவினும்
சாவதினிதென்பதுமனத்திடைதரித்தாள். (எக)

மெய்யுரைசெயிற்பொயெனமேவியதுவீணும்
ஐயுமிதினில்லையதனாற்புரையிலாத
பொய்யுரையுமெய்யொடுபொருந்துமெனநாடித்
தையலவரோடிதுதனைப்பகருற்றாள். (எஉ)

ஒன்றினிதுகேண்மினுலகத்தினிலிரக்கத்
தன்றியுயிர்கொன்றுழலரக்கியறியீரோ
இன்றுயிரிழந்தமகவென்கையிலிருக்கக்
கொன்றதிலையென்னவலனோகொடியளென்றாள். (எ௩)

ஆயின்விடன்மின்னெனவடித்தணிகயிற்றால்
காயுமிருகைத்துணைபிணித்தவிசவத்தை
வேயும்விழைதோளின்மிசையேற்றிவிறன்மன்னன்
வாயிற்றனைநாடிமயிலைக்கொடுநடந்தார். (எ௪)

கைகொடுசவத்தினிருகால்களையணைத்து
மெய்கொடுசுமந்தடிவிதிர்ப்புறமிதித்துப்

பெய்கொடுங்கணங்குறுதிபின்னுமுனுமொய்க்க
மொய்குழல்வணங்கிடைமுறிந்திடநடந்தாள். (எ௫)

குறித்ததிசினத்தொடுகொதித்தவரடிக்கத்
தெறித்தகுருதித்துளிதிசைத்திசையின்மொய்க்கப்
பிறித்திருகயிற்றிடைபிடித்துவரநாய்மேல்
வெறித்தடரமானெனவெருண்டுமுனடந்தாள். (எ௬)

வேலைநகர்காவலரும்வேதமுனிவற்கன்
ஆலைவயல்சூழ்பதியளித்தமடமாதும்
சாலைமுரசங்குளிறுவாயில்கள்கடந்தே
மாலைமுடிமன்னனுறைமண்டபமணைந்தார். (எஎ)

அத்தலமணைந்தவருளக்கொடியர்மன்னைக்
கைத்தலமெடுத்திருகழற்றொழுதுநின்றார்
மெய்த்தவமுயன்றமணிவேயனையதோண்மேல்
வைத்தபிணமுங்கொடுமடக்கொடியுநின்றாள். (எஅ)

நின்றளவின்மன்னனுநிகழ்ந்தபிழையென்கொல்
என்றதிசயித்திஃதிறக்கெனவுரைக்க
மன்றல்கமழ்கோதைபிணம்வைத்தனணிலத்தில்
கொன்றபரிசெந்தநெறிகூறிடுமினென்றான். (எகூ)

என்றிறையுரைத்திடவிறைஞ்சியவர்மன்னா
இன்றிரவுநின்மகவைவந்திவளெடுத்து
மன்றணிநெடுந்தெருவில்வைத்துடல்பிளர்ந்து
கொன்றபடிகண்டுகொடுவந்தனமுனென்றார். (அ0)

அந்தமொழிசொன்னவரையங்கையினமைத்து
வந்தபடியாவுமிவண்வல்லியுரையென்னச்
சந்திரமதித்தெரிவைதன்னடியைநோக்கிச்
செந்துவர்மலர்க்குமுதவாய்மலர்திறந்தாள். (அக)

செய்யமகவின்னுயிர்செகுத்தபடிகண்டாய்
கையினிலெடுத்ததொர்சவத்தையெதிர்கண்டாய்
மெய்யிடைபுலால்வெறிவிரிந்தமுடைகண்டாய்
ஐயமிலையானுமொராரக்கியறியென்றாள். (அ௨)

என்றநரவர்றசைகளுண்டுடலெடுத்தேன்
வென்றிவடிவேலிறைவநின்னகரின்மேவி
இன்றிரவினின்மகவிளந்தசைவிரும்பித்
தின்றிடநினைத்துயிர்செகுத்ததுளதென்றாள். (அ௩)

மடக்கொடியுரைக்கவிதுமன்னவனுரைப்பான்
அடக்கமுமொடுக்கமுமரக்கியலவொன்னும்
இடர்ப்பலவிவட்கிவரிழைத்தமைநமக்குச்
சுடச்சுடவுரைக்குமிவள்சொன்னமொழியென்றான். ()

உயிர்க்கொலைபுரிந்தவர்முகக்குறியுரைக்கும்
கையிற்குறியுரைக்குமிருகட்குறியுரைக்கும்
குயிற்குரன்மடந்தையிவள்கொன்றகுறியுண்டென்
றயிர்ப்பிலையெனக்கெனவமைச்சரொடுரைத்தான். ()

வள்ளலிவைகூறிடலும்வந்தவர்கண்மன்றே
பிள்ளையையெடுத்தவடியிற்பிறகுசென்று
கள்ளியிவள்கொன்றபடிகண்டுகொடுவந்தேம்
உள்ளதலதில்லதையுரைக்கவிதியுண்டோ. (அ௫)

உன்னுரைதனக்கொரொதிருத்தமுமுண்டோ
என்னுரைசெயத்தகுவதெம்பெருமவென்றே
மன்னுரைகடற்புவிவளாகமிசைவாழும்
இன்னுயிரிறக்குமிவடன்னைவிடுமென்றார். (அ௭)

அன்னவையுரைத்தவரைமன்னவனமைத்தே
என்னைபலபேசுவதிவேழையடிதானே

பின்னையடிசென்றதுளதோபிறிதெனக்கண்
டிந்நொடியில்வந்திடுமெனச்சிலரைவிட்டான். (௮௮)

போற்றடிபணிந்தவர்கள்போய்மறுகினூடே
காற்றடிசிதைக்குமுனர்கண்டிடுதுமென்றே
மாற்றடியிலாற்றரியவல்லியடிவைப்பின்
வேற்றடிகள்பார்த்தவர்விரைந்துநெறிசென்றார். (௮௯)

அங்கவர்கள்வந்திடுமுனத்தெருவகத்துக்
கங்கருகன்னல்விளைகன்னபுரிமன்னன்
மங்கையடியேயெழுதிமற்றையடியெல்லாம்
அங்கைகொடுநீவிமுனிகௌசிகனழித்தான். (௯௦)

எந்தவடிவந்ததெனவெண்ணியவணண்ணி
அந்தவடியின்சுவடமைப்பனைவருங்கண்
டிந்தவடியேயெழுதுமியாவர்களுமிங்கே
வந்தவடியில்லையெனமன்னனுழைவந்தார். (௯௧)

உற்றடி வணங்கியவர்முற்கலையொதுக்கிச்
சுற்றடிகள்பற்பலதொடர்ந்துநனிசென்றேம்
அற்றடியினிக்கொடியகள்ளியடியல்லால்
மற்றடிகளில்லையெனமன்னனொடுரைத்தார். (௯௨)

வள்ளலும்வருந்திமிகமங்கைமுகநோக்கி
உள்ளதுரைசெய்கெனவுரைத்திடமறித்தும்
கள்ளியெனையல்லதிலையென்றுகழறக்கேட்
டள்ளல்வயனாட்டரசனெஞ்சகம்வியந்தான். (௯௩)

கொல்லவிவள்வல்லவளுமல்லள்கொலைசெய்தாள்
அல்லளினிலங்கொருவர்வந்தவடியில்லை
தொல்லைவினையெவ்வகைதொடர்ந்ததறிதக்க
தில்லையெனமைந்தனிலிவட்குருகிநின்றான். (௯௪)

முன்னைவிதியாலுமவ்வினைமுற்றுமதனாலும்
என்னையிவடன்னைவிடலென்பதுநினைந்தே
கன்னல்செறிகாசிபதிகன்னபுரிமன்னன்
மின்னைவதைசெய்வதுவிரும்பியொருமித்தான். (௯௫)

அவ்வணநினைந்திடலுமவ்வளவுதன்னில்
செவ்வணவயிற்குருசிறீவினைகளெல்லாம்
இவ்வணமகன்றிடுமெனுங்குறிவிளங்க
மைவ்வணவயங்கிருண்மறைந்ததுவிடிந்தே. (௯௬)

தங்குலமடந்தைபடுசஞ்சலமுணர்ந்தே
பங்குலெழுவெண்சசிமழுங்கியொளிமாயக்
கங்குன்மகளிந்தவினைகண்டகலவோட
வெங்குலநெடுங்கதிர்வெகுண்டனவெழுந்தான். (௯௭)

காதலிபிடித்தநெறிகண்டெமதுகற்பின்
போதமிதுவென்றுபுருடர்க்கெதிர்குலாவும்
மாதர்முகமென்னவயலுந்தடமுமற்றும்
ஆதபன்முகத்தெதிரலர்ந்தவரவிந்தம். (௯௮)

வேறு.

விடிந்தகாலையில்வேறொருதிறம்புறங்காணான்
மடிந்தமைந்தனையெடுமெனமனையிடைப்போக்கி
முடிந்ததீவினைப்பயத்தினுமுதிர்வினையானும்
கடிந்திடும்படிகருதினன்காசியர்கோமான். (௯௯)

சோரர்மற்றயலுண்டெனிற்சோதித்துவந்திங்
கோரமியாவருமுரைத்திலரவரவர்வினைவை
யாரறிந்தவரிவடனைவதைப்பதற்கழைத்து
வீரவாகுவைக்கொணர்கெனத்தூதரைவிடுத்தான். (௧௦௦)

விரைவினோடிச்சென்றவன்புலைச்சேரியின்மேவி
அரசர்கோனுனையருளிப்பாடெனவுரைத்தழைக்கச்

சுரைகொள்வெள்ளைவாய்சிவந்தகட்கருநிறச்சுடர்வாட்
கரதலத்தொடுங்கடிதுவந்தரசனைக்கண்டான். (௧௦௧)

தூரநின்றுவாய்புதைத்துளமலைந்துதூசொடுக்கிப்
பாரமேனியைச்சுருக்கிவீழ்ந்தரசனைப்பணிந்திந்
நேரநாயினேன்றன்னையெண்ணினைந்தவாறென்றான்
வீரவாகுவைநோக்கியவ்வேந்தர்கோனுரைப்பான். (௧௦௨)

துட்டியாமிவள்குழவியைத்துணித்தனளென்றுத்
திட்டியாற்கண்டேமெனச்சிலரிவையைப்பிடித்துக்
கட்டிவந்தனர்கட்டொடுங்கொண்டுபோய்க்களத்தில்
வெட்டுவித்திடென்றீந்தனன்காசியர்வேந்தன். (௧௦௩)

பிணைக்கைக்கொண்டுகட்டினையிறுகுறவிசித்து
மன்னைக்கைதொழுதேத்தித்தன்சேரியில்வந்து
பின்னைத்தன்வயின்விலைபட்டவயோத்தியர்பெருமான்.
றன்னைக்கூவியேயவன்கையிற்றையலைக்கொடுத்தான். (௧௦௪)

பிள்ளையைக்கொடுபோயுடல்பிளந்துயிர்தொலைத்த
கள்ளியைக்கொலைக்களத்திடைக்கொண்டுபோய்க்கவந்தம்
துள்ளியோடநீவெட்டெனத்தோகையைக்கொடுத்து
வள்ளியோன்கையிற்றன்கையில்வாளையுங்கொடுத்தான். (௧௦௫)

வாளைவாங்கித்தன்மாதையும்வாங்கினன்வந்தான்
பாளையோதியையறிந்தனன்பாவையுமறிந்தாள்
வேளைவென்றவற்கேற்றதோவெனவிறைமெலிந்தான்
காளைவாட்டமுங்கோட்டமுங்கண்ணிகண்டுரைப்பாள். (௧௦௬)

முன்னைநாளரசாண்டணிமுடிபுனைந்திருந்த
மன்னர்செய்கையுமறங்களுந்திறங்களும்வளர்ந்த
இன்னமுங்குறைந்துயிர்தரித்திருந்தவரில்லை
அன்னதேதுணிபடியனேற்கிரங்கலையென்றாள். (௧௦௭)

அக்கணத்தினிலமைச்சனும்விரையவந்தணுகிப்
புக்கவாறெலாம்புரவலன்புகன்றிடக்கேட்டுப்
பக்கநோக்கியேமன்னனைப்பணிந்துயிர்பதைக்க
ஒக்கவேகியேசுடர்மணித்தெருவில்வந்துற்றான். (௧0௮)

இடக்கைபாசமுமேதியும்பிடித்திடவலத்துத்
தடக்கைபற்றியசவஞ்சுடுகோலினுற்றள்ளிச
சுடர்த்தெருத்தனிற்றோன்றிடத்துணுக்கமுற்றேங்கி
மடக்கொடித்திருமாதருமைந்தருமுரைப்பார். (௧0௯)

வேறு.

கையோசெழுங்கமலமுகமோ நிறைந்தமதிகாலோ விளஞ்சினை
வரால், மெய்யோகலாபமயிலிடையோ நுடங்குகொடிவிழியோகடை
ந்தவடிவேல், மையோ சுருண்டகுழன்மலையோ திரண்டமுலைவனி
தைக்கெனப்புகலுவார், ஐயோவிவட்குவிதிகொலையோவெனக்கறி
யழுவாரறைந்துவிழுவார. (௧௧0)

தவளத்திருத்தாள நகையுஞ்சிறந்தவிரு தனுவைப்பழித்த நுத
லும், பவளத்தையொத்தகனியிதழும்படைத்தவிதி பதறிப்படைத்த
துளதோ, கவளக்களிற்றரசனுலகத்துயிர்க்குதவுகபடற்றிரக்கமுடை
யோன், இவளைக்கொலைககருதியிவர்கைககொடுத்ததிறமேதென்றிர
ங்கியழுவார். (௧௧௧)

வேலைப்பழித்தவிழி யாளைச்சினத்தரசன் வெட்டென்றுரைத்த
பொழுதே, சாலச்சவங்கள் சுடுகோலிற்கடிந்துநனி தள்ளிக்கொணர்
ந்தபுலையன, சீலத்தையுங்கனகமார்பத்தையுங்குலவுதிண்டோளையுங
கண்டிடின, மாலொப்பனாறிமயிலொனொப்பனல்லதொருமதனொ
ப்பனென்றுமருள்வார். (௧௧௨)

மறையோனிடத்திவளைவிலைகூறி மிக்கவொருமகனோடும்விற்ற
வணிகன், குறையோபொருட்செலவு தெரியாதுமற்றுமொருகொடி

யோனலக்கணுறவே, பறையோனிடத்திவனை விலைகூறிவிற்றுமு ளன்பலநாள்கழித்ததறிவேம், இறையோன்மகற்கிறுதிசெயலாலிவர் க்குவருமிடையூறிதென்றுரைசெய்வார். (கக௩)

எங்கோமகன் கதற வுயிருண்டகொலைகாரி யிவளோவெனத் தொடருவார், வெங்கோப வஞ்சகரியின்முஞ்போடு மென்றுசிலர்வெ குள்வார்நெருக்கியடர்வார், பங்கோபறைக்கிவளை வதைசெய்த ணம் படைபடாதோவெனப்பதறுவார், செங்கோன்முறைக்குவழுநீர்கொ ல்வதென்றுசிலர்செயலால்விலக்கிவருவார் (ககச)

அறியாதகாசிபதி மகனைவிகொண்ட விவளனியாயகாரியசடி, பழிபூணியிங்ககலி னௌரிதாய்விடாதுநமர் பலநாவியும்பருகுவாள்; விழியாலெறிந்துமுயிர்கவர்வாண்முகத்திலெதிர்விழியாது நில்லுமெ னவே, மொழிவார்வதைத்திடுகை பொருளாகவற்பமனமுசியாளெ னப்பகருவார். (ககரு)

தப்பாதுமன்மகனை யுயிர்கொண்டுதிரமுண்ட தறுகண்ணரக்கி நமர்தங், கைப்பாசமுற்றுவரலாலோ விசும்பினிடைகரவாதிருத்த லிலளோ, அப்பாலனைக்கறுவியிவள்கொன்றதோவலதியார்கொன்ற தோதெய்வமே, இப்பாவிதன்றலையில்வைத்தாயுனக்குநடுவிலையோ வெனப்புகலுவார். (ககசு)

கொலைகாரியைத்தெருவில் விலைகூறிவிற்றபடுகொலைகாரது ட்டனிவனும், புலையாவினைக்கொலைசெயிவளாவிகொல்வதொருபொ ருளோவெனக்கதறுவார், விலைகூறிவிற்றவனுமிவனுகில்விட்டிடுவன் விடவீரெனத்தொடருவார், கலைபாவிறுக்கிமடலுறவேபிணித்தகயி றுடனேபிடித்துவருவார். (ககள)

தனியாயபாவிகுறை யெவர்போயுரைத்திடுவர்தருமாலயப்புரவ லன், அனியாயமென்றுசிறிதுணராதொர்பெண்பழியையவமேகொ ளக்கருதினன், இனியாரிரங்குபவரெனவேயலைந்துவயிறெரி யாவுலை

ந்துசுழல்வார், கனிவாய்புலர்ந்துநிலைதளர்வார்கலங்கியுடல்கரைவார் புலம்பியழுவார். (ககஅ)

வல்லோர்கள்வல்லபடி சொல்வார்கண்மன்னுமிறை மருமானை யிவள்சொன்றவா, றில்லாதபோதிவளை வறிதேவதைத்த பழியார் பாலதென்றுபகர்வார், கொல்லாதுவன் சிறையில்வைத்தே விளங்கி னிவள்கொலைதான்வதைத்திடுதலாம், அல்லாதுவிட்டிடலுமறமாகு மென்னவவரவரோடுரைத்துழலுவார். (ககக)

பதியேதுபாவியிவண்வரவேது வந்தபெறுபலனேது பாவமிகழ் பெண், மதியேதிதித்தனையும்விளைவித்ததேதென்றுமறுகாமருண்டு விழுவார், விதியேயறக்கொடியை யெளியாடனைக்கறுவி விலகூறி விற்றதுமலால், சதியேவிளைத்தனையி தறமோவெனச்சிலர்க டளர் வார்முகத்திலறைவார் (கஉ0)

அங்கேயடித்தவடியிங்கேயலைக்குமலை வல்லாமலெய்துகொலை யும், பங்கேருகத்தினறுமலர்போல்விளங்குமுகமறியாதபாவையினை யாள், எங்கேபிறந்தனள்கொ லெங்கேவளர்ந்தனள்கொ லெங்கேயரு ருந்தனள்கொலோ, இங்கேயிறந்தவியவந்தாளெனப் பலருமிடை கிடைறவெல்லைதனிலே. (கஉக)

வேறு.

என்னபாதகஞ்செய்தனளெனவிறைநகைத்துக்
கன்னிகைகளைக்கட்டியகயிறுதான்பிடித்துத்
துன்னுமாமணித்தோரணவாயிலைக்கடந்து
பொன்னின்மாநகர்ப்புரிசைபின்புறத்துவந்திறுத்தான். (கஉஉ)

உற்றநாளையில்வசிட்டனவ்வும்பர்கோன்றனக்குக்
கொற்றவாகினக்கியான்புகல்கோதிலானிடத்தே
அற்றைநாண்முதற்கொளசிகனமைக்குமூறனைத்தும்
இற்றைநாள்விடுக்காண்பநீயெழுகவென்றிசைத்தான். (கஉங)

தாழும்வார்சடைமாமுனிபவ்வுரைசாற்றச்
சூழுமாதருந்தும்புருநாரதர்தாமும்
வாழும்வச்சிரபாணியும்வசிட்டனுமியாரும்
ஏழுபாலருங்காணவந்தந்தரத்திருந்தார். (கஉச)

அந்தவேலையிற்கௌசிகன்விரைந்துவந்தரசே
இந்தநோதகவெய்தலென்னெனக்குநீமுன்னம்
தந்தநாடியான்தந்திலேனெனுமொழிசாற்றி
உய்ந்துநாடுமிவ்வுயிர்களும்பெறுகெனவுரைத்தான். (கஉரு)

சோரனின்றவன்செப்பியதாங்கவரன்றி
யாருங்கேட்டிலர்வசிட்டனுமமரருமறிந்தார்
வீரவேந்தனுமங்கையுமவனடிவீழ்ந்திங்
கியாரைநீயிந்த * வேழைமைக்காட்செய்தியென்றார். (கஉசு)

சேய்மையண்மையிலுயிர்க்கொருதுணையெனச்சிறந்த
வாய்மையாலகந்தூய்மையாமற்றிலைபுறத்தைத்
தூய்மைசெய்வதுநீரலாற்சொல்லின்வேறுளதோ
நோய்மைசெய்யினும்வாய்மையேநோன்பெமக்கறிதி. (கஉஎ)

புலையனும்விரும்பாதவிப்புன்புலால்யாக்கை
நிலையெனுமருண்டுயிரினுநெடிதுறச்சிறந்தே
தலைமைசேர்தருசத்தியம்பிறழ்வதுசரிமேயம்
கலையுணர்ந்தநீயெமக்கிதுகழறுவதழகோ. (கஉஅ)

இம்மையம்மைவீடெனமறைபுலங்கொளவியம்பும்
மும்மையுந்தருமுறையுடைத்தெனுநிலைமுரணி
எம்மையாழ்வாயிற்றடக்கிமீட்டுமிழ்கலாவெரிவாய்
வெம்மைகூர்நரகுய்க்கினுமெய்மையைவிடேமால். (கஉகூ)

* ஏழைமையுரை என்றும் பாடம்.

பதியிழந்தனம்பாலனையிழந்தனம்படைத்த
நிதியிழந்தனமினிநமக்குளதெனநினைக்கும்
கதியிழக்கினுங்கட்டுரையிழக்கிலேமென்றோர்
மதியிழந்துதன்வாயிழந்தருந்தவன்மறைந்தான். (கரு0)

மறைந்துபோகலும்வாசவன்மாமுனிவனைக்கூய்
அறைந்தகாரணமறிந்துபோவெனவருகழைத்தா
நிறைந்தநாணமுங்குறைந்தபார்வையுமுறநினைவு
குறைந்திருந்தனன்முகிலிடத்தவருடன்கூடி. (கருக)

வாசத்தார்புனை வாசவனுடன் முனிவைகப்
பாசத்தாள்கரம்பிணித்ததோர்பாசங்கைபற்றிப்
பேசத்தான்பெறுன்பிணஞ்சுடுகோலினுற்றுள்ளி
நேசத்தார்மகன்கிடந்ததோர்நெடுநிலமுற்றுன். (கருஉ)

வழக்கினென்றுநீவழிபடுதெய்வத்தைவணங்கிக்
கிழக்குநோக்கியீண்டிருவெனக்கிளிமொழிமடந்தை
பழக்கமானவக்கணவனைப்பரவியென்னுவி
இழக்கற்கஞ்சிநீயறம்வழுவேலெனவியம்பும். (கருரு)

பொருந்துநீத்ததிற்புற்புதவாழ்வைநீமெய்யென்
றருந்தவத்தையுமறத்தையுமெய்யையும்விடுத்து
வருந்தன்மன்னவவழிவழிசிறக்கெனவாழ்த்தி
இருந்தபின்சுடர்வாட்படைவலக்கையினெடுத்தான். (கருச)

உலகுயிர்க்கெலாம்பசுபதியொருமுதலாயின்
அலகில்சீருடையவன்மொழிமறையெனின்தன்கண்
இலகறம்பலவற்றினும்வாய்மையீடிலதேல்
விலகுறுமலவ்வாய்மையைவிரதமாக்கொளின்யான். (கருரு)

நெறியினன்னவென்றனைவிடாநிறையிவட்குளதேல்
இறுதியின்மையைப்பெறுகவில்லெனினிவளிறுதி

பெறுகவென்றுவாள்வீசினன்பேதைதன்சுழுத்தில்
மறுமணத்திடுமொலேயாய்வீழ்ந்ததவ்வடிவாள். (கஙசு)

அரிச்சந்திரசரித்திரம்

எட்டாவது

மயானகாண்டம்

முற்றுப்பெற்றது.

ஆ பாடல்கள் சசசஉ.

---

உ

சிவமயம்.

ஒன்பதாவது

# மீட்சிக்காண்டம்.



படதசகாதபாடியாவையும்பட்டுளத்சழுத்தும்
திடத்தினின்றுவாள்வெட்டினிற்பிழைத்தடுசெழுந்தீப்
புடத்தினின்றுமாற்றுயர்ந்தசெம்பொன்னெனப்பொலிந்தாள்
மடத்திற்றீர்ந்தொளிர்சந்திரமதியெனுமணங்கு. (க)

சடைபட்டோங்கியமுடிமுனிதனதுசூழ்வினையால்
அடைபட்டேறுபாடனைத்தையுங்கடந்துசாணையினுல்
கடைபட்டானபின்செழுமணியெனவொளிகாட்டிக்
கொடைபட்டார்புகழ்க்கோமகன்விளங்கினன்குணத்தால். (உ)

புலத்தின்மாட்சிகொள்பொலங்கொடிபடரவோங்கரசு
குலத்தின்மாட்சியுங்குணத்தின்மாட்சியுங்குறைவறுசீர்

நலத்தின் மாட்சியும்வாய்மைமாட்சியுநனிமலர
நிலத்தின் மாட்சிகொள்காட்சியினேர்ந்தனர்பலரும் (௩)

வண்டிருந்ததார்வல்லியைச்சூட்டலும்வானிற்
கண்டிருந்தவர்மதித்தனர்குளித்தனர்களித்தார்
மண்டலத்திழிந்தீண்டினர்வயிரவாட்படைகைக்
கொண்டிருந்தவக்குரிசிலுமகிழ்ச்சியிற்குளித்தான். (௪)

என்றனலிவன்குணமெலாம்விளக்கிடினெனைப்போல்
நன்றியார்செய்தாரிவற்கெனநகைமுகமலர்ந்து
துன்றுவார்சடைசுவண்மிசைச்சுழன்றுவீழ்ந்தாட
வென்றுளானெனக்கௌசிகனுடனன் விரைந்து (௫)

வாடிநாடொறும்வருந்தியவசிட்டன்மெய்ப்புளகம
மூடினன்மிகக்காலங்கண்மூன்றைமுணர்ந்தும்
ஆடினனுயர்ந்தானயர்ந்தான்றனையறியா
தோடினன்மகிழ்ந்துவகையங்கடல்குளித்துறைந்தான (௬)

அடையவானவர்திரண்டதுதிருவுளத்தடைத்துப்
புடையிலங்கியமைந்தரோரிருவரும்பொருந்தத
தொடையிலங்கியசடைமுடிமுறைமுறைதுளக்கி
விடையிலேறிவந்துமையுடனரேன்றினன்வியலன். (௭)

சிந்திடும்படியவுணர்தம்முடல்களைத்தேய்த்த
ஐந்துவெம்படையடைக்கியகரமெடுத்தமைத்துச
சுந்தரத்திருத்தோளிணைபுளகமுற்றோங்க
வந்துதோன்றினன்வயினன்மேற்றிருமறுமார்பன். (௮)

தாதிற்றோன்றியதண்டுழாய்த்தார்முகிலுபிப்
போதிற்றோன்றியநான்முகத்தொருதனிப்புத்தேள்
ஓதிற்றோன்றியவாணியோடோதிமப்புள்ளின்
மீதிற்றோன்றினன் விண்ணவர்யாவரும்வந்தார். (௯)

சித்தர்கின்னரர்தும்புருநாரதர்தேவர்
பத்தர்தானவர்கருடகந்தருவர்கள்பசாசர்
பித்தன்றன்னொடுமாலொடும்பிதாமகனொடும்
மெய்த்தவர்நிரைந்தீண்டினர்மேதினிமிசையே (க0)

சந்திராதித்தர்வைரவர்சத்தமாதர்களோ
டிந்திராதியரெண்மர்மாமுனிவராரியக்கர்
மந்தரப்புயத்திரதிமேதாய்வேனில்வேண்மற்றோர்
அந்தரத்தினைமறைத்துவந்தாவயினடைந்தார (கக)

கந்தரத்தினில்வார்விசிமுதுகுறக்கதுவ
மந்தரப்புயமாயிரமுடையவேவார்வாணன்
சுந்தரக்கையான்முழக்கிடுங்குடமுழாத்தொனியும்
அந்தரச்செழுந்துந்துமித்துழனியுமார்க்க. (கஉ)

சின்னம்பேரிகைசல்லிகைசெம்பொனின்காளம்
மின்னுமாமுகில்விடியெனக்கடலெனவிம்மத்
துன்னரம்பையர்சொரிந்திடுகற்பகத்துணரும்
பொன்னினன்னெடும்பூக்களும்பொலிந்தனவன்றே (கங)

வந்ததேவரைக்கண்டரிச்சந்திரன்மகிழ்ந்தே
எந்தமாதவமென்னேயோவென்னேயோவென்னாச்
சிந்தையுட்பெருகானந்தப்பெருவெள்ளந்தேக்கிப்
புந்தியாங்கரைபொடிபடப்புடைத்ததையன்றே. (கச)

தொழுதனன்றொழுதெழுந்தனனடிமுடிதொடங்கி
முழுதுமுற்றியவுவகையம்பெருங்கடன்மூழ்கிப்
புழுதியாடினன்கருணையங்கண்ணினீர்பொழிய
அழுதுவீழ்ந்தனன்செய்தவமின்னதென்றறியான். (கரு)

நாரிபாகனைமுகுந்தனைநான்முகத்தோனை
மூரிவேலனைவிநாயகமூர்த்தியைப்பணிந்தான்

* பூரைபூரையென்றிருகையாலமைத்தபுத்தேளிர்
யாரையாரையென்றறிந்தியாம்விளம்புதுமம்மா. (கசு

மீட்டுமன்னவன்விமலனைத்தொழுதிவணமிடைந்த
கூட்டமாயுளாரியாவர்க்குயாவெனகருதித்தான்
நீட்டும்பல்சினைக்கமையதன்றேநெடிமுதலில்
ஊட்டுநீரவரனைவர்க்குமுளகுளிர்ந்தன்றே (கஎ)

ஐயனேயெமைவழிவழியடிமைகொண்டருள்கூர்
செய்யனேசிவலோகனேசுருதியின்சிரத்தின்
மெய்யனேயுனைவிழிகளார்கண்டுவீழ்ந்திறைஞ்சி
உய்யுமாயினேனபுரிதவமுணாகிலனென்றான். (கஅ)

கையலம்பினைத்தனைத்தொழுஞ்சந்திரமதியைக்
கையிறுவெடுத்தாயகவளகறபினைப்புகழ்ந்தாள
ஐய்யமுப்பத்திரண்டறமவளர்த்தகைதொடலும்
மெய்குழைந்ததுதழைந்ததுபேரின்பவெள்ளம் (கக)

மயிலமுற்செலநடத்திடுபவனைபகவெறிந்தோன்
அயிலெடுத்தசெங்கையிறல்வருசெனைவழைக்கக்
குயின்மொழிசெழுகுதலைவாயரசிளங்குமரன்
துயிலுணர்ந்தவர்போற்புகுந்திணையடிதொழுதான். (உ0)

வேலசகூயசேய்துணையெனக்காசியர்வேந்தன்
பாலனுவிபெறவெழுந்துபோய்முருகனைப்பணிந்தான்
சீலமேவுமசிறுவரோரிருவருஞ்சிறப்பிற்
காலகாலனுந்தேவருமிற்பதுகண்டார். (உக)

ஆசினன்குணத்தயோத்தியர்வேந்தனுமணங்கும்
காசிவேந்தனுமதலையரிருவருங்களித்துக்
கூசிமெய்ம்மயிர்பொடித்திடக்கொண்டனர்புளகம்
வீசியோங்கிடவிறைஞ்சினரவசமேவினரால். (உஉ)

* பூரை பூரை - போதும் போதும்.

மன்னர்மன்னனை நோக்கியேமலர்க்கரமமையா
என்னையோவெனாவுருகித்தந்திருவுளமிரங்கி
முன்னையுத்தமரெவருளுமுறைமைக்குநெறிக்கும்
உன்னையொப்பவரிலரெனமூவருமுரைத்தார். (உ௩)

தேவதேவர்களருளியதிருமொழிகேளா
யாவரிப்பயன்பெற்றவரென்றுவகந்துருகிப்
பூவருங்குழல்வல்லியும்புதல்வரும்புருடர்
மூவரும்விழுந்தெழுந்துபன்முறைமுறைதுதித்தார். (உ௪)

வேறு

அன்னவர்வணங்கியங்கநெக்குருகியவசமுற்றெழுந்திடுமமைதி
கன்னிபங்காளன்றிருக்கரமமைத்துக்கௌசிகன்றனையெதிர்நோக்கி
மன்னவன்றனக்குநீயிடர்விளைத்தவகைமையுமெய்தியவாறும்
இன்னநற்றலத்துளியாவருமறியவியம்பெனத்திருவுளமானார். (உ௫)

இம்மொழியிறைவன்வினாதலுமுனிவ னிதயத்திற்றுணுக்கமுற்றெதிர்போய், மும்முறைநிலத்தின்மிசை விழுந்திறைஞ்சிமுதுமறைமொழிகளாற்பழிச்சிச், கைம்மலர்கொடுவாய்புதைத்து ,மெய்குனிந்துக்கண்கணீரரும்ப மெய்பொடிப்ப, எம்மையாளுடைய விறைவகேட்டருள்கென்றியாவையுநிகழ்ந்தவாறிசைப்பான். (உ௬)

வாசவன்முன்னாள்வினையகாரணமும்வசிட்டனுந்தானுமன்றிட்ட
பூசலும்விலங்காற்புனமழித்ததுவும்புரவலன்வேட்டைபோந்ததுவும்
நீசமங்கையரைவிடுத்ததுந்தனக்குநிருபனன்னாடளித்தேகிக்
காசிபுக்கீமங்காத்ததும்விளைத்தகருமமுங்கௌசிகனுரைத்தான். ()

என்றவனுரைக்கவிந்திரனவையத்திகலிநீயருவினைவிளைத்த
தொன்றலபலவுண்டவற்றினான்மனத்திலுற்றதுபெற்றிலையுலகம்
அன்றவனளித்துமின்றிதுமட்டுமெறநிலைபிழைத்திலனதனால் [பும்.
வென்றவர்தோற்றோர்யாரெனவிமலன் வினாவிடக்கௌசிகன்விளம்

கோதிலாக்குணத்தோனீதியுநெறியுங்குறியுமியானறிகிலாதிகழ்ந்தேன், ஆதலால்வென்றோன்வசிட்டனேதோற்றோனடியனே * யடியனேமேறூட், காதலாற்செய்ததவத்தினிற்பாதிகாவலன்றனக்கியானளித்தேன், ஈதலாலெனக்கன்றீந்தபேரரசு மீந்தனனென்றுரை செய்தான். (௨௯)

உரைத்ததுசெவியிற்காய்ந்த நாராசமோட்டியதென விறையுருகிக், கரப்பினர்தாமுங்கொடுத்ததுவாய்கக் கண்டிலோங்கேட்டிலோங்கையேற், றிரப்பினர்க்களித்தபொருடனைக் கொண்டோனியனைப்பெயர்படைத்துலகம், புரப்பவன்யானேவிப்பழிதனை யான்பூண்கிலேனென்றனன்பின்னும். (௩௦)

இம்மையிற்பழியா மறுமையினரகமிரந்தவர்க்களித்ததை வாங்கிற், செம்மையோர்க்கெல்லாம் பெருநகையாமித்தீமைசெய்வதற்கு நீயுலகத், தெம்மையோகண்டா யிதற்குமுன்றீராவிடர்பல விளைததனையெனினும், மும்மையும்பழியே சூட்டுதறகுமோ வென்றனன் முனியதற்குரைப்பான். (௩௧)

கன்னலங்கழனிநாடு நன்னகருங்கருதிச்செய் தவத்தையான் விட்டு, மன்னவனுகவல்லனேமீண்டும் வள்ளல்கேள்வசிட்டனுமியானும், முன்னமேமொழிந்தமுறையறிவதற்குன் முறைமைசோதித்திருந்துணர்ந்தேன், நின்னகர்நீயேயாளுதியென்றுநெடுந்தகைமறுத்தனன்மறித்தும். (௩௨)

வேதியர்க்காளாய் மின்னையுமைந்தன்றன்னையும் விற்றனன் யான்போய்ச், சாதியிற்கீழாம்புலையனுக்காளாய்ச் சவஞ்சுடுகாடுகாத்திருந்தேன், சோதிமண்டபத்தின் மணித்தவிசேறிச்சுடர்முடி கவித்துமண்புரக்க, நீதியன்றென்றேயானரசளித்தேனினக்கதேயெனக் கிதேயென்றான். (௩௩).

---

* யடியனேன் எனப் பிரதிபேதம்.

ஆமதேயெனக்குசசுடலைகாத்திருப்பதவனிகாத்திருப்பதற்கங்ஙன்
போமதேநினைக்குத்தொழிலெனமறுத்துப்புரவலனுரைப்பதுகேளா
வாமமேகலையாடனைவிலைகொண்டுமறையவனுகியாண்டுறைந்த
தாமகேதுவுங்கங்காளனூர்திருமுன்றோன்றினின்றினையனசொல்வான்

என்னைநீயுரைத்தாயெனக்குவிற்றதுவுமிகழ்ச்சியோவிவள்விலை படுதல், முன்னமே யுணர்ந்துகொள்வதற்கிசைந்து முதுமறைகுல ததுவந்துதித்து, பின்னையுமைந்தன்றன்னையும்விற்கவிலைகொண்ட ாணமீதென், றன்னைபங்காளன்றிருமுனேவைத்தா னரசனுமதி சயமுற்ருன். (௫௬)

காலனவ்வளவிற்கருங்கடாவேறிக்கருமுகிற்கப்புவிட்டனைய
கோலமுஞ்சிவந்தகண்களுநிவந்தகுஞ்சியுங்குண்டலக்குழையும்
சூலமுங்காலதண்டமும்பணைத்ததோள்களுமார்பாறந்துளங்க [வான்
மூலமாமுதலைநோக்கி வீழ்ந்திறைஞ்சி முகமலர்ந்தரசன்முன்மொழி

அலைகடற்புவியிற் புலையருக்கடிமை யாவை யென்பது முத லறிந்து, புலையனுய்ப்பிறந்து கொண்டவன்யானே பொறித்து நீ தந்தவாவணமீ, திலகுலாங் தொடையா யிருந்து நீகாத்த வீமமு மியாகசாலைகள்காண், தொலைவிலாவடுவென்றுணரினீயிகழ்ந்தசுட லையைப்பாரெனவுரைத்தான். (௫௭)

ஆவணமிரண்டுங்கண்டுதம்மெழுத் தேயாமெனவறிந்து மெய் மகிழ்ந்து, கேவணக்கிரணமணி முடிதுளக்கிலேசமும் பீடையு மகற்றிக், காவணநிழலிற்கழுகெழுந்தோங்குங்கனற் புகைச்சுடலை யைப்பார்த்தான், பூவணங்குறையும்பொய்கையும்வாசப் பொழிலு மாய்ப்பொலிந்ததையன்றே. (௫௮)

வாயெலாம் யாக மாமெலாம் யூபம் வானெலா மாகுதித் தூமம், தீயெலாமுத்தீ திசையெலாந்தருப்பை தீப்படுவிறகெலாஞ் சமிதை, பேயெலாமுனிவோர்பேச்செலாம்வேதம்பிணமெலா மதற்

கமை பசுக்கள், ஆயவாறெல்லா நோக்கினன் றொல்லை யமைந்ததே யீதெனவமைந்தான். (௩௯)

ஆங்கவன் றன்னைப் பாங்குடனோக்கி யரசநீ யயோத்தியினணு கித், தீங்கறமகுடஞ்சூட்டியிம் முனிவன்செய்தவம் பாதியுங்கொ ண்டு, வாங்குநீருலகம் பொதுவறப்புரந்துவருதியெம் பதத்தினி லென்னத், தேங்கமழ்சடையான்றிருவுளமகிழ்ந்து தேவர்கோமாற் குரைசெய்வான். (௪0)

காரணமொன்று கேட்டியாளியுங் காசிபன் முதன் முனி வரரும், வாரணவாசிமன்னனு மயோத்திமன்னவன் றன்னுட னேகித், தோரணவீதித் திருநகர்புகுந்து சுடர்முடி சூட்டிய பின்னர், ஊரணிந்திடு கென்றுரைத்திடவணங்கி யுவகையாலன் னவருரைப்பார். (௪௧)

திங்கண்மேவிய செஞ்சடைமுடியாய் நின்றிரு வுளத்தின்படி யலலால், எங்கண்மாட்சிமை வேறில்லையென்றளித்த வேவறந்தலை மிசைக் கொண்டார், அங்கண்மாஞாலமகன்றெழுந்தீச னணிதிகழ் கயிலையிற்புக்கான், செங்கண்மாகிலேகிப் பாற்கடல்புகுந்தான்றிசை முகன்றனு துலகடைந்தான். (௪௨)

வேறு.

கருத்தினின்மகிழ்ச்சியோங்கக்கடவுளரேவன்மாறு
தருத்திகொண்டேகித்தத்தஞ்சார்பினிலடைந்தபின்னர்
வருத்தமும்வினையுமாற்றிமன்னனைமகுடஞ்சூட்டி
இருத்தினும்போவோமென்னவிந்திரனினிதிருந்தான. (௪௩)

காசிபன்பிருகுரோமன்கௌதமன்பரத்துவாசன்
கோசிகன்வசிட்டன்சனனுகுறமுனிமரீசியாதி
ஆசினாரதன்மதங்கனத்திரிமுதலோர்சூழக்
காசியிலினிதிருந்தார்கழிந்ததுகங்குற்போது. (௪௪)

கழிந்ததுகங்குற்போதுகழிதலுங்காசிவேந்தன்
மொழிந்தனன்விரைவினந்தமூரட்படையெழுகவென்னஞ்ச
செழுந்தடமுரசமெங்குமறைந்திடத்திசைகடோறும்
எழுந்தனதேருமாவுமியானையுஞ்சேனைதானும். (௫௫)

கரிபரியீட்டத்தோங்கணமணித்தேருந்தாரும்
தெரிவையர்குழாமுஞ்செம்பொற்சிவிகையுங்கவிகைதானும்
விரிபெருந்தூளியார்க்கவெண்கொடிப்படலமூடச்
சரிபெருங்கடல்கள்போல்வந்தரசனைசசார்ந்தவன்றே (௫௬)

வானவர்கோனும்வேதமாமுனிவோரும்வைவேற்
றானையுங்காசிவேந்துஞ்சத்தியகீர்த்திதானும்
ஆனையுந்தேருமாவுமடர்ந்தெழவயோத்திவேந்தன்
மாநகர்விட்டெழுந்தானமழையெனமுரசமார்த்த. (௫௭)

கானடையேருமன்னைக்காசியர்வேந்தன்கண்டு
தேனடையலங்கனமார்பதேர்மிசையேறகென்னத்
தானதுமறுத்தலோடுந்தபோதனரெல்லாம்வேண்ட
வானவரெடுத்துச்செம்பொனமணிநெடுந்தேரில்வைத்தார் (௫௮)

சந்திரமதியைக்கற்பின்றழலினைத்தீண்டவஞ்சி
அந்தரத்திமையோர்மாந்தரனைவருமகலநின்றார்
இந்திரனறவியெனனுமிளமுலைக்குதலைசெஞ்சொற்
சுந்தரிதிருக்கைபற்றிசசுடர்மணித்தேரில்வைத்தாள். (௫௯)

கண்ணிபாற்பட்டுழனறுகழனறவெங்களிறுங்கன்றும்
திண்ணியபிடியும்பண்டைப்பயிலிடஞ்சேர்தல்போலப்
புண்ணியவேந்துஞ்சேயும்பூவையுந்தேரிலேறி
மண்ணிலுள்ளோர்கள்வாழ்த்தமாநகர்விட்டகன்றார். (௬௦)

தோரணவாயில்பின்னுத்துழனியங்கழனிநண்ணிப்
பூரணவாவிநீங்கிப்பூம்பொழில்பலவுந்தீர்ந்து

காரணத்தமைச்சரோடுங்கடற்பெருஞ்சேனையோடும்
வாரணவாசியாற்றின்வண்டலின்வந்திறுத்தான். (௩௧)

அந்தமாநதியிற்றீர்த்தமாடியன்றங்குவைகி
மந்தராசலப்புபத்தான்மற்றைநா *ளேகிவாசச்
சந்தனுடவியும்வெற்புந்தடங்களுங்கடந்துமெல்ல
வந்தநாள்யமுனையாற்றினகரையினைவல்லைசார்ந்தான். (௩௨)

அந்நதிதீர்த்தமாடிபணிமணிதராளஞ்செம்பொன்
மின்னவிர்தாங்கக்கோதாவிரிதுறைத்தீர்த்தமாடிப்
பன்னதிகடந்துவெற்றிப்பகீரதன்கொணர்ந்தகங்கை
நன்னதிதனைவந்துநண்ணினன்விண்ணோரோடும். (௩௩)

வேலிருபுறமுமீண்டவெண்குடைமேனிழற்ற
நாலிருதிசையுந்தேருநாகமுமாவுஞ்செல்ல
மேலிருவிசும்பைத்தூளிமறைக்கவெண்கவரிக்கற்றை
காலிருமருங்குமார்க்கக்கங்கைமாநதியைக்கண்டான். (௩௪)

அருகுடந்தணைந்துதுள்ளிக்கனைத்தெழுந்தானுவன்பு
தருகுழக்கன்றைக்கண்டதாய்முலைசுரந்ததேபோல்
திருபனுமாதுஞ்சேயுநெடுநகர்நோக்கிமீண்டு
வருவதுகண்டுகங்கைமாநதிபெருகிற்றன்றே. (௩௫)

வரைபலவுருட்டிநீண்டமரம்பலபிடுங்கிவெள்ளை
நுரைபலசிதறியெங்கு † நூறையும்வராலும்பாய
திரைதிரைபதுமராகநித்திலங்கொழித்திரண்டு
கரையையுங்கடந்துகாந்தக்கடலெனவந்ததன்றே. (௩௬)

விரிகடலென்னவந்தவிமலையின்கரையினேறிச்
சொரிமலர்சசூழறோறுஞ்சுடர்மணிப்பாறைதோறும்

---

* ஏகில் வாசச் எனவும் பாடம்.

† நூறை - மலங்குமீன.

வரிமணல்வண்டரேறுமால்வரைச்சாரரேறுந்
தெரிவையர்குழாமுந்தேவர்சேனையுமடைந்தவன்றே. (௩௭)

சுரர்சிலசூழல்சார்ந்தார்தோகையரோடுமெண்வாழ்
நரர்சிலசூழல்சார்ந்தார்நான்மறைத்தவத்திற்பெற்ற
வரர்சிலசூழல்சார்ந்தார்மகரயாழ்வல்லவிச்சா
தரர்சிலசூழல்சார்ந்தார்தபனனுங்குடபாற்சார்ந்தான். (௩௮)

கரடவெங்களிறுமாவுங்காரகிலாரஞ்சாதி
சுரதருமத்திரோடுஞ்சேர்த்தனர்துங்கத்தெய்வப்
புரவிகள்பூண்டநேமிப்புட்பகத்தேருஞ்செம்பொன்
வரைபலநிரைத்தவென்னவட்கரைசெறிந்தவன்றே. (௩௯)

ஆதபமகற்றிவெய்யோனாழ்கடற்புகுந்தபின்னர்ப்
பாதகமுனியும்பாரிற்பாவமுமகன்றகாலை
பூதலவேந்தன்வந்தபுண்ணியம்பரந்ததேபோல்
சோதிமாமதியந்தோன்றித்தூநிலாவிரித்ததன்றே. (௪0)

மாற்கடமலையுந்தேரும்வாசியுமன்னர்தாமும்
வேற்கடற்படையுந்தோன்றவிரிந்தவெண்ணிலவினீட்டம்
நீற்கடனடுவிற்றோன்றுநிலமுமெண்டிசையும்விண்ணும்
பாற்கடலுகாந்தங்கோத்தபடியெனப்பரந்ததன்றே. (௪௧)

நல்லவர்மனத்தொடர்ச்சிநல்லவர்க்குற்றதேபோல்
பல்லவப்பொழிலுமாறும்பருமணற்பரப்பும்வெற்பும்
புல்லுமான்மரையுந்தோலுமேதியும்புள்ளுந்தூரத்
தெல்லவர்தமக்குந்தோன்றவெண்ணிலாவெறிந்ததிந்து. (௪௨)

நிரந்தரம்வயிரந்துப்புநித்திலம்பச்சைநீலம்
பரந்தசெம்மணியுமூர்தம்பகீரதியாற்றைநோக்கிச்
சிரந்தனைத்துளக்கிமேன்மேலணிமயிர்சிலிர்க்கவைவேற்
புரந்தரன்மகிழ்ச்சிகூர்ந்துபுலோமசைக்குரைப்பானானன். (௪௩)

கண்ணுதல்சடையின்வீழ்ந்தகங்கையின்கரையில்வந்து
நண்ணுதலுற்றவேகநாகமும்பூகக்காவும்
மண்ணுலகத்திற்றன்றமணிகளும்புள்ளுமாவும்
விண்ணுலகத்திலுண்டோமெல்லியல்விளம்புகென்றான். (௬௪)

மந்திரவாணோர்கோமானுரைத்திடமகிழ்ந்துநந்தம்
இந்திரபுரத்துமந்தோவிச்சிறப்பில்லையென்றாள்
சுந்தரியுடனேகூடித்துயின்றனன்மகவான்பின்னைச்
சந்திரனுதயமாறத்தரணிவந்துதயஞ்செய்தான். (௬௫)

மாமதியொளிமழுங்கிவயங்கிருள்விடிந்தகாலை
போமதினினைவேயாகிப்புலரியினெழுந்திருந்து
தாமதியாமலேகித்தடங்களும்வெற்புநீங்கிக்
கோமதியாற்றின்வண்டற்குறைநிடைச்சென்றிருந்தார். (௬௬)

வள்ளலைமுனிவன்கூட்டிவருகின்றவாறுகேட்டுப்
பள்ளமுற்றும்பர்வெள்ளம்பாய்கின்றபரிசேபோல
உளமுமகிழரோமஞ்சிலிர்ப்புறவூரிற்சேனை
வெள்ளமுமரசர்தாமும்வியந்தெதிர்கொண்டாரன்றே (௬௭)

அயிலெடும்படைதுறந்தகரத்தினரயோத்திமூதார்
எயில்கடந்தேகிமன்னைக்கண்டனரிறைஞ்சிவீழ்ந்தார்
மயிர்பொடிப்புறமனங்கண்மகிழ்ந்திடமறலிகொண்ட
உயிர்வரப்படர்துறந்தவுடலமேயொத்தாரன்றே. (௬௮)

ஆரணமுழங்கயோத்தியணிபெருஞ்சேனையோடும்
வாரணவாசிவேந்தன்படையொடும்வள்ளலேகித்
தோரணவாயினண்ணிச்சுடர்மணித்தேரிழிந்து
பூரணகும்பமன்னுமண்டபம்பொலியப்புக்கான். (௬௯)

பன்முடிவேந்தர்தாழ்ந்துபணியப்பொற்றவிசினேற்றிச்
சொன்முடிவற்றசீர்மைத்தாபதர்சூழ்ந்துவாழ்த்த

னென்முடிசாயப்பாயுநீர்வயனுடன்றன்னைப்
பொன்முடிசூட்டிவாழ்த்திப்புரந்தான்விசும்பிற்போனான். (எ0)

காருளசோலைசூழுங்கௌசிகன்றமைநன்கே
நீருளவளவுநீரேழ்நிலமுளவளவுமுன்றன்
பேருளதொருகாலத்தும்பிழைப்பிலதுனக்குநேர்வே
றுருளரென்னுவாழ்த்தியருந்தவமுனிவர்போனார். (எக)

மைந்தனைநின்னைமாதையித்தனைவருத்தங்கண்டேம்
நிந்தனைசிறிதுநின்பாற்கண்டிலேநீதிவேதே
எந்தமாதவத்திற்பாதியாவருங்காணவின்றே
தந்தனமுனக்கேயென்றுகௌசிகன்றரையார்த்தான். (எஉ)

உற்றறிந்தளவிட்டோராதும்மையானிகழ்ந்துபேசப்
பெற்றவைபொறுத்திரென்னுவசிட்டனுக்கினியபேசிக்
கொற்றவன்றன்னையாற்றிக்குமானைமயிலைத்தேற்றி
மற்றுமந்திரியைவாழ்த்திக்கௌசிகன்வனத்திறபோனான். (எங)

தேவருமுனிவர்தாமுந்திண்புவித்தலைவர்தாமும
யாவருமகன்றபின்னரிணைமணிக்கவரிவீச
மூவருமனையநீர்மைமுனிவனுங்காசிவேந்தும்
ஏவருநிகரிலானுமினிதுரைத்துடனிருந்தார். (எச)

இருந்தபின்காசிவேந்தன்வசிட்டனையிறைஞ்சியேத்தி
அருந்தவர்தம்பாலையவறமலான்மறமுமுணடோ
வருந்திடவிவர்பாலிந்தவன்கண்மைசெய்யவுள்ளம்
பொருந்தியவாறேதென்னவசிட்டனும்புகலலுற்றான். (எரு)

நிலத்தியல்பற்றேகொண்மூநீரியல்பதனுற்றங்கள்
குலத்தியல்பெவர்க்குமன்னுவாழினுங்கெடினுங்குன்றா
தலத்தரசகன்றுநீங்கித்தவத்தனுனலுந்தொல்லை
நலத்ததுபோமோவென்றுநரபதிக்கினிதுரைத்தான். (எசு)

அன்னதுகேட்டவண்ணலருந்தவத்தோனை நோக்கி
மன்னவனுனவாறுமாமுனியானவாறும்
இன்னவாறின்னவாறென்றெனக்கருள்செய்வாயென்னப்
பொன்னணிமுடியாய்கேளென்றம்முனிபுகலலுற்றான். (எஎ)

அரிச்சந்திரசரித்திரம்

ஒன்பதாவது

மீட்சிக்காண்டம்

முற்றிற்று.

ஆக பாடல்கள் ககஅக.

---

உ

தெய்வமேதுணை

பத்தாவது

# உத்தரகாண்டம்.



திசைமுழுதுங்கவித்தகுடைசெங்கோல்வேந்த
திசைமுகத்தோன்வழிவந்தகுசனென்போற்கு
வசையறுசீர்க்குசன்குசநாபன்வதூர்த்தன்
வசுவென்னும்பெயருடையமக்கணல்வர்
குசனுக்குக்கிரிவிரசமென்னுநாடுங்
குசநாபற்கரியகௌசாம்பிநாடும்
வசுவுக்குவசுமதியும்வதூர்த்தனுக்கு
வாரணமென்வளநாடும்வழங்கினனே. (க)

அங்கவரிற்கௌசாம்பிக்குசநாபற்கே
 யைம்பதிற்றிரட்டியெனுமடைவிற்றோன்று
மங்கையர்தாமொருகாவிற்புகுந்துநாளும்
 வண்டலிழைத்திடுவராங்கேவாயுவெய்தித்
திங்களுதற்றேமொழியீரென்றனைச்
 சீரவெனைத்தழுவிநலஞ்செய்மினென்ன
எங்கள்பிதாவறியவெவமைவதுவைகூட்டி
 லிணங்குவோமல்லதிதற்கிசையேமென்றார். (௨)

மறுத்துமறத்துரைத்திடவும்பொருந்திலாத
 வல்லியரைமுதுகொடியவாயுமோதி
முறித்துநிலத்திடைவீழ்த்திப்போனபின்னா
 மொய்குழலார்தளர்ந்துமனைமுன்றிலுற்றுஞ்
செறுத்தவரைக்கண்டிதுவேதென்னலோடுந்
 திருவனையாரழுதழுதுசெப்பத்தாதை
பிறித்துரையாதுள்ளோடுக்கிச்சூளிமைந்தன்
 பிரமதத்தன்றனக்களித்தான்பேதைமாரை. (௩)

சூளிமகன்பிரமதத்தன்றன்னைச்சேர்ந்து
 துயர்நீங்கிச்சுகமோங்கிப்பெருவாழ்வுற்றார்
மீளியெழிற்குசனுபன்பின்புசெய்த
 வேள்விதனிற்காதியெனும்வீரன்றோன்றி
ஆளிதிகழ்தவிசேறிமகுடஞ்சூடி
 யரசாண்டுசிலகாலஞ்சென்றபின்னர்
காளியைப்போற்கவுசிகையையீன்றபின்பு
 கௌசிகனைப்பெற்றெடுத்தக்காலந்தன்னில் (௪)

இருசிகனக்கௌசிகையைப்புணர்ந்துசின்னா
 ளின்பநுகர்ந்திருவர்தமையீன்றபின்பு
பிரமனுலகணைந்துதவம்புரிந்துமீளப்
 பிரிவுநினைந்தவள்புலம்பமுனிவன்சீறி

வருபுனலாருகவெனசசபித்தலோடு
மானதவாவியில்வீழ்ந்தசரையுமேவாடே
அருகணைந்துபிறிதிழிகாமதியேயாளு
மவனிலேயிதிவனுலகம்புரக்குநாளில். (௫)

மைந்தரொருநூறுவரைப்பெற்றுவெற்றி
வடிவாளுமவரிசிலையுங்கவிறமாவும்
இந்தவுலகத்திவாபோல்வல்லாரில்லை
யென்னவளாத்தனைவரோடிருகருங்காலைத்
தந்திரமாரபெரும்படையுந்தேருமாவுந்
தந்திகளுநாளிகளுமுந்திமீண்ட
மந்திரிகடங்களொடுமகககளோடு
மானமிக்கட்டையாடவிவனத்திற்புக்கான். (௬)

கரிமுழும்புலியினமும்வெருளாவோடக்
கலைகடமையுழைமடியக்கணைகடேவி
பரப்பிவனமடங்கவழியநூறி
இருடிகடஞ்சூழலெலாம்பாழாகசசெய்
தரியினமுமகுறுமுயலுமகலாவண்ண
மயில்வேலுங்கணிலுமெறிந்தனைத்துங்கொன்று
தெரிபடுசெந்தசைபெருப்பித்தின்றுதங்கிச்
சிலநாள்கானகத்துறைந்துதிரியுநாளில். (௭)

ஒருஞான்றுபுலரிதனிலெழுந்துபோகி
யுயர்வரைகடோறுமுழன்றொன்றுமின்றி
வருநாளிலவவிடத்தோர்மானின்பின்போய்
வாய்புலர்ந்துநாவுலர்ந்துகாலுமோய்ந்து
பெருநாணமும்பசியுந்தவிப்புமாகிப்
பின்பிடித்தவிலங்கைவிட்டுத்துன்பமெய்தித்
தருநீழறன்னிலியானினிதுவைகித்
தவம்புரியுமலைசசாரறன்னிற்சார்ந்தான். (௮)

யானவனைக்கணடிரக்கிநீயாரென்ன
வடிபணிந்துகௌசிகமன்னவன்யானிந்தக்
கானகத்தின்மான்வேட்டைபோந்துமற்றோர்
கடுமானின்பின்றொடிக்கால்கள்சோர்ந்து
தானையும்யானும்பசியுந்தவிப்புமாகித்
தளர்ந்தனந்தசரணடைந்தேனென்னக்காம
தேனுவைவாவென்றழைத்தியானமுதுநல்கித்
தீராதபசிதாகந்தீர்த்தபின்னர். (௯)

அப்பசிதீர்ந்தமைசகசொரடுவிரைவின்வந்தென்
னருகணைந்துமாமுனிமேயயடியனேற்கின்
றப்பசுவைத்தரல்வேண்டுமென்னக்கேட்க
விதற்குரியனியானல்லேனென்னலோடும்
அப்பசுவைக்கரிபரித்தேர்சேனையோடு
மடங்ககவர்ந்தெறிபாசத்தாலேவீசத்
தப்பறவேபூண்டகயிற்றெறிர்போயந்தத்
தானையெலாமடித்துவிழச்சாடிற்றவ்வான். (௧௦)

வேறு.

ஆலாலமெழுந்ததெனசினமுற்
றணியூடுபுகுந்துதுகைத்திடவே
வேலாளரும்வெங்கரிவித்தகரும்
வில்லாளரும்வெம்பரிவீரர்களும்
காலான்மிதிபட்டவர்கோடியர்கட்
கனலாலெரிபட்டவர்கோடியர்நீள்
வாலாலடிபட்டவர்கோடியர்வெண்
மருப்பால்வதையுண்டவர்கோடியரே. (௧௧)

கொழுவோடுதிரத்தசைமீரணிணங்
குடர்மூளைசரிந்துகுழைந்திடுவார்

மழுவாள்சிலைதண்டுகேடைத்தலைநோல்
வலயங்கரவாளமொடிந்திடுவார்
விழுவார்கரைவாருருள்வார்புரள்வார்
விதியேசதியாகவிளைத்தனையென்
றழுவார்தகவல்லதுசெய்தநமக்
கழிவேயெனவோடியகன்றனரே. (கஉ)

இவ்வாறுவெருட்டிவதைத்தெனைபுற்
றினியேதுசெயக்கடவேனடியேன்
அவ்வாறுரையென்னவியாளினிநீ
யகல்வான்மிசையென்னவுனைத்தளிவிட்
டெவ்வாறகல்வேனிவணிற்பனெனா
வினிநீகடிதேகிவணிற்றலுனக
கொவ்வாதெனயானுரைசெய்திடவே
யுயர்வானிடைமேதனுவுமுறறதுவே (கஙு)

அமராவதியிற்பசுவெய்திடவே
யரசன்குலமைந்தர்களூறறுவரும்
எமதாவிகொளக்கருதிச்சினமுற்
றிடிபோலமுழக்கமெழக்குமுறிச
சமராடவெருடஙகிநெடும்பொழுதிற்
சரமாரிபொழிந்திடலும்முடலம்
கமராகவெடித்துவிழித்தவிழிக்
கனலாலவர்வெக்துகழிந்தனரே. (கச)

சண்டத்தழலாலிவர்மைந்தர்படத்
தனுவஙகையெடுதெதிர்வந்துகடுங்
கொண்டற்சரமாரிபொழிந்திடவே
கொடியோனிவனுக்கெதிராவெனது
தண்டத்தினைநட்டனன்விட்டபெருஞ்
சரமாரிமழுக்கதைசக்கரம்வேல்

விண்டற்பவருமபொடியாயுதிர
 விசையானசையோடுவிழுங்கினதால். (௧௫)

விடுகின்றகொடும்படையத்தனையும்
 விறல்கொண்டுயர்தண்டம்விழுங்கிடவே
அடுகின்றதெமக்கெளிதல்லவென
 வமராமகவாசையடைந்தறவே
சுடுகினறமனத்துடனூரணுகித்
 துறவோராவலியோரிறையோரிலெனுக்
கொடுவெங்தொழிலொடுதுறந்தகலக்
 குணபாலனுகித்தவமுற்றனனே. (௧௬)

இவனுற்றதவத்தையழிக்கவினைத்
 திமையோர்க்கிறைவிட்டதிலோத்தமையோ
டவனததவம்விட்டுநலத்திடைபுக்
 கழிபட்டுடனேயறிவுற்றவளைப்
புவனததின்மனித்தர்பிறப்பினினீ
 போவென்றுசபித்தகறென்றிசைபோய்ச்
சிவனைக்கருதித்தவமுற்றிடவே
 சிராவரமீசனளித்தனனே. (௧௭)

அந்நாளிலெனைத்திரிசங்கருகுற்
 றங்கதொடுவிண்புகல்வேண்டுமெனுச்
சொன்னுன்முடியாதெனயான்மொழியத்
 துறவோர்பிறராலுறுவேனெனலும்
இன்னுதுரைசெய்தனைநீபுலையா
 கெனவேபுலையாயெழில்கெட்டவமே
தன்னுடனணுகித்தமர்ச்சீசியெனத்
 தள்ளத்தளமெள்ளநடந்தனனே. (௧௮)

அன்றேயெனைவிட்டிவனைத்தரிசித்
தங்கத்தொடுவிண்புகல்வேண்டுமெனக்
கென்றேதனுளத்ததுசொல்லவவ
னென்றேடுதொடுத்தமறத்தொழிலால
குன்றேயும்விமானமழைத்ததன்மேற்
கோவேறெனவேறிநடந்திடவே
சென்றேயமராவதிசேருதலுந்
தேவாதிபர்கண்டுசினந்தனரே. (௧௯)

புலையாசுரர்நாடுபுகேலெனவே
புறமூக்கினர்வானவர்புட்பகமோ
டலையாவிழுவான்முனிகௌசிகனுக
கபயம்மெனவீழ்வதறிந்தெதிர்போய்
நிலையானவிமானம்விழாதுநிறீஇ
நெடுவெஞ்சினமாய்விழிநின்றகனல்
பலபாலுமெரிந்தனபல்லுயிரும்
படர்தீயினில்வெந்துபதைத்தனவால். (௨௦)

இவ்வண்டமனைத்துமெரித்துலக
மீரேழுடனிந்திரனும்மயனும்
தெய்வங்களும்வேறுபடைப்பனெனத்
தேவாதிபன்மால்சிவனோடயன்வந்
தெவ்வண்ணம்விளைந்திடுமென்னவிரை
தெழுகின்றசினந்தணிவித்துலகம்
உய்வண்ணமுறத்திரிசங்குதனக்
குடுவின்பதநல்கவுரைத்தனரே. (௨௧)

அத்தன்மையனம்முனியென்னுடனே
யந்நாளிலெடுத்தமறத்தொழிலால்

எத்தன்மையிழைத்தனனன்னவெலா
மென்றேர்பலித்திலவாதலினல்
இத்தன்மையிழைத்தனென் மன்னனுடை
னிதனுலும்வெலற்கரிதாயினனிப்
பித்தனைசெயலித்தகவென்றறவோர்
பெருமானிறையோர்களைபேசினனே. (உஉ)

இந்நீர்மைவசிட்டனுரைத்திடலு
மெழில்வாரணவாசியர்கோன்முனிவோர்
தந்நீர்மையைநீயலநாரறிவார்
தமைஞானமிலற்கறியத்தகுமோ
நின்னீர்மையுணர்ந்தவரேயறிவார
நீயேயவர்நீர்மைசினைந்துணர்வாய்
எந்நீர்மையுனக்கரிதென்னவெழூந்
திருபாதயிறைஞ்சியிருந்தனனே. (உ௩)

அவ்வாரணகரத்தொருதிங்களிருந்
தருண்மாமுனியைத்தொழுதேவிடைகொண்
டெவ்வாறுமறந்துதரிப்பமெனு
விறையும்மகனும்பிறரும்மெலியச
செவ்வாரணவாசியர்கோனவரைத்
திருமார்புறவேதழுவிப்பரியுங்
கைவாரணமும்படையும்மிடையக்
காசித்திருநாடுபுகுந்தனனே. (உச)

கடிமீதுறுகார்வளமல்குதிருக்
காசித்திருநாடனுமேகியபின்
முடிமீதொளிபொங்கிடவெண்குடையு
முத்தின்குடையுங்கொடியும்மிடையப்

படிமீதினின்மன்னவர்வந்துதொழப்
பலபாவையர்பாணர்பரிந்திடவே
அடிமீதுவணங்கவயோத்தியர்கோ
னரியாசனமீதிலிருந்தனனே. (உ௯)

வே று.

மன்னர்வாழியமாமறைவாழிய
செந்நெல்மன்னுகசெந்தமிழோங்குக
அன்னதானவரிச்சந்திரன்கதை
தன்னைக்கேட்டவர்வாழ்வுதழைகவே. (உ௰)

அரிச்சந்திரசரித்திரம்

பத்தாவது

உத்தரகாண்டம்

முற்றுப்பெற்றது.

ஆ-டு பாடல்கள் கஉகரு.

---

அரிச்சந்திரசரித்திரம் - முற்றிற்று.

---

